

ஓம் கம் கணபதயே நமஃ

ஓம் ஹ்ரீம் அன்னபூர்ணையை நமஃ

ஸ்ரீ நந்தி குரவே நமஃ

ஸ்ரீஸாது ஸத்குருப்யோ நமஃ

# யோக சிகோப நிஷத்

(பொழிப்புரையுடன் கூடியது)

எழுதியவர் :

பழனி ஸ்ரீ ஸாது மாமுனிவரின் சீடர்

திரிமூர்த்தி சுவாமி



இப் புத்தகம்

ஸரஸ்வதி வளாக ஆஸ்ரமத்தில்

ஸ்ரீ ஸாது மாமுனிவரின் ஞாபகார்த்தமாக

வெளியீடப் பெற்றது



மாற்றுயர்ந்த பசும்பொன்னால் வகுத்தாற் போல

வயங்குதிரு மேனியிற்கல் லாடை யுண்டே

கீற்றுமதி போலநுதல் வெண்ணீ றுண்டே

கிளர்நுதற்கண் ணெனவொளிர்சிந் தூரமுண்டே

ஊற்றிருந்து கருணைபொழி விழிக ளுண்டே

உளங்கவரு முக்கனையுண் முறுவ லுண்டே

எற்றவருக் கில்லையெனு மீகை யுண்டே

எங்கள் குரு ஸாதுமெனு மெதிராசர்க்கே.

சி. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

ஓம்

" ஹ்ரீம் பராசக்த்யை நம: "

# முன்னுரை

---

அறிவின்மிக்க அறவோர்களே!

அரிதினும் அரிதாகப்பெற்ற இம்மனிதயாக்கை அழிந்தொழியு முன்னரே இவ்வுடம்பாலாய பயனை விரைவிற் பெற்று இன்புறவேண்டியது மக்கள் கடமையேயாகும். அத்தகைய பேரின்பத்தை அடையவொட்டாது தடுத்து நிற்பது மும்மலக் கட்டேயாகும். அம்மலமாகிய தடையை நீக்கி முத்தியின்பத்தைத் தருவது யோகப் பயிற்சியேயாகும். அந்த யோகப் பயிற்சியையும் ஈஸ்வரபக்தி குருபக்தியுடன் பயின்றவர்களே அகத் தூய்மை பெற்று முத்தி யின்பத்தை அடைவது நிச்சயமெனச் சிவபெருமானால் யோகசிகோபநிஷத்தில் தெளிவாகக் கூறப்பட்டுளது.

யோகசிகோபநிஷத்து-யோகப் பயிற்சியால் மலவிக்ஷேப ஆவரணங்களை நீக்கி முடிவான ஞானத்தை அடைவிப்பதாலும், யோகோபநிடதம் எல்லாவற்றினுள்ளும் கூறியுள்ள முடிந்த பயன்களைத் திரட்டிக் கூறுவதாலும், இதற்கு யோகசிகை என்றும், மிகவும் ஆன்மாவின் சமீபத்தில் அடைவித்து அவித்தையோடு அதன் காரியங்களை நாசமுறச் செய்வதால் உபநிஷத்து என்றும் பெயராயிற்று. இந்த உபநிடதம் கிருஷ்ண யஜுர்வேதத்தில் உள்ளதென முக்திகோபநிடதத்தில் கூறப்பட்டுளது.

அன்னபூர்ணோப நிடதம், தியானபிந்து உபநிடதம், யோகசிகோபநிடதம் முதலிய உபநிடதங்களை நமது குரு நாதரின் ஆணையின்படி நன்முகக் கற்றுத் தமிழில் பொழிப் புரையாக எழுதி முடித்தனன். இவற்றில் ஸ்ரீ அன்ன பூர்ணோபநிடதத்தை நம் குருநாதரின் ஆணையின்படி அச் சிட்டுதவியவர்கள் பொள்ளாச்சி ஸ்ரீமதி தி. வெ. உண்ணுமலை யம்மையார் அவர்களாவார்கள். இப்புத்தகம் நமது சுவாமிகள் ஒளியுருவெய்திய முதலாண்டுக் குருபூஜை வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாவது தியானபிந்து உப நிடதம் அச்சிடப் பொருளுதவியவர்கள் கோவை கங்கவார் சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஸாது காளிதாஸ சுவாமிகள் ஆவார்கள். இந்த தியானபிந்து உபநிடதம் ஏழாவது ஆண்டு குருபூஜை வெளியீடாக வெளியிடப் பட்டுள்ளது.

அதற்கடுத்த யோகசிகோபநிடதம் அச்சிடப் பொரு ளுதவி செய்ய முன்வந்தவர்கள் நமது குருநாதரின் சிஷ்யர் களில் ஒருவரும் ஸரஸ்வதி வளாக ஆஸிரமத்தை ஏற்படுத்தி அதில் சுவாமிகளுடைய சங்கற்பத்திற்கேற்றவாறு நிறையப் பொருட்செலவு செய்தவரும் சுவாமிகளைக்கொண்டு ஆச்சாள் புரத்திலும், சிதம்பரத்திலும், ஸரஸ்வதி வளாகத்திலும், பல ஆலயங்களை நிர்மாணஞ் செய்தும், அவற்றில் அந்தந்த மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்தும், பல யாகங்களைச் செய் தும், கும்பாபிஷேகம் செய்தவரும், இவற்றிற்கெல்லாம் பொருளைக் கைமாறு கருதாது மாரிபோல் வழங்கியவரும், முப்பது ஆண்டுகளுக்கு முன் சுவாமிகளால் தாபித்த யாக குண்டத்திற்காக நாள்தோறும் முறைப்படி ஆகுதி நடப்ப தற்கு சாதுக்களையே ஏற்படுத்தி அதற்குக் குறையாது பொருளுதவி செய்து வருபவரும், சுவாமிகள் மறைந்தபின்

பழனியில் குருபூஜைக்கும், நித்திய சமாதி நைவேத்திய மகேஸ்வர பூஜைக்கும், குறையாது பொருளுதவி செய்து வருபவருமான பெருநிலக்கிழார் T. வெங்கடேஸ்வரம் பிள்ளையவர்கள் ஆவார்கள். இத்தகைய பெருந்தகையாளரின் பொருளுதவியால் இந்த யோகசிகோபநிடதம் ஸரஸ்வதிவளாக ஆசிரமத்தின் வெளியீடாக வெளிவருகின்றது.

இவ்வுரை .பல பெரியோர்களால் பார்வையிடப் பெற்றிருப்பினும் எனதறியாமையால் பெரும்பாலும் பிழைகள் இருக்கக்கூடும். அவற்றைக் கல்வியிலும் அனுபவத்திலும் ஆற்றலுள்ள மகான்கள் கண்ணுறுவார்களாயின் அறிவிப்பார்களாக. அவற்றைப் பணிவுடன் ஏற்று மறுபதிப்பில் வெளியிட விரும்பியுள்ளேன்.

ஸ்ரீ குருநாதரின் ஆணையின்படி நித்திய ஆன்மார்த்த பூஜையையும் தமது கடமையையும் வழுவாது செய்து வருகின்ற உயர்திருவாளர் பிள்ளையவர்களும், அவருடைய குடும்பத்தவர்களும், என்றும் உடல் நலத்தோடு செல்வமணங் கமழப்பெற்று மனசாந்தியுற்று நீண்டவாயுளுடன் வாழ்வார்களாக, எனத் திருவருட் சக்தியாகிய ஸ்ரீ அன்னபூரணியையும் ஸ்ரீ குருநாதரையும் பிரார்த்திக்கின்றேன்.

தமது காலத்தின் அருமையைப் பாராட்டாது இவ்வுரையை மூலத்தோடு ஒத்திட்டுப் பார்த்து உதவியவர்கள் - எனது கல்விஞானத்திற்குக் காரணமாயிருந்தவரும், இப்பொழுது சென்னை வியாஸர்பாடி கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் மடத்திற்கு மடாதிபதியாக உள்ளவரும், ஆனந்தாசிரம சங்கமூர்த்தியாக வுள்ளவருமான ஸ்ரீ முக்தானந்த சுவாமிகளும், அவருடன் சகபாடியாகப் படித்த தர்க்க

வேதாந்த பாஸ்கரராக விளங்கிய ஸ்ரீ நீலகண்ட சுவாமிகளும், இவ்விருவர்களுடனும் சகபாடியாகப் படித்து விளங்கும், தமிழ்ச்சங்கப் புலவரும் திருவையாறு அறுபத்துமூவர் மடத்திற்கு மடாதிபதியாக வுள்ளவருமான சித. ஸ்ரீ நாராயண சுவாமிகளும் ஆவார்கள். இத்தகைய பேருதவி செய்த தத்துவப் பெரியார்களுக்கு என்றும் மறவாத நன்றியுடையவனாகக் கடமைப்பட்டுள்ளேன்.

என்றும் திருவருள் துணைபுரிவதாக.

குருவருள் முன்னிற்பதாக.

ஓம் சாந்தி.

இப்படி,

**திரிமூர்த்தி சுவாமி.**

திருவையாறு அறுபத்து மூவர் மடம்

பண்டித சித. ஸ்ரீநாராயணசுவாமியவர்கள்

இயற்றியது

ஐயன் பழனி யருட்சாது மாமுனியாம்
மெய்யன் பதமலரை மேவிநிதம்—துய்ய
வழியொழுகு நன்மை மருவுதிரி மூர்த்தி
யொழிவிலின்ப முற்று னுவந்து.

இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை யென்றபடி
மன்பதைக ளெல்லா மருவிநிற்ப—இன்பருளும்
யோகசிகை வேதாந்தத் துட்பொருளை நற்றமிழ்நா
டோகை கொளக் கண்ட வுரை.

கண்டுநெறுஞ் சான்றோர் களித்தார் பிறர்தளைகள்
விண்டொழிய நாளும் விழித்துறங்கிப்—பண்டை நிலை
மேவ விரைகின்றார் மெய்ப்பொருளைக் காட்டுமிது
தாவலின்றி வாழ்க தழைத்து.

ஸ்ரீ தத்தாத்ரேயர் மரபில் வந்த
ஸ்ரீ நிஜானந்த பிரஹ்மேந்திர ஸரஸ்வதி அவதூத சுவாமிகள்
இயற்றியது

துறவு நிலைபிறழாத் தூய்மையும் வாய்மை
அறமு முபநிடதத் தாழ்ந்த—அறிவுசுகம்
தன்போ லுலகமுந் தான்பெற நற்றமிழில்
இன்னுரை செய்தா ரிசைந்து.

பொன்பூசிர் போதம் புகழும் பொருளைவையும்
தன்பூர்ண சந்நிதியிற் றன்றேன் றி—மின்போல
உண்டா மிடத்தே யொடுங்குமே யுண்மைநிலை
கண்டான் திரிமூர்த்தி காண்.

யோகசிகை யென்னு முபநிடத யூகத்தை
மோகமற யார்க்கும் மொழிந்தனன்—யோகவனு
பூதி பெறநோக்கும் பூமான்க ளெல்லோரும்
ஓதிச் சுகமெய்து வோம்.

உடுமலைக் குறிஞ்சி
ஸ்ரீ குமாரானந்த ஸரஸ்வதியவர்கள்
இயற்றியது.

யோகசிகை யின்பொருளை யுட்கொண் டனைவோரும்
ஏகசிவோ கம்மென் றிருக்கவே—மோகமறும்
சாதுகுரு தாளடைந்த சாதுதிரி மூர்த்திமுனி
ஓதினன் நல்ல வுரை.

ஸ்ரீ சுவாமி முக்தானந்தா சங்கமூர்த்தி அவர்கள்

# மதிப்புரை

"யோகசிகோபநிஷத்" என்ற இந்த நூல், கிருஷ்ண யசுர் வேதத்தின் உள்ளீடாயமைந்தது. மறையோனாகிய மாணக்கன் வினவுவதாகவும் இறையோனாகிய ஆசிரியன் அருளுவதாகவும், அமைந்துள்ளது.

வீட்டையும் வேட்கையுள்ளார்க்கு வகுத்துள்ள படிகள் நான்கு. அவற்றுள், மூன்றாவது படியின் வழியும், முறையும் விளக்கக் கூறுதலேயன்றி அதனது முடிபாகிய பயனையும் மிகத் தெளிவாய்க் கூறுதலால் இஃது இப்பெயர் பெற்றது.

"வீடு" என்பது, சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமையது; என்றும், மாற்றம் மனங்கழிய நிற்பது என்றும், கூறப்படுவதன்றியும், "அங்குக் கண் செல்லாது" அதனைக் காதுங் கேளாது, என்றமையாலும்.

மற்றும் எது, காதுக்குக் காதோ? மனதுக்கு மனதோ? வாக்குக்கு வாக்கோ? அதுவே பிராணனுக்குப் பிராணனும், கண்ணுக்குக் கண்ணுமாகுமென, நூல்களாற் கேட்கப்படுகின்றமையாலும்; உடம்பு முதலாகிய பொய்த் தோற்றங்களும், யான், எனது, என்றுள்ள அவற்றின் பற்றுக்களும் அவற்றிற்கு முன்னிலையான வாசனைகளும், மெய்ப்பொருட் காட்சியால் தோன்றாதனவாய்ப் போனபின்; மெய்ப்பொருளாகிய நான்மட்டுமாக இருக்கின்றேன் என்ற நிலை நிலவும்.

அந்தத் தனி நிலையும் கழன்ற நிலையே வீடெனப் புகழப் படுவதும் பெரியோர்களின் அனுபவமாயதும் ஆகும். இந்த நிலைதான் உள்ள நிலை' இதனை அநுபவத்திற் பெறுவதே மக்கட் பிறப்பின் உரிமையாகும்.

இந்த நிலையைப் பெற்றுய்ய ஊக்கங் கொள்வோரும் உரிமை யுடையோரும் மக்களே யாவர். இதனையன்றி மக்க ளுயிர்க்குப் பிறப் பிறப்பாகிய அல்லலினின்றும் ஆறுதல் அளிக்கும் நிலை, வேறில்லை யென்பது நூல்களாலும், பெரி யோர்களாலும், துணிந்த முடிபே யாகும். இத்தகைய உயர் நிலையை உறுதற்கு, பெரியோர்கள் மக்களின் மனப் பண்பாட் டிற் கேற்றவாறு நான்கு வகையாக படிகள் வகுத்துள்ளார் கள்.

1 அவற்றுள். முதலாவதான கர்மமாவது ; ஆலயந் தொழுதல், அலகிடுதல், மெழுகுதல், நீராட்டல், மலர் கொய்தல், மாலை புனைதல், அணிதல், ஆராதித்தல் முதலாகப் பலவகைப்படும். அஃதும் நான் செய்தேன் என்பதும், நீ எனக்கு இது செய்தல் வேண்டும் என்பதுமாய வேண்டு கோளின்றி உளங்கனிந்து இறைவா இனி பிறவி வேண்டேன் என்பதொன்றையே கருத்துட்கொண்டு தொண்டாற்றி நிற்றலேயாம்.

2. "பக்தி" யென்பது உழுவலன்பு ; இந்த அன்பை அடிப்படையாய்க் கொண்டு நிற்கின்ற உடம்புதான் உயிரிருக் கின்ற உடம்பாகும். இஃது இன்றேல் எலும்பைத் தோல் மூடிய உடம்பென் றிகழப்படுவதாகும். உள்ளுறுப்பாகிய அன்பில்லாதவருக்கு மற்றைய கண் முதலாகிய உறுப்புக்கள் யாவும் என்ன பயனைத்தாவல்லனவாம் என்று, பொறிகட்கு

பயனின்மை கூறினமையால் அன்பிலா உடம்பு இகழப் பட்டமை காண்பாம். ஆதலால் இறைவனை அகத்துறுப் பாகிய அன்பினால் எல்லாம் வல்லவனாக, எல்லாமாயுள்ளவனாக, உளங்கொண்டு, மெய்யரும்பி, விதிர்விதிர்த்து, கைகளைத் தலைமேற் கூப்பி, கண்ணீர் ததும்பி, பொய் தவிர்ந்த உள்ளத்துடன் அவனது பெருமையையும், தனக்கு இம்மனித உடம்பைத் தந்துள்ள அருமையையும் போற்றி நிற்பதுவே யாகும்.

3. இனி மூன்றாவது படியாகிய யோகமாவது; உயிர்ப்பைத் தன்வயப்படுத்தி ஒரு முனைச் செலுத்தி நிறுத்துவதே யாகும். இது தூய்மையும் வலிமையுமுள்ள உணவுகளை, ஒரு வேளை அளவோடுண்டலும், மிக அளவோடுறங்கலும், உரக்கப் பேசாமையும், மிகுந்த நடை கொள்ளாமையும், முதலிய கட்டுப்பாடுகளோடு, தூய்மையானதும் மக்கள் நடமாட்டங் குறைந்ததுமான தூய விடத்தில், மிகுந்த உயரமும், மிகத் தாழ்வு மில்லாத இருக்கை மேல், பத்ம, சித்த, சுகாசனங்களில் அமர்ந்து, இடைகலையில் பூரித்தும், பிங்கலையில் ரேசித்தும், முன்னும் பின்னுமாகக் கும்பித்தும் உயிர்ப்பின் இயல்பாம் நடைக்கையை கட்டுக் குட்படுத்தி, இதன் கட்டுப்பாட்டால் மனவொடுக்கத்தைத் தேடிக்கொண்டு, மெய்ப்பொருள் ஞானத்தையும் பெறுவதே யாகும். இந்த வித்தையை, ஒருவன் நன்கு யோகங்கைவரப்பெற்ற, தக்க ஆசிரியரை யடைந்து, ஐயமறக் கேட்டு, அவரது முன்னிலையிலேயே இருந்து பயிலுதல் வேண்டும்.

இத்தகைய யோகத்தின் முடிபாகிய முக்கியத்தை இந்த யோகசிகோப நிஷத் தென்ற அரிய நூல் மிகத் தெளிவாகக் கூறுகின்றமையால், வீட்டையும் வேட்கை

யுள்ளாரியாவரும் இதனை ஐயமகலக்கற்றுத் தெளிந்து, இதன் வண்ணம் நின்று பிறப்பினின்றும் விடுபடுதற் கேதுவாகிய ஞானத்தைப் பெற்றுய்வார்களாக.

4. ஞானம் என்ற நான்காவது படியாவது. "நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு, நிலா, பகலோன், புலனு யமைந்தனோடு எண் வகையாய்ப் புணர்ந்து நின்றானாகிய இறைவன், உலகேழெனத், திசைபத் தெனத், தான் ஒருவனுமே பலவாகி நின்றமையை ஞானாசிரியரிடம் கேட்டு உள்ளவாறுணர்ந்து, இந்நிலையே நிற்றல் வேண்டும், இத் தகைய பரந்த நிலையே தனது நிலையென்றுணர்ந்ததுமாகும்.

வீடென்பது யாண்டும் பரந்து விரிந்து ஒன்றாயுள்ள தனிநிலையே ஆகும். அந்நிலையே தன்னிலையென்று உணர்ந்து, அவ்வாறுணரும் நிலையுங் கழன்று நிற்கும் தனி நிலையே ஆகும். இதுவே "வீடு" விட்டது வீடு.

இப்படிப்பட்ட வீடு கூடுவதற்கு சிறந்த மூன்றாவது படியாகி யோகத்தின் முடிபை உணர்த்துவதாகிய இந்த நூல் வடமொழியிலமைந்த ஓர் உபநிஷத்தாகும்.

இதனைத் தமிழ் மக்கட்குப் பயன் தருமாறு தமிழ் மொழியிற் பெயர்த்தருளிய பெரியார், பழநிச் சாதுமா முனிவரின் மாணவராகிய திரிமூர்த்தி சுவாமிகளாவார்.

கல்வி யறி வொழுக்கங்களிற் சிறந்து விளங்கும் இப் பெரியார் தமிழ் மக்கள் பாலுள்ள பெருங் கருணையாலும், இவ்வரிய வித்தையின் உயர்வையும், பயனையும் நன்குணர்ந்து கைவரப் பெற்றுள்ளமையானும், தமிழுலகுக்கு இந் நூலைத் தந்தார்களென்று உலகம் மகிழுமாக.

ஓம் சாந்திஃ
"ஓம் கம் கணபதயே நமஃ"
சிவ குகமயம்

பழனி சைவாகம பாடசாலைப் பண்டிதரும்
சைவ சித்தாந்த சரபமுமாகிய பிரம்மஸ்ரீ
ஈசானிய சிவாசாரியாரவர்கள் அன்புடன் அளித்த

# சிறப்புரை

இந்த தேசம், உயர் பாரதம் என்று போற்றப்படும் பெருஞ் சிறப்பினையுடைய புண்ணிய பூமி. இது இமய முதலிய மலைகளையும், கங்கை முதலிய திவ்ய நதிகளையும், காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களையும், தன்னகத்தே பொருந்திய சிறப்பினையுடையது. ஸ்ரீ விசுவநாதர் முதலிய பன்னிரு ஜோதிர் லிங்கங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது. இங்கே வேதாகமங்களும், வேத சிரசுகளாகிய நூற்றெட்டு உபநிஷத்துக்களும், பதினென் புராணங்களும், இராமாயணாதி இதிகாசங்களும், வியாகரண முதலிய இலக்கண நூல்களும், பதஞ்சலி முதலிய மகானுபாவருடைய பாஷ்யங்களும், பிரஹ்ம சூத்திரமும், அதன் மஹா பாஷ்யங்களும், வேதங்களைப் பிரமாண நூல்களாகக் கொண்டெழுந்த பதினெண் ஸ்மிருதிகளும், கற்ப சூத்திரங்களும், தர்க்க நியாய வைசேஷிகாதி தர்சனகிரந்தங்களும், தோன்றி நிலவிவரும் பெருமை வாய்ந்தது.

இந்த பாரத தேசம் மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற முத்திறச் சிறப்புக்களாகிய அர்த்தப் பிரபஞ்சங்களோடு மேலே கூறிய சாஸ்திரப் பிரபஞ்சமாகிய சப்தப் பிரபஞ்சத்திலேயும்

பயில்வார்க்கு ஒன்றுக்கொன்று சாதன சாத்தியங்களாய் அபேதங்களாய் நிர்மல சிவசாக்ஷாத்கார ஞானைஸ்வர்ய சம்பத்திகளுக்கும் பரம காரணங்களாய் நிலவி வருகின்றன. அங்ஙனம் அத்யுத்தம சாதன சாத்தியங்களை அனுதியே சமலர்களாயுள்ள ஜீவகோடிகள் சில வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினர்களாதலின் அவர்கள் தாமே சாஸ்திரப் பிரபஞ்சத்தில் பிரவிருத்தித்து சப்தார்த்த தர்க்கநியாய நெறி நின்று அவ்வேதாகமாதி சாஸ்திர சத்தியார்த்தங்களை உணர்ந்து அவைகளில் விதந்தெடுத்தோதும் யோக ஞான மார்க்கங்களைக் கடைப்பிடித்தல் அதிதுர்லபமாம், என்பதனைப் பரம, காருண்ய சர்வக்ஞ சர்வ கருத்ருத்வ பரமபதியாகிய பரமேஸ்வரன் திருவுள்ளத்தே கொண்டு வேதாந்தப் பொருளை உள்ளவாறு உணர்த்தவல்ல குருபாம்பரையைத் தாமே தோற்றுவித்து அந்த ஞான பரம்பரைக்குத் தாமே முதற்குருவாய், தக்ஷிணாமூர்த்தியாயும், ஸ்கந்த குருவாயும் வீற்றிருந்து ஸனகாதி மஹரிஷிகளுக்கும், அகஸ்தியர் முதலிய முனீந்திரர்களுக்கும், வேதாந்தங்களையும், பிரணவார்த்தத்தையும், உபதேசித்து, அந்தக் குருபாம்பரையும், சிஷ்யபரம்பரையும், என்றென்றும் வாழ்க, என்றும், கேட்பவர் வாழ்க, என்றும், பரப்பிருஹ்ம பரசிவனார் - " அவதுமாம், அவது வக்தாரம், அவது வக்தாரம், என்று வேதோபநிஷத்துக்களுள்ளே அளவிறந்த ஆசி வசனங்களையும், ஆங்காங்கே புகட்டி வைத்தருளினார். அங்ஙனம் அதிமகிமை வாய்ந்த சாஸ்திரப் பிரபஞ்சம் ஜீவகோடிகளுடைய இகபர சாதனங்களுக்குப் பரம உபதேசங்களாய் ஞான வைராக்கிய சம்பன்னர்களுக்கும் ஞானஹேதுவாய் ஞானோபதேசங்களாய் அமைவன.

லோக போகங்களில் பிரவிருத்தித்து அந்தந்த லோகங்களிலும், தேச தேசாந்தரங்களிலும் பிறந்து தங்களுடைய

கர்மார்ஜித கர்மபரிபாகங்களுக்கிசைந்த இ க லோ க சுக போகங்களையே பொருளென மதித்து வாழும் ஜீவகோடிகளுக்கும் அவர்களுடைய சுகபோகங்களாகிய பூமி, (மலை) ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், என்ற முக்கிய பொருள்களைத் தோற்றுவித்து அவைகளின் இன்றியமையாமையைப் புலப்படுத்தி இவைகளே ஜீவகோடிகளுக்குப் பரம சாதனங்களாம், எனவும், இவைகளைக் கொண்டு அநுபவிக்கும் சுகங்களே 'பரம சுகங்களாம், என்றும் போதித்து, அவர்களுக்கும் இதோபதேசங்களாய்ப் பொருந்துவது, வேதார்த்தங்களானவை. வியாகரணம், சந்தஸ், நிருக்தம், தர்க்கம், நியாயம், பூர்வமீமாம்ஸை, உத்தரமீமாம்ஸை, முதலிய கிரந்தகோடிகளால் உணரத்தக்கவை, வேதாநுஷ்டான கிரமங்கள் பதினெண் மிருதிகளால் உணரத்தக்கன. அவைகளை அநுஷ்டிக்கும் முறை கற்ப சூத்திரங்களால் தெரிந்துணர்ந்த உணர்ந்து மேற்கொள்ளத் தக்கவை. வேதங்களில் விதித்த தர்ம மார்க்கங்களில் நிற்பவருக்கு வந்து பொருந்தும் சொர்க்காதி போகங்களும், அவற்றைப்பெற்று சுகானுபவம் எய்தினோரும், அவற்றை அலக்ஷ்யம் செய்து அந்த வேதவிதியைக் கடந்து தம் மனம் போனவாறு போக போக்கியங்களில் பற்றுவைத்து என்றும் கடக்கமுடியாத துன்பமெய்தினோரும், இவரென உணர்த்துவன இராமாயண பாரத முதலிய இதிகாசங்களும், பதினெண் புராணங்களுமாம். மேலே கூறிய பிரபஞ்ச போக இச்சையுள்ளவர்களுக்கு அந்தப் பிரபஞ்ச போகபோக்கியங்களைக் குறைவறப் பெற்று சுகானுபவங்களை அனுபவிப்பதற்கு இகலோக சுகபோக உபயோக உபதேசங்களாய் அமைந்தவை அர்த்த சாஸ்திரங்களாம். இவைகளெல்லாம் அந்த வே த ங் க ளி ன் கிளை, கொம்பு, தளிர், இலை, பிஞ்சு, காய்போல அமைந்தனவாம்,

இவைகளின் மகாவிருக்ஷம் வேதமாம். இவை பிரஹ்மாத்வைதமாகிய சிவாத்வைதத்தைப் புலப்படுத்தும் பரம ஞான சாதனங்களாதலின், "சிவாத்வைத மகாகற்பகவிருக்ஷம்" என்று போற்றப்படுகிறது, 'விதுர்ஞானே' என்ற தாதுவினாலே ஞானத்தை உணர்தற்கு கருவியாகலின் 'வேதம்' என்று புகழப்படுகிறது. இவற்றின் தாற்பரியங்கள் மேலே கூறிய வியாகரணசந்தோ நிருக்தங்களால் ஒருவாறு உணரப்படுவன. இவைகளின் முக்கியார்த்தமானது மகோபதேசக்கிரமமாய் ஞான சொரூபியாகிய பரப்பிருஹ்ம பரமேஸ்வராலும், அவருடைய அநுக்கிரஹத்தை முழுதொருங்கு பெற்ற மகாகுருவினாலுமே உணர்த்தப்படுவதாகும். அந்த குருமூர்த்திகள் பிருஹ்மத்தின் சமீபத்தில் நிஷ்டையினாலும் வேதத்தின் சமீபத்தில் வேதாந்த விசாரணைப்பியாசத்தினாலும் இருந்து ஐம்புலன்களைச் சாராது அவைகளை வென்ற தீரர்களாய் சிவானுக்கிரஹத்தில் உபநிஷத்பொருள்களை உணர்ந்தவர்களாய் சர்வ ஜீவகோடிகளிடத்திலும் உண்டான காருண்ய சொரூபிகளாயுள்ளவர்கள். அந்த மகாபுருஷர்களுடைய ஞானப்பிரவாஹ சொற்பெருக்குகளே உபநிஷத்துக்களாம். பிரம்ம வித்துக்களால் பிரஹ்ம ஜிக்ஞாசுகளுக்கு உபதேசிக்கப்பட்ட உபநிஷத்துக்களே பிரஹ்மவித்தை எனப்படும். இவைகளைவிடச் சிற்றுயிர்க்குற்ற துணை வேறில்லை, இல்லை. இது போகிகளுக்கு போக நிக்ஷேபமாம். கர்மாஜிதர்களுக்கு சுவர்க்காதிபோக கற்பக தருவாம். ஞானிகளுக்கு ஞானசாதன உபதேச பரம குருவாம். இதை உணர்தலும் இவற்றின் தாற்பரியங்களை பிரம்மச்சரிய, இந்திரிய நிக்கிரக, தயா, சத்திய, சாந்த, பிரம்மோபாசனை, விசிஷ்டர்களாகிய மகாகுருவின் உபதேசத்தாலுணர்ந்து, பல சாஸ்திரங்களின் சகாயங்களால் நெறிப்பட வைத்துணர்த்துவதே

ஜீவகோடிகளுக்குச் செய்யவேண்டிய நித்திய சாஸ்வத பரமோபயோக அவாச்ய நித்தியானந்த பிராப்த ஹேதுக மான மகோபகாரமாம்.

ஸ்ரீ திரிமூர்த்தி சுவாமிகள் அகத்துறவும் புறத்துறவும் பூண்ட ஒரு வைராக்கிய சம்பன்னர். இவர் இளமை யிலேயே கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவராய் விளங்கி னார். சிவபக்தியும் அடியார் தொண்டும் இவரிடம் சிறந்து விளங்கியது. ஆன்றோர்களிடத்திலே இவருக்குள்ள பேரன் பும் அளவிலடங்காதது. அநுபூதிமான்களைச் சிவனே எனத் தேறி வழிபடும் நியமமுள்ளவர். இவர் இளமையிலேயே பிறவிக்கு அஞ்சி வீடுபேறு விரும்பி அந்த நெறியினைத் தமக் குணர்த்தவல்ல ஞான குருவை நாடி நிற்குங்கால் தமது முற் றொடர்பினாலோ, பூர்வ புண்ணியம் ஒருங்கு திரண்டு பய னளிக்க தலைப்பட்டு நிற்றலினாலோ, ஸ்ரீ சாதுசாமிகளைத் தெரிசிக்கப் பெற்றனர். அவரது அடிகளிலே வீழ்ந்து வணங்கித் தமது குறிப்பைப் புலப்படுத்தி நிற்க, அந்த மெஞ் ஞானச் செல்வரும் இவருக்கு நிக்ஷோபதேசம் செய்தருளி னார். பின்பு சிறந்த கல்வி கற்று ஸ்ரீ காசிவாசம் செய்து வருங்கால் ஸ்ரீசாதுசுவாமிகள் இவருக்கு, சந்நியாசமும் ஸ்ரீவித்யா உபதேசமும் தந்து, அன்னபூர்ண உபநிடதம், தியானபிந்து உபநிடதம், யோகசிகோப நிடத முதலிய பிரஹ்மவித்தயை உபதேசித்து இவைகளில் கூறப்பட்ட ஞான யோக சாதனங்களை அநுசந்தானம் பண்ணுதல் வேண்டுமென்றும், இந்த உபநிஷத்துக்களின் தாற்பரியங் களைச் சிறந்த உரையுடன் வெளியிடல் வேண்டுமென்றும் ஆணையிட்டருளினார்கள். அந்த குரு ஆணையைச் சிரமேற் கொண்டு இவரும் காசி, வேதாரண்யம், ஸதாசிவ பிரமேக்

திரர் ஸமாதி, சங்கரநாராயணன் கோவில், குற்றாலம், பாப நாசம், திருச்செந்தூர், கன்யாகுமரி, மதுரை முதலிய திவ்ய ஸ்தலங்களில் உமாதேவி சந்நிதானத்திலிருந்து ஸ்ரீ வித்யா உபாசனையும், உபநிஷத் பாராயணமும் செய்துவந்ததின் பயனாகவே இங்ஙனம் உபநிஷத்துக்களுக்கு உரைவரைந்து வெளியிடும் நியமமுடையவரானார். குருவாணையின் வண்ணம் வெளியிடும் உரையே இந்த யோகசிகோபநிஷத்து உரையாகும்.

இத்துணை உரைப்பகுதிகள் உபநிஷத்துக்களின் கருத்துக்களாக வெளிவருதல் ஆஸ்திகர்களுக்குப் பெருமகிழ்ச்சியைத் தரத்தக்கது. வேத வேதாந்தங்கள், பிரம்ம சூத்திரங்கள், வியாகரண தர்க்க நியாய வைசேஷிகாதி கிரந்த சிரவண மனனங்கள் பெரும்பாலும் குறைந்துவரும் இத் தமிழ் நாட்டிலே இக்காலத்திலே இத்துணைக்கிரந்தங்களைக் குருமுகமாகக் கற்பாரும், கற்றபடி அநுசந்தானம் பண்ணுவாரும், அங்ஙனம் தாம்கண்ட பொருள்களைத் தொகுத்து இனிய தமிழிலே இலகுவான வசன நடையிலே மொழிபெயர்த்து வழங்குவாரும் அரியராய்விட அந்த வேத உபநிடத ஞானம் நம் நாட்டிலே குறைந்தன. இந்த நாளிலே நம் ஸ்ரீ திரிமூர்த்தி சுவாமிகள் மேலே சுட்டிய முறையின்படி நன்கு வடமொழியைக் கற்று, உபநிடதப்பொருளை அறிந்து உரை எழுதிச் சிறந்த பண்டிதர்களைக் கொண்டு பரிசோதித்து, இதனை இங்ஙனம் வெளியிட்டமை ஸத்ஜனங்களுக்கும், ஸாதுக்களுக்கும் மகோபகாரமாம். இதனை ஸரஸ்வதிவளாக ஆஸ்ரமத்தின் வெளியீடாக அச்சிட்டு உபகரிப்பவர்கள்.

உலகப் புகழை ஒரு சிறிதும் விரும்பாது ஸ்ரீ முருகப் பெருமான் அருளையே நாடி நிற்கும் சதாசார சம்பன்னர்

ஸ்ரீ சாதுசுவாமிகள் பால் அளவிடற்கரிய மெய்யன்பும், சேவையும் மேற்கொண்டவர்கள். அறிவும் அடக்கமுமே உருவாகவுள்ள ஆச்சாள்புரம் ஸ்ரீ வேங்கடேசம் பிள்ளையவர் களும் அவரது தர்ம பத்தினியாரும் ஆவார்கள். இவர்கள் முன் செய்தவத்தால் பிறந்தவர்கள். அவர்களது குடும்பத்துக்கு இந்த நன்னலங்களெல்லாம் வாய்த்தது. அவர்கட்கும், எமக் கும், மற்றெவர்க்கும் பரம தெய்வமாக விளங்கும் பழனி ஸ்ரீ ஞான தெண்டாயுதபாணி சுவாமியின் அருட்பிரசாதமே யாதலால் சில குறித்தேன். இவர்களுடைய பிரார்த்தனை யின் வண்ணமே ஸ்ரீ சாது சுவாமிகள் இவர்கள் அற நிலைய மாக அமைத்துத் தந்த ஸ்ரீ ஸரஸ்வதிவளாகத்திலே தவச் சாலையிலே யாகசாலையிலே ஞானயாகத்தைத் தொடங்கினார் கள். அந்த யாகந்தான் பல அன்பர்களுடைய எண்ணிறந்த தோஷபரிகாரத்வாராவாக அவர்களுடைய அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்விக்கும். மகா யாகங்களுக்கெல்லாம் மூலமாய் முன்னே தோன்றிய யாகமாகும். இந்த யாகம் இன்னும் நிலவி வருகின்றது. ஸரஸ்வதிவளாகத்தில் இன்னும் தபஸ் விகள் வசிக்கின்றனர். அகஸ்தியர் கோவில் ஸ்ரீ யோகீஸ்வரர் கோவில் முதலிய ஆலய பூஜாதருமங்கள் சுவாமிகள் அன்பர் களுக்கு விதித்த நித்திய நியமங்கள் எல்லாம் அங்ஙனமே மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இத்துணைப் பேறுகள் இதனை வெளியிட்ட நம் ஸ்ரீமான் வெங்கடேசம் பிள்ளை யவர்களையும் சந்ததிகளையும் காப்பதாக. முருகன் அருள் நிலவுக, நூல் பரவுக.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

“ ஓம் சாந்திஃ ”

" ஓம் ஹ்ரீம் பராசக்தியை நம: "

பழனி சைவாகம பாடசாலைப் பண்டிதரும்
சைவ சித்தாந்த சரபமுமாகிய பிரம்மஸ்ரீ
ஈசானிய சிவாசாரியாரவர்கள் அன்புடன் அளித்த

# பழனி
# ஸ்ரீ ஸாது சுவாமிகளின் சரித்திர சுருக்கம்.

---

நம் தக்ஷிணதேசம் - காஞ்சீபுரம், திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம், வேதாரண்யம், கும்பகோணம், திருவிடைமருதூர், சீர்காழி, திருப்பெருமணநல்லூர், (ஆச்சாள்புரம்) மதுரை, திருநெல்வேலி, குற்றாலம், கன்யாகுமாரி, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழநி, திருவேரகம், வைத்தீஸ்வரன் கோவில், திருத்தணிகை, திருவேங்கட முதலிய சிவ - சுப்பிரமணிய க்ஷேத்திரங்களையும், அங்கங்கே திருக்கோயில் கொண்டெழுந்தருளிய திவ்யமூர்த்திகளையும், மஹா தபோதனர்கள் தபஞ்செய்கின்ற மடாலயங்களையும், காவிரி பொன்முகலி முதலிய தீர்த்தங்களையும், தன்னகத்தே கொண்டு விளங்கும் சிறப்புடையது. தியான ஞான யோகங்கட்குச் சிறந்தது. பூசனைக்குப் பொருந்துமிடம் பலப் பல இங்கே யுள்ளன. "பேசில் இத்திசை யொவ்வாது பிறதிசை" ஆதலால் "மாதவஞ்செய்த தென்றிசை" என்று எங்கள் குருமணி சேக்கிழார் சுவாமிகள் விதந்தெடுத்துப் போற்றியுள்ளார்கள். இத்துணைப் புண்ணியபூமி யாதலாலே, இந்த நாட்டிலே

திருமூலர் முதலிய ஞானயோகிகளும், திருவள்ளுவர் முதலிய தெய்வப் புலவர்களும், ஸ்ரீ ஞானசம்பந்தர், வாகீசர், சுந்தரர், திருவாதவூரர் முதலிய சைவசித்தாந்த ஸ்தாபனாச்சார்யர்களும், மெய்கண்ட தேவர், அருள்நந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவ முதலிய சந்தானாசார்யர்களும், பட்டிணத்தார் தாயுமானார் முதலிய திருவருட்பெருஞ் செல்வர்களும், ஸ்ரீ சிவஞான முனிவர் முதலிய மகாபாஷ்ய கர்த்தாக்களும் தோன்றி நாஸ்திகங்களைக் களைந்து, சைவப் பயிர் வளர்ந்தோங்குமாறு தங்கள் தவ வலிமையால் எய்திய சிவப் பிரசாதத்தினாலேயும், பல அற்புத மகிமைகள் பொருந்திய திருமுறைகளினாலேயும், சமயஸ்தாபனங்கள் செய்தருளினார்கள். இங்ஙனம் சன்மார்க்கர் செய்துவரும் தவத்திற்கேற்ப சதாசார சம்பன்னர்கள் தோன்றுதலும், ஏனையோர் ஆற்றும் தீவினைக்கேற்ப விபரீதப் போக்கினர் பிறந்து புரைநெறிகளை வளர்த்தலும் மக்கள் மேற்கொள்ளும் நல்வினை தீவினைகளின் பயன்களாமென்று தேர்க. இவ்விரு நெறிகளும், இருளும் ஒளியும் போலத் தொன்மையவே யாயினும், ஒளிமுன் இருள் முனைந்துத் தோன்றாதவாறுபோல சன்மார்க்கத்தின் முன்பு மற்றைய புன்னெறிகள் வலியுடையனவாகமாட்டா வென்க.

## ஸ்ரீ ஸாது சுவாமிகள் பிறப்பும் வளர்ப்பும்

இத்துணைச் சிறப்புற்று விளங்கும் தமிழ் நாட்டிலே சோழ மண்டலத்திலே ஞானசம்பந்த சுவாமிகள் திருமண காலத்திலே திருக் கல்யாணத்திற்கு வந்த சமஸ்தரையும் அங்கே தோன்றிய ஜோதியிலே புகுவித்து ஞானசம்பந்தப் பெருமான் முத்தி தந்தருளிய திருப்பதி திருப் பெருமண நல்லூர். இது ஆச்சாள்புரம் என்று போற்றப்படுகிறது.

இங்கே சிறந்த பரம்பரைச் சைவ வொழுக்கமும், சிவபெருமான் திருவடியிலே பதித்த நெஞ்சும், சிவதருமமும், முழு தொருங்குடைய சதாசார சம்பன்னர்கள் தோன்றி வாழ்தல் இயல்பேயல்லவா?

ஆச்சாள்புரத்திலே சைவ மரபிலே பொன்னுச்சாமி முதலியார் தமது தருமபத்தினியோடு இல்லற தருமங்களையும், சிவாலய ஜீர்ணோத்தாரணம், மகேஸ்வர பூஜை, சமய பரிபாலன முதலிய சற்கருமங்களையும்,செய்துவரும் நாளிலே இவர்கள் செய்த புண்ணியத்தின் பயனாக ஒரு சற்புத்திரர் தோன்றினர். இவருக்கு உரிய காலங்களிலே செய்யப் பெற வேண்டிய சாதகரும, நாமகரண, அன்னப்பிராசனமும், செய்யப்பட்டு 'சபாபதி' என்று பெயரும் இடப்பட்டனர். பின்னர் வித்தியாரம்பமும் செய்யப்பெற்று ஏழாம் வயதிலே சமய தீக்ஷையும், சைவானுஷ்டானமும் செய்வித்தனர். ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுக நாவலரவர்கள் செய்தருளிய முதற் சைவ வினவிடை, 2-ம் புத்தகம், பாலபாடங்கள் சைவ சமய நெறி, பெரிய புராண வசனம், திருவிளையாடற் புராண வசனம், கந்தபுராண வசனம், சிதம்பரமான்மிய முதலிய நூல்களையும் கற்பித்தனர். இவரது நன்மாமனார் ஸ்ரீ பழநியப்ப முதலியார் சைவத் தமிழகத்திலே முதன் முதலாகத் தேவார பாடசாலை திறப்பித்து நடத்தியவர். அதிலே தேவாரம் முதலிய திருமுறைகளை முறையே கற்றவரானார்.

## இவரது தொண்டு

ஆச்சாள்புரம் சிறந்த சிவஸ்தலமாதலால் அங்கே தரிசனார்த்தமாக-வரும் சிவனடியார்கள் தங்குவதற்கு வாய்ப்பான இடம் - திரு முதலியாரவர்கள் திருமனையே யாகும். பல

சிவபக்தர்களும், சிறப்பாக நகர வைசியமணிகள் பலரும் தரிசனார்த்தம் வருகிறவர்கள் இங்கே நன்கு போற்றப்படு வார்கள். சைவசித்தாந்தச் செல்வரும் சிவபூஜா துரந்தரரு மாகிய காரைக்குடி ஸ்ரீ சொக்கலிங்க ஐயா அவர்கள், ஸ்ரீலஸ்ரீ. சபாபதி நாவலரவர்கள், ஸ்ரீ தில்லைநாத நாவலர், முருகேச பண்டிதர், சங்கர பண்டிதர், சைவசித்தாந்த சண்ட மாருதம், ஸ்ரீ சோமசுந்திர நாயகர், ஸ்ரீ சித்தாந்த ஞானபானு பாம்பன், குகஸ்ரீ, குமரதாஸ சுவாமிகள், பிற்காலத்தில் சபாபதியை ஆட்கொள்ளவிருக்கும் ஸ்ரீ நந்தியடி சுவாமிகள் முதலிய தபோதனர்களும், சிவபூஜகர், வித்வான்கள் முதலிய பேரறிஞர்களும் வந்து தங்குவார்கள். பல சைவப் பிரசங்கங் களும் நிகழ்ந்துவரும். ஸ்ரீ சொக்கலிங்க ஐயா அவர்கள் தூண்டுதலினால் அங்கே நகர வைசிய மணிகளைக் கொண்டு வேத பாடசாலை, தேவார பாடசாலை, பசு மடம், குருபூஜை மடம் முதலிய சமயஸ்தாபனங்கள் தோன்றின. இங்ஙனம் வரும் சிவபக்த சிகாமணிகளுக்கெல்லாம் குறிப்பறிந்து, தொண்டு பூண்டொழுகும் அறப்பணியை நமது சபாபதி செய்துவந்தார்.

## அடிமைத்திறம்

இவரது கல்வி, அறிவு, ஒழுக்கம், சிவபக்தி, அடியார் பக்தி, மெய்த்தொண்டு முதலியவைகளைக் கண்ட சான்றோர் கள் இப்பிள்ளை எதிர்காலத்தில் சிறந்த ஞானச் செல்வனாய் விளங்குவான், என்று மனமார வாழ்த்திவந்தனர். இவரது நற்றொண்டு தம்பால் வந்த சிவனடியார்கள் பொருட்டு வேண் டப்படுதலால் இவரை வெளியே அனுப்பி வேறு துறைப் புலமையைத்தர இவரது தந்தையார் ஒருப்படவில்லை. இவரது நற்றொண்டின் பயனாக இவருக்கு சைவத் தமிழறிவும்,

சிவனடித் தொண்டும், அடியாரடித் தொண்டும், இவர்பால் வளர்ந்தோங்கின.

## இவரது மனைச் சிறப்பு

இவரது மனை பொருட் செல்வர்கள், கலைச்செல்வர்கள், ஞானசம்பன்னர்கள், நிறைந்து அரச மாளிகையோ, கலைக் கூடமோ, சிவஞான கருவூலமோ, தவச் சாலையோ, கலா நிலையமோ, என்றெண்ணும்படி விளங்கிற்று. சைவ நூலிலே காணப்பட்ட சைவ வாழ்வு இவரது மனைக்கே பொருந்தும், என்று அன்பர்கள் போற்றப் பொலிவெய்தியது. இவருக்குப் பின்றோன்றல்களும் தோன்றிச் சிறந்து விளங்கினர்.

## இல்லற மேற்கொண்டது

இவர்கள் மனையறம் நீடு நிலவி வழிவழி தழைத் தோங்க வேண்டி பொன்னுச்சாமி முதலியார் தமது அருமந்த பிள்ளை சபாபதிக்குச் சிறந்த கற்பினல்லாளைத் திருமண முடிந்தனர். சபாபதி குடும்ப வாழ்க்கையில் பற்றிலராய் தமக்குரிய சிவனடியார் பணி, அநுஷ்டானம், பூசை, பாராயணம், ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஜபம், குகஷடாக்ஷரஜபம், என்னும் நியமங்களை மிகுந்த பக்தி சிரத்தையோடு விதிப்படி செய்து முடிப்பார்.

## ஆதீனஞ் சார்தல்

தந்தையாரோடு தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள் முதலிய ஞானாதீனங்களுக்குச் சென்று ஆங்குள்ள ஞானாசிரியர்கள் திருவடிகளிலே மெய்யன்போடு வணங்குவார். அங்குள்ள பூஜாகால நியமங்களுக்குரிய பணி புரிவார். அந்த ஞானாதீனங்களின் தலைவர்கள் இவன் ஒரு அகத்துறவி, பிற்காலத்திலே சிறந்த மகானாய் விளங்குவான்

என்று தங்கள் அருமைத் திருவாக்கினாலே வாழ்த்தி திருநீறு சாத்தி அருள்புரிவார்கள்.

## இவரது வைராக்கியம்

இங்ஙனம் சைவாதீன குருமணிகளின் அநுக்கிரகமும், அவர்களுடைய தவக்கோலமும், அவர்களுடைய சாதனை போதனை இவைகளைக் கண்ணாரக்கண்ட இவரது மனம் நிர்ஹேதுகமான வைராக்கியத்தை இவருக்கு உண்டுபண்ணி விட்டது.

## துறவு நிலை

பிறகு இவர் சிதம்பரம், சீகாழி, வைத்தீஸ்வரன்கோவில், பழநி முதலிய திவ்ய ஸ்தலங்களை தரிசிப்பார். பழநியம் பதியில் ஸ்ரீ ஞான தண்டாயுதபாணி சுவாமி சந்நிதியில் இவருக்குள்ள பற்று அளவிடற்கரியது. பொருள் அவா, புகழ் அவா, என்னும் இருபற்றுக்களையும் விட்டு அற்றவர்க் குற்ற சிவபெருமான் திருவடியில் மெய்ப்பற்றுமுற்ற உற்று வழிபடுதலே இப்பிறவியின் பலன் எனவும், அதனைப் பின்னர்ச் செய்வம் எனின், இன்னகாலத்திலே இந்தச் சரீரம் நீங்கும் என்பது நமக்கு விளங்காமையால் நாம் இன்றே துறவு நிலையை மேற்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் வந்தது. உடனே வீட்டைவிட்டு வெளியேறினார். போதிய செல்வமும், விளைநிலமும் சுற்றமும் இருந்தும், இவரது மனம், பற்றறத் துறந்தது. வீட்டவரும், நாட்டவரும், ஆர்த்தனர். தாய்தந்தையரிடத்திலோ, மனைவியரிடத்திலோ, சுற்றம் சூழலிலோ, வெறுப்புடையவரல்லரிவர். அவர்கள்பால் பேரன்புடையவருமாவர். ஆனால் முருகப் பெருமானுடைய திருவடித்தியான யோகத்திலேயே, காலத்தைச் செலவிடுவ

தன்றி, நிலையில்லாத பொருளிலே பற்றுவைத்து இனி காலத்தைக் கழிக்க வொருப்படேன் என்று, இவர் வெளிக்கிட்டார்.

## யாத்திரை

பழநியம்பதியிலே இவரது ஆன்மநாயகராகிய ஸ்ரீ ஞானதண்டாயுதபாணி சந்நிதியிலே நிலையாக இருந்து தொண்டு செய்ய இவர்மனம் விரும்பியது. தமது ஆரம்ப நிலையிலே பூர்வாசிரமத் தாய்தந்தையர்கள் சூழலிலே இருந்து நீங்கிய இவர், அவர்களுடைய மனம் இவரது உறுதியைக் கண்டு ஒருவாறு தேறுதல்பெறும்வரை, யாத்திரை செய்துவருவது, நலமெனக் கருதி, உத்திரதேச யாத்திரை செய்து தமது உபாசனமூர்த்தி சந்நிதியைப் பெரிதும், அங்கு காண்பது அரிதாதலால் சுண்டூர் குமாரசுவாமி சந்நிதியை அடைந்து தமது மனமார வழிப்பட்டு வந்தார். அங்கேயுள்ள மன்னருங்கூட தமது கால் நிலத்திலே படாவண்ணம் முழங்காலை யூன்றி நடந்து தரிசித்து, வரும் பிரணவாசலமலை அதுவாகும். எனவறிந்த இவரும் அங்ஙனமே தரிசித்துவருங்கால் ஒருநாள் முருகப்பெருமான் இவரது கனவிலே தோன்றி இவர் முழங்காலிலே நகர்ந்து வருந்தி மலையை வலம் வருவதை நோக்கி, என்னே குழந்தாய்! கால் ஊனமோ என்று ஒரு பாலப் பிரமச்சாரியாய் கௌபீன காஷாய தண்டதாரியாய்ப் புன்முறுவலோடு வினவினர். அவருடைய குறிப்புணரும் குறிப்பினராய் மௌனமுற்று வணங்கி நிற்ப, பிள்ளாய் நீ எங்கே இருந்தாலும், எங்கே கிடந்தாலும், உன் மனம் எந்தப் பழநியம்பதியை நாடி நிற்குமோ, அங்கே சென்று வாசம் செய், அங்கே உனக்கு காக்ஷி தருவோம், அங்கே இருந்து பல தருமங்கள் செய்வாய். நாட்டவரும் வீட்டவரும், உன்னைச்

சூழ்வரே என்று எண்ணி, மனத்தை மட்டும், அங்கேயே வைத்து, உன் உடம்பு இங்கே கிடப்பது உனது தவத்தால் விளைந்த ஞானத்திற்குக் (கால்) ஊனம் அன்றோ, என்று வினவினர். இனி உனக்குச் சுற்றமும், பற்றும் நாமே, யார் உறவர், யார் பகைவர், உனக்கு என. இத்துணைச் சங்கற்ப விகற்பங்கள் எல்லாம் அறவே விடு. பழநியம்பதியில் வந்து நம் பணியை, தொண்டர்கள் பணியை அங்கு வந்து ஆற்றுக. எனப் பணித்து மறைந்தனர். இவர் விழித்தெழுந்து பெருமானார் தம் பேரருளைப் போற்றிப் புகழ்ந்து பெருமானிடத்தில் விடை பெற்றுப் பழநியம்பதியில் வந்து தங்கினார்.

அங்கு சென்றவுடன் பெருமான் இடமும், அன்னம் பாலிப்புப் பணியும், திருக்கோயிற் றொண்டும், முறையே வகுத்துக் கொடுப்ப இவையெல்லாம் எந்தை கந்தநாதன் பெருங்கருணையே யென்று கடைப்பிடித்துத் தாமே திருக்கோயிலில் கைத் திருத்தொண்டு செய்துவரும் கடப்பாட்டினரானார். இந்த நிலையில் இவருக்கு தம் வீட்டவரென்றும், நாட்டவரென்றும் உள்ள எண்ணமும், பற்றும் அறவே நீங்கியது. அவர்களும் முருகப் பெருமானைப் பழநியிலே வந்து தரிசித்து இவரையும் தரிசித்து மீண்டனர். இவர் அப்போது ஸ்ரீ சாது சுவாமி, என்று போற்றப் பட்டனர். சிவஞானிகள் தமது காலாலும், கையாலும், கண்ணாலும், உலகத்தை உய்யக் கொள்பவர்களன்றோ? அவர்களுடைய தவமன்றோ உலகத்தை உய்விப்பது? அத்துணைத் தவ ஞானச் செல்வரும், சிவஞானச் செல்வரும் ஆகிய ஞான சம்பந்தப் பெருமான் "எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே" என்று பாடியருளிய திருப்பதிகம் இவர் நினைவுக்கு வந்தது.

உலகு உய்யும் வண்ணம் தவம் செய்தல் வேண்டுமென்றும், அதற்கு சர்வான்மாக்களையும் ஒருசேர ஞான ஜோதியிற் புகுவித்து முத்திபேற்றைத் தந்தருளியதும், காக புசுண்டர் தவஞ்செய்ததுமாகிய திருப்பெருமண நல்லூரே ஏற்ற திருத் தலமாம், எனவும், இவர் மனதிலே புலப்பட்டது. அங்கு சென்று தவஞ்செய்தல் எவ்வாறு, எங்ஙனம் ஆற்றப்படல் வேண்டுமென்று கருதிக் கொண்டிருக்குங்கால் அவ்வூர் அறப் பெருஞ் செல்வரும், உத்தம சீலரும், ஆகிய திருவேங்கடம் பிள்ளையவர்களுடைய தருமபத்தினியார் தமது தவப் புதல்வரோடு பழநிக்கு வந்து நமது அடிகளார் திருவடிகளிலே வீழ்ந்து, வணங்கி வழிபட்டு, சுவாமி தாங்கள் யாங்கள் வசிக்கும் பதிக்கு எழுந்தருளுதல் வேண்டுமென்று மெய்யன் போடு வேண்டினர். நாம் கருதியவாறே இங்ஙனம் அம்மையார் வேண்டுகின்றார்களே, இது அன்னபூர்ண தேவியின் கட்டளைபோலும் என்றெண்ணி முருகப் பெருமானிடம், அம்மையார் கருத்தை அர்ப்பணஞ் செய்து இருந்தனர். பழநி முருகப்பெருமான் அன்று இவர் கனவிலே தோன்றி அன்ப! அங்ஙனமே சென்று கொள்ளிடக் கரையிலே ஒரு தவச் சாலையை அமைத்துத் தா, அங்கே சென்று கலியின் வலிகெடுமாறு ஒரு ஞானயாகத்தைத தொடங்குக, என்று அருள்புரிந்தனர். அந்த யாகம் மேலே நிகழவிருக்கும் உத்தம சத்கருமங்களுக்கெல்லாம் ஒரு நிலையமாய் முதலாய்த் திகழும் என்றருளிச் செய்தனர். அவ்வாறே அங்கு சென்று வசித்து மகா யாகங்களைச் செய்தனர். அது பின்பு எல்லாப் பேரறங்களும் வளர்வதற்கு ஏதுவாயின. அந்த யாகம் இன்றும் ஸரஸ்வதி வளாகத்திலே நிலைபாக நடைபெற்று வருகின்றது. இல்லற நெறியினர் தமக்குரிய பூர்வ வினையைச் சிவோபாசனையினாலே விலக்கிக்கொண்டு, வேண்டிய வேண்டி

யாங்கு இஷ்டசித்திகளைப் பெற்று இவ்வுலகில் இனிது வாழ்தல் வேண்டுமென்பதும், இல்வாழ்வார் தமக்குரிய பணிகளை மேற்கொண்டு செவ்வையாகத் தமது பேரறங்களைப் புரிதல் ஒரு நாட்டின் நலத்திற்கும், சன்மார்க்க நெறி வளர்தற்கும், ஏற்ற சற்காரியமாம் என்றும் தெளிந்து மகரிஷிகள் வாக்காகிய ஜோதிஷக் கிரந்தங்கள் வாயிலாக அவரவர்க்கு நேரவிருக்கும் தோஷங்களுக்குரிய பரிகாரங்களை அந்தக் கிரந்தங்களின் வாயிலாகவே பார்ப்பித்துச் சிறந்த பரிகாரங்களைச் செய்வித்தும், பல குடும்பங்களை இனிது வாழச் செய்தார். ஸ்ரீ நந்தியடி சுவாமிகள் பிற்காலத்திலே வந்து சிறந்த ஞானோபதேசங்களைச் செய்தார். அவரிடத்தே ஸ்ரீ சாது சுவாமிகள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், முதலிய சித்தாந்த சாத்திரப் பொருள்களை நன்கு கற்று, நிஷ்டாபரராய், சிறந்த சிவபூஜகராய், பல தரும குடும்பங்களுக்குச் சிறந்த ஞான பிதாவாய், துறவிகளுக்கு ஒரு ஞானாசாரியராய், பரமயோகியாய், தவச் செல்வியர்களாகிய பெண்களைத் தாயென மதிக்கும் தீபோதனராய், வறியவர்களுக்கு ஒரு அன்னையாய், சிவ தமருங்களில் பெரும்பற்றுடைய ஞானப் பேராசராய், சிவ பூஜகர்களுக்குச் சிறந்த தொண்டராய், ஸ்ரீ ஞானதண்டாயுதபாணி சுவாமியின் திருவருளுக்கு உரிய தபோதனராய், விளங்கியவர். அன்னதான பிரபுவுமாய் விளங்கியவர் நம் சாது சுவாமிகள் ஆவர். திருவருள் முன்னிற்பதாக, குருவருள் துணைபுரிவதாக. சுபம்.

" ஓம் சாந்திஃ "

---

ஓம்.

ஓம் கம் கணபதயே நம:

ஓம் ஹ்ரீம் அன்னபூர்ணாயை நம:

# யோக சிகோப நிஷத்தின் விஷயக் குறிப்பு

---

## இரண்டாம் அத்தியாயம்

## ஐந்தாவது அத்தியாயம்

விஷயம். சுலோக எண்

—:o:—

யோகசிகோப நிஷத்தின் விஷயக் குறிப்பு முற்றிற்று

ஓம் ஶாந்திஃ

ॐ

|| गं गणपतये नमः ||

ஸௌ: சுப்ரஹ்மண்யாய நம:

ஹ்ரீம் பராசக்த்யைநம:

ஹ்ரீம் சிவாய நம:

ஸ்ரீ ஸாது ஸத்குருப்யோ நம:

# योगशिखोपनिषत्

# யோக சிகோப நிஷத்,

சொரூப வணக்கம்

योगज्ञाने यत्पदाप्ति साधनत्वेन विश्रुते ।
तत्त्रैपदं ब्रह्मतत्त्वं स्वमात्रमवशिष्यते ॥

'யோகக்ஞானே யத்பதாப்தி ஸாதனத்வேன விஸ்ருதே
தத்த்ரைபதம் ப்ரஹ்மதத்வம் ஸ்வமாத்ர மவசிஷ்யதே,

யோகம் ஞானமாகிய இரண்டும் எந்தப் பதத்தை அடைவிக்கும் சாதனமாக விசேஷமாய்க் கேட்கப்படுகிறதோ, முப்பதமாகவுள்ளதும் பிரம்மதத்துவமானதுமான அது எனது சொரூபமாகவே எஞ்சி நிற்பதாகிறது.

யஜுர்வேத சாந்தி மந்திரம்

ओं सहनाववतु, सहनौ भुनक्तु, सहवीर्यं करवावहै,
तेजस्विनावधीतमस्तु, मा विद्विषावहै, ओंशान्तिः शान्तिः शान्तिः ॥

ஓம் ஸஹநாவவது, ஸஹநௌ புனக்து, ஸஹவீர்யம்
காவாவஹை,

தேஜஸ்விநாவதீதமஸ்து, மா, வித்விஷாவஹை,
ஓம் ஶாந்திః ஶாந்திః ஶாந்திః

## பொழிப்புரை

பிரணவவடிவ கடவுள், குரு சிஷ்யர்களாகிய எங்களைப் பிரிவின்றிக் காப்பாராக. எங்களிருவரையும் உண்ணும் வகையால் ஒன்றுகவே நுகரச் செய்வாராக. அவ்வுண்ட செயலால் நாங்கள் உடல்வலிமைபெற்றவர்கள் ஆவோமாக. உடல் ஒளிபெற்ற நாங்கள் கல்வி கற்றவர்களாவோமாக. பகையற்றுக் கூடிவாழ்கின்றவர்கள் ஆவோமாக. உடலினுறும் நோயும், பிறவுயிர்களாலுறும் துன்பமும், தேவதைகளாலுண்டாகுங் கோபமும் ஒழித்தருள்வாராக.

## அவதாரிகை

முக்திவழி அறியும் விருப்பத்தை இரண்டு மந்திரங்கள் கூறுகின்றன.

सर्वे जीवाः सुखैर्दुःखैर्मायाजालेन वेष्टिताः ।
तेषां मुक्तिः कथं देव कृपया वद शंकर ॥ १ ॥
सर्वसिद्धिकरं मार्गं मायाजालनिकृन्तनम् ।
जन्म मृत्यु जराव्याधि नाशनं सुखदं वद ॥ २ ॥

'ஸர்வே ஜீவாः ஸுகைர் துக்கைர் மாயாஜாலேன வேஷ்டிதாः
தேஷாம் முக்திः கதம் தேவ க்ருபயா வத ஶங்கர,
ஸர்வஸித்தி கரம் மார்கம் மாயாஜால நிக்ருந்தனம்
ஜன்ம ம்ருத்யு ஜராவ்யாதி நாஶனம் ஸுகதம் வத,'

போ - ரை :—ஏ ஒளிவடிவ சங்கர ? எல்லா உயிர்களும் அறியாமையாகிய வலையால் சூழப்பட்டவர்களாய் இன்ப துன்பங்களால் (வருந்துகின்றார்கள்) அவர்களுக்கு விடுதலை எவ்வாற்றானாகும், அருளால் கூறுவீராக. மற்றும் அறியாமை யாகிய வலையைக் கிழிப்பதும், பிறப்பு இறப்பு மூப்பு நோய் இவைகளை அழிப்பதும் எல்லாச் சித்திகளையும் செய்விப்பதும் இன்பத்தையே தருவதுமான வழியைக் கூறுவீராக. (2)

அ - கை :—முக்தி வழியின் அருமையைக் கூறுகின்றது.

हिरण्यगर्भः पप्रच्छ स होवाच महेश्वरः ।
नानामार्गैस्तु दुष्प्रापं कैवल्यं परमं पदम् ॥ ३ ॥
सिद्धमार्गेण लभते नान्यथा पद्मसंभव ।

ஹிரண்யகர்ப: பப்ரச்ச ஸ ஹோவாச மஹேஶ்வர:
நாநாமார்கைஸ்து துஷ்ப்ராபம் கைவல்யம் பரமம் பதம்
ஸித்தமார்கேண லபதே நான்யதா பத்மஸம்பவ.

போ - ரை :—இவ்வாறு பிரமன் கேட்க, அந்த மகேஸ்வரன் விடை கூறினார். தாமரையில் தோன்றியவனே ? தன்னில் வேறில்லாத மேலான முத்திப் பதமானது பல வழிகளால் அடைதற்கு அரியது. ஆனாலும் யோகத்தைப் பயின்று சித்தியை அடைந்த சித்தர்களின் வழியால் அது அடையப்படுகின்றது. வேறு வழியால் அடையத்தக்கது அன்று. (3)

அ - கை :—பிரம்மம் வெறுங் கல்வியால் மட்டும் அடையத்தக்கதன்று எனக் கூறல்.

पतिताः शास्त्रजालेषु प्रज्ञया तेन मोहिताः ॥ ४ ॥
स्वात्म प्रकाशरूपं तत् किं शास्त्रेण प्रकाश्यते ।
निष्कलं निर्मलं शान्तं सर्वातीतं निरामयम् ॥ ५ ॥
तदेव जीवरूपेण पुण्यपाप फलैर्वृतम् ।
परमात्मपदं नित्यं तत्कथं जीवतां गतम् ॥ ६ ॥
तत्त्वातीतं महादेव प्रसादात्कथयेश्वर ।

'பதிதாஃ ஶாஸ்த்ர ஜாலேஷு ப்ரஜ்ஞயா தேன மோஹிதாஃ
ஸ்வாத்ம ப்ரகாஶரூபம் தத் கிம் ஶாஸ்த்ரேண ப்ரகாஶ்யதே;
நிஷ்கலம் நிர்மலம் ஶாந்தம் ஸர்வாதீதம் நிராமயம்
ததேவ ஜீவரூபேண புண்யபாப பலைர் வ்ருதம்
பரமாத்மபதம் நித்யம் தத்கதம் ஜீவதாம் கதம்,
தத்வாதீதம் மஹாதேவ ப்ரஸாதாத் கதயேஶ்வர.'

போ - ரை:—சாஸ்திரக் கூட்டங்(வலை)களில் வீழ்ந்தவர்கள் அந்தக் கல்வி யறிவால் மயக்குற்றவர்கள் ஆனார்கள். களங்கமின்றியதும் தூய்மையானதும் ஒழிவானதும் எல்லாவற்றையுங் கடந்ததும் நோயற்றதுமான அந்தத் தனது ஒளிவடிவம் கல்வி கற்றலால் மட்டும் விளக்கமுறுமா என்ன? நல்வினை தீவினைப்பயன்களால் சூழப்பெற்ற அந்த ஆன்மாவே ஜீவவுருக்கொண்டது. தத்துவங்களைக் கடந்த அந்த அழிவற்ற பரம்பொருள் எவ்வாறு ஜீவனாகவுள்ள நிலையைப் பெற்றது? பேரொளி வடிவ சங்கர? கிருபையால் சொல்வீராக. (6)

அ - கை:—பிரமப்பொருள் ஜீவவுருக்கொள்ளும் நிலையைக் கூறுகின்றன.

सर्वभावपदातीतं ज्ञानरूपं निरञ्जनम् ॥ ७ ॥
वायुवत्स्फुरितं स्वस्मिंस्तत्राहं कृतिरुत्थिता ।
पञ्चात्मकममूत् पिण्डं धातुबद्धं गुणात्मकम् ॥ ८ ॥
सुखदुःखैः समायुक्तं जीवभावनया कुरु ।
तेन जीवाभिधा प्रोक्ता विशुद्धे परमात्मनि ॥ ९ ॥

'ஸர்வபாவ பதாதீதம் ஞானரூபம் நிரஞ்ஜனம்
வாயுவத் ஸ்புரிதம் ஸ்வஸ்மின் தத்ராஹங் க்ருதிருத்திதா
பஞ்சாத்மக மபூத்பிண்டம் தாதுபத்தம் குணாத்மகம்
ஸுகதுக்கை: ஸமாயுக்தம் ஜீவபாவனயா குரு,
தேன ஜீவாபிதா ப்ரோக்தா விஶுத்தே பரமாத்மனி'

பொ - ரை :—எல்லாவிதமான உணர்வு எல்லையைக் கடந்ததும் அறிவுருவமானதும் குறியற்றதுமான பிரமம் காற்றுப் போன்று தோற்றமுள்ளதாயிற்று; தனது அந்த ஒளியில் நான் என்ற தடிப்பு வெளிப்பட்டது. பின்னர் முக்குண வடிவானதும் நரம்புகளால் பிணைக்கப்பட்டதும் ஐம்பூத வடிவமுள்ளதுமான உருவம் உண்டாயிற்று. அதை இன்ப துன்பங்களோடு கூடிய ஜீவ வடிவமாகக் கொள்வாயாக. மேற்கூறிய அந்த முறையால் நிர்குண வடிவ பரம் பொருளிடத்தில் ஜீவனென்ற பெயர் சொல்லப்பட்டது. (9)

அ - கை :—காம முதலிய குற்றம் நீங்கிய ஜீவனுக்கு சிவ நிலையைக் கூறல்.

कामक्रोध भयं चापि मोहलोभमथो रजः ।
जन्म मृत्युश्च कार्पण्यं शोकस्तन्द्रा क्षुधा तृषा ॥ १० ॥
तृष्णा लज्जा भयं दुःखं विषादो हर्ष एव च ।
एभिर्दोषै विनिर्मुक्तः स जीवः शिव उच्यते ॥ ११ ॥

காம க்ரோத பயம் சாபி மோஹ லோபமதோ ரஜஃ
ஜன்ம ம்ருத்யுஶ்ச கார்பண்யம் ஶோகஸ்தந்த்ராக்ஷுதா
த்ருஷா,
த்ருஷ்ணா லஜ்ஜா பயம் துக்கம் விஷாதோ ஹர்ஷ ஏவச
ஏபிர் தோஷைர் விநிர்முக்தஃ ஸ ஜீவஃ ஶிவ உச்யதே

போ - ரை :—விருப்பு வெகுளி அச்சம் மற்றும் மயக்கம், ஈயாமை, அவ்விதமே அறிவின்மை, பிறப்பு, இறப்பு, இரங்காமை, சோர்வு, சோம்பல், பசி, தாகம், வேட்கை, வெட்கம், பயம், துன்பம், இன்பம், வாட்டம், (இவைகள் முக்திக்குத் தடையாகவுள்ளன). இவ்விதத் தடைகளால் விடுபட்ட அந்த ஜீவன் சிவனென்றே சொல்லப்படுகின்றான். (11)

அ - கை :—ஞானயோகங்களால் தடைகள் ஒழிகின்றன எனக் கூறல்.

तस्माद्दोषविनाशार्थमुपायं कथयामि ते ।
ज्ञानं केचिद्वदन्त्यत्र केवलं तन्न सिद्धये ॥ १२ ॥
योगहीनं कथं ज्ञानं मोक्षदं भवतीह भो ।
योगोऽपि ज्ञानहीनस्तु न क्षमो मोक्षकर्मणि ॥ १३ ॥
तस्माज्ज्ञानं च योगं च मुमुक्षुर्दृढमभ्यसेत् ।

'தஸ்மாத்தோஷ விநாஶார்த்தமுபாயம் கதயாமி தே
ஞானம் கேசித் வதந்த்யத்ர கேவலம் தந்ந ஸித்தயே
யோகஹீனம் கதம் ஞானம் மோக்ஷதம் பவதீஹ போ
யோகோ2பி ஞானஹீனஸ்து ந க்ஷமோ மோக்ஷகர்மணி
தஸ்மாஜ் ஞானஞ்ச யோகஞ்ச முமுக்ஷுர் த்ருடமப்யஸேத்'

போ - ரை :—மேற்கூறிய தடைகள் ஒழிதற்பொருட்டு உனக்கு வழியைக் கூறுகின்றேன். இத்தடையை நீக்குவ

தில் சிலர் ஞானத்தையே சாதனமாகக் கூறுகின்றனர், அந்த ஞானமாத்திரம் தடையை நீக்கி சித்தியைத் தருவதன்று. பிரமாவே? யோகமின்றிய ஞானம், இத் தடையுள பொழுது எவ்வாறு மோக்ஷத்தைக் கொடுப்பதாகும்? ஞானமின்றிய யோகமும் மோக்ஷத்தைத் தருவதில் ஆற்றலற்றதாம். ஆகையால் முக்தி விருப்பமுள்ளவன் ஞானத்தையும் யோகத்தையும்நன்கு உறுதியாகப்பயில்வானாக.(13)

அ - கை:—ஞானத்தின் இலக்கணத்தையும் அதன் பயனையுங் கூறல்.

ज्ञानस्वरूपमेवादौ ज्ञेयं ज्ञानैक साधनम् ॥ १४ ॥
अज्ञानं कीदृशं चेति प्रविचार्य मुमुक्षुणा ।
ज्ञातं येन निजं रूपं कैवल्यं परमं पदम् ॥ १५ ॥
असौ दोषैर्विनिर्मुक्तः कामक्रोधभयादिभिः ।
सर्वदोषैर्वृतो जीवः कथं ज्ञानेन मुच्यते ॥ १६ ॥

'ஞானஸ்வரூபமேவாதௌ ஜ்ஞேயம் ஞானைகஸாதனம்
அஜ்ஞானம் கீத்ருஸம்சேதி ப்ரவிசார்யம் முமுக்ஷுணா
ஜ்ஞாதம் யேன நிஜம் ரூபம் கைவல்யம் பரமம் பதம்
அஸௌ தோஷைர் விநிர்முக்தః காமக்ரோத பயாதிபிః
ஸர்வதோஷைர் வ்ருதோ ஜீவః கதம் ஞானேன முச்யதே'

ஞேயவத்துவாகிய பிரமம் ஞானமொன்றையே சாதனமாகவுடையது. ஆகையால் வீடுபெறும் வேட்கையுள்ளவனால் முதலில் ஞானத்தின் இலக்கணமே அறியத்தக்கது. பிறகு அஞ்ஞானம் எத்தகையது என நன்கு ஆராயத்தக்கது. எந்த ஞானத்தால் தனது எதார்த்த சொரூபமாகவுள்ள சிறந்த முக்திநிலையானது அறியப்பட்டதாமோ, அப்

பொழுதே அவன் காமக்ரோத பய முதலிய குற்றங்களால் விடுபட்டவனுகின்றான். எல்லாக் குற்றங்களாலும் சூழப் பட்ட ஜீவன் எங்ஙனம் ஞானத்தால் விடுபட்டவனுவன்?

இதுவும் அது.

स्वात्मरूपं यथा ज्ञानं पूर्णं तत् व्यापकं तथा ।
कामक्रोधादिदोषाणां स्वरूपान्नास्ति भिन्नता ॥ १७ ॥
पश्चात्तस्य विधिः किं नु निषेधोऽपि कथं भवेत् ।
विवेकी सर्वदा मुक्तः संसारभ्रमवर्जितः ॥ १८ ॥
परिपूर्णस्वरूपं तत्सत्यं कमलसंभव ।
सकलं निष्कलं चैव पूर्णत्वाच्च तदेव हि ॥ १९ ॥

'ஸ்வாத்மரூபம் யதாஜ்ஞானம் பூர்ணம் தத் வ்யாபகம் ததா
காமக்ரோதாதி தோஷாணும் ஸ்வரூபான் நாஸ்தி பின்னதா
பஶ்சாத் தஸ்யவிதிః கிம்நு நிஷேதோபி கதம் பவேத்
விவேகீ ஸர்வதாமுக்தః ஸம்ஸார ப்ரம வர்ஜிதః
பரிபூர்ண ஸ்வரூபம் தத்ஸத்யம் கமல ஸம்பவ,
ஸகலம் நிஷ்கலம் சைவ பூர்ணத்வாச்ச ததேவ ஹி.'

போ - ரை :—தனது ஆன்ம சொரூபம் எவ்வாறு அறிவுருவாய் நிறைவாய் உளதோ, அவ்விதமே விருப்பு வெகுளி முதலிய குற்றங்களுக்கு, அகன்ற தனது உருவைக் காட்டிலும் வேற்றுமை இல்லையாகின்றது. பிறகு அந்த ஆன்ம இயல்பிற்கு செய்யத்தக்கதும் விலக்கத்தக்கதுமான கட்டளை எங்ஙனம் கூடும். கூடாதென்றபடி, பகுத்தறிவுள்ளவன் எப்பொழுதும் இறப்பு பிறப்பாகிய சுற்றுதலினின்றும் நீங்கியவனுய் முக்தனுகின்றான். அந்தப் பரம்பொருள் எங்கும் நிறைந்த இயல்புள்ளதாய் உண்மைப்பொருளாகின்றது.

பிரமாவே? அதுவே தனது நிறைவினின்றும் உருவப் பொருளாகவும் அருவப் பொருளாகவும் ஆகின்றது.

அ - கை:—போலிஞானி அஞ்ஞானிக்கு ஒப்புமை கூறல்.

कलिना स्फूर्तिरूपेण संसारभ्रमतां गतम् ।
निष्कलं निर्मलं साक्षात्सकलं गगनोपमम् ॥ २० ॥
उत्पत्तिस्थिति संहारस्फूर्तिज्ञानविवर्जितम् ।
एतद्रूपं समायातः स कथं मोहसागरे ॥ २१ ॥

'கலினா ஸ்பூர்திரூபேண ஸம்ஸார ப்ரமதாம் கதம்
நிஷ்களம் நிர்மலம் ஸாக்ஷாத் ஸகலம் ககனோபமம்
உத்பத்தி ஸ்திதி ஸம்ஹார ஸ்பூர்திக்ஞான விவர்ஜிதம்
ஏதத்ரூபம் ஸமாயாதஃ ஸ கதம் மோஹஸாகரே.'

பொ - ரை:—அதுவே பாபத்தின் மிகுதியால் இறப்புப் பிறப்பாகிய சுற்றுதலை அடைந்தது. ஆகாயம் போன்று விரிந்ததும் களங்கமில்லாததும் தூய்மையானதுமான பரம் பொருள் கண்ணெதிரில் உருவமுள்ளதாயிற்று. மற்றும் தோன்றல் நிற்றல் வெளிப்படல் அறிதல் இவற்றின் நீங்கிய பரம்பொருள் உருவமுள்ளதாக எங்ஙனம் வந்தது. அந்தச் சகளவடிவம் ஞானமின்றி மோகக் கடலில் எவ்வாறு அடிக்கடி முழுகுகிறது.

இதுவுமது.

निमज्जति महाबाहो त्यक्त्वा विद्यां पुनःपुनः ।
सुखदुःखादिमोहेषु यथा संसारिणां स्थितिः ॥ २२ ॥

तथा ज्ञानी यदातिष्ठेद्वासनावासितस्तदा ।
तयोर्नास्ति विशेषोऽत्र समा संसारभावना ॥ २३ ॥
ज्ञानं चेदीदृशं ज्ञातमज्ञानं कीदृशं पुनः

'நிமஜ்ஜதி மஹாபாஹோ த்யக்த்வா வித்யாம் புனः புனः
ஸுகதுக்காதி மோஹேஷு யதா ஸம்ஸாரிணாம் ஸ்திதிः
ததா ஞானி யதா திஷ்டேத் வாஸனாவாஸிதஸ் ததா
தயோர் நாஸ்தி விசேஷோऽத்ர ஸமா ஸம்ஸார பாவனா
ஞானம் சேதீத்ருசம் ஞாத மஜ்ஞானம் கீத்ருசம் புனः.'

பொ-ரை:—பருத்த தோள்களுடைய சிவபெருமானே? கூறுவீராக. இன்ப துன்ப முதலிய சுற்றுதல்களில் உழல்பவர்களது நிலை எங்ஙனமுளதோ, அங்ஙனமே ஞானி நினைவாலுளவாய கற்பனைகளால் எப்பொழுது சூழப்பெறுவனோ, அப்பொழுது அவ்விருவர்களுக்கும் உயர்வு தாழ்வு இல்லையாகின்றது. பிறவிநிலை இவ்விடத்தில் இருவருக்கும் ஒரு படித்தாம். ஞானத்தினியல்பு இங்ஙனம் அறியப்பட்டது. இனி அஞ்ஞானத்தின் இயல்பு யாதாம். (23)

அ - கை :—போலிஞானிக்கு யோகத்தாலன்றி வீடுபேறு இல்லை எனக் கூறல்.

ज्ञाननिष्ठोऽविरक्तोऽपि धर्मज्ञोऽविजितेन्द्रियः ॥ २४ ॥
विना देहेऽपि योगेन न मोक्षं लभते विधे ।
अपक्वाः परिपक्वाश्च देहिनो द्विविधाः स्मृताः ॥ २५ ॥
अपक्वा योगहीनास्तु पक्वा योगेन देहिनः ।
सर्वो योगाग्निनादेहो ह्यजडः शोकवर्जितः ॥ २६ ॥
जडस्तु पार्थिवो ज्ञेयो ह्यपक्वो दुःखदो भवेत् ।

'ஞான நிஷ்டோऽ விரக்தோऽபி தர்மஜ்ஞோऽ விஜிதேந்த்ரியঃ
விநா தேஹோऽபியோகேன ந மோக்ஷம் லபதே விதே.
அபக்வாঃ பரிபக்வாஶ்ச தேஹினோ த்விவிதாঃ ஸ்ம்ருதாঃ
அபக்வா யோகஹீனஸ்து பக்வா யோகேன தேஹினঃ
ஸர்வோ யோகாக்னினா தேஹோ ஹ்யஜடঃ ஶோகவர்ஜிதঃ
ஜடஸ்து பார்திவோஜ்ஞேயோ ஹ்யபக்வோ துக்கதோ
[பவேத்'

பொ - ரை :—கற்பனையறிவிற் சிறந்தவனும் பற்றறுதவனும் அறநெறிகளறிந்தவனும் புலன் வழிப்போக் கொழியாதவனும் உடற்பற்று நீங்காதவனும் யோகப் பயிற்சியின்றி வீடுபெறான். ஜீவர்கள் பண்பட்டவர்கள் பண்படாதவர்கள் என இருவகையாய்க் கருதப்படுகின்றனர். யோகப் பயிற்சியில்லாதவர்கள் பண்படாதவர்கள். யோகப்பயிற்சி உள்ளவர்கள் பண்பட்டவர்களாம். உடலனைத்தும் யோகத்திலுண்டான வெப்பத்தால் வாட்டமற்ற ஒளியுருவாதல் வேண்டும். அறிவின்மையாவது மண்ணின் கூறென அறியத்தக்கது. அவ்வாறு யோகத்தால் பண்பெறாத உடல் துன்பத்தையே தந்துவிடும். (26)

அ - கை:—போலி ஞானிகளுக்குத் துன்ப நீக்கமில்லை எனக் கூறல்.

ध्यानस्थोऽसौ तथाऽप्येवमिन्द्रियै विवशो भवेत् ॥ २७ ॥
तानि गाढं नियम्यापि तथाऽप्यन्यैः प्रबाध्यते ।
शीतोष्णसुखदुःखाद्यैर्व्याधिभिर्मानसैस्तथा ॥ २८ ॥
अन्यै र्नानाविधै र्जीवैःशस्त्राग्निजलमारुतैः ।
शरीरं पीड्यते तैस्तैश्चित्तं संक्षुभ्यते ततः ॥ २९ ॥

तथा प्राणविपत्तौ तु क्षोभमायाति मारुतः ।
ततो दुःखशतैर्व्याप्तं चित्तं क्षुब्धं भवेन्नृणाम् ॥ ३० ॥

'த்யானஸ்தோऽஸௌ ததாப்யேவ மிந்த்ரியைர்விவஶோ [பவேத்
தானி காடம் நியம்யாபி ததாப்யன்யைஃ ப்ரபாத்யதே.
ஶீதோஷ்ண ஸுகதுக்காத்யைர் வ்யாதிபிர் மானஸைஸ் ததா
அன்யைர் நானாவிதைர் ஜீவைஃ ஶஸ்த்ராக்னி ஜல மாருதைஃ
ஶரீரம் பீட்யதே தைஸ்தைஶ் சித்தம் ஸம்க்ஷுப்யதே ததஃ
ததா ப்ராணவிபத்தௌ து க்ஷோபமாயாதி மாருதஃ
ததோ துக்க ஶதைர் வ்யாப்தம் சித்தம் க்ஷுப்தம் பவேந் [ந்ருணாம்,'

போ - ரை :—பண்படாதவன் பண்பட்டவன் போன்று தியானத்தில் அமரினும் இவ்வாறு புலன்களால் இழுக்கப்படுவன். அவைகளை உறுதியாய் அடக்கினும் மற்றைக் குளிர், வெப்பம், இன்பம், துன்பம், முதலியவற்றாலும், பல நோய்களாலும், மனதிலுண்டான காம முதலியவற்றாலும், அவ்வாறே வேறுபல உயிர்களாலும், ஆயுதங்களாலும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் இவைகளாலும் துன்பமே அடைவன். மேற்சொன்ன அந்தந்த இடையூறுகளால் உடல் நைகிறது. அதனால் மனம் மிகக் குழம்புகிறது. அவ்வாறே உயிருக்கு இறுதியுண்டாகில் குழப்பத்துடன் பெருமூச்சே உளதாகிறது. ஆகையால் மக்களது மனம் நூற்றுக்கணக்கான துன்பங்களால் சூழப்பெற்றதாய் கலங்கி நிற்பதாகிறது. (30)

இதுவுமது,

देहावसानसमये चित्ते यद्यद्विभावयेत् ।
तत्तदेव भवेज्जीव इत्येवं जन्मकारणम् ॥ ३१ ॥

देहान्ते किं भवेज्जन्म तन्न जानन्ति मानवाः ।
तस्माज्ज्ञानं च वैराग्यं जीवस्य केवलं श्रमः ३२ ॥
पिपीलिका यदा लग्ना देहे ध्यानाद्विमुच्यते ।
असौ किं वृश्चिकैर्दष्टो देहान्ते वा कथं सुखी ॥ ३३ ॥
तस्मान्मूढा न जानन्ति मिथ्यातर्केण वेष्टिताः ।

'தேஹாவஸான ஸமயே சித்தே யத்யத் விபாவயேத்
தத் ததேவ பவேஜ் ஜீவ இத்யேவம் ஜன்மகாரணம்.
தேஹாந்தே கிம் பவேஜ் ஜன்ம தந்ந ஜானந்தி மானவாஃ
தஸ்மாஜ் ஞானஞ்ச வைராக்யம் ஜீவஸ்ய கேவலம் ஶ்ரமஃ
பிபீலிகா யதா லக்ந தேஹே த்யானாத் விமுச்யதே.
அஸௌ கிம் வ்ருஶ்சிகைர் தஷ்டோ தேஹாந்தேவா
[கதம் ஸுகீ
தஸ்மான் மூடா நஜானந்தி மித்யா தர்கேண வேஷ்டிதாஃ'

போ - ரை :—உடல் அழிவுறும் சமயத்து மனதில் எந்த எந்த விழைவு உளதாமோ, அந்தந்த விழைவிற்கேற்பவே ஜீவன் பிறப்பெய்துவன். என இவ்வாறு பிறவியின் காரணம் கூறப்பட்டது. உடம்பு அழிவுறுங்கால் உண்டான நினைவின் வழியே பிறவியெய்தும். அதை மக்கள் அறிகின்றனரில்லை. ஆகையால் யோகமின்றிய ஞானமும் வைராக்யமும் மிக்க அலுப்பேயாம். உடலில் எறும்புகள் எப்பொழுது மொய்க்கின்றனவோ, அப்பொழுதே தியானத்திலிருந்து நீங்குகின்றான். அவன் பிறகு தேள்களால் கடிக்கப்படின் எங்ஙனம் தியானிப்பன். உடலிறுதியிற்றான் எங்ஙனம் சுகமுள்ளவனவன். ஆகையால் பொய்யான எண்ணத்தால் மறைபட்ட மூடர்கள் உண்மை நெறியை அறியார்கள். (33)

அ - கை :—தானல்லாததைத் தானெனக் கருதும் தடிப்பே கேடனைத்திற்கும் காரணமெனக் கூறல்.

अहंकृतिर्यदा यस्य नष्टा भवति तस्य वै ॥ ३४ ॥
देहस्त्वपि भवेन्नष्टो व्याधयश्चास्य किं पुनः ।
जलाग्निशस्त्रखातादिबाधा कस्य भविष्यति ॥ ३५ ॥
यदा यदा परिक्षीणा पुष्टा चाहंकृति र्भवेत् ।
तदा तदास्य नश्यन्ति प्रवर्तन्ते रुगादयः ॥ ३६ ॥
कारणेन विना कार्यं न कदाचन विद्यते ।
अहंकारं विना तद्वद्देहे दुःखं कथं भवेत् ॥ ३७ ॥

'அஹங்க்ருதிர் யதா யஸ்ய நஷ்டா பவதி தஸ்ய வை
தேஹஸ்த்வபி பவேந் நஷ்டோ வ்யாதயஸ்சாஸ்ய கிம் புனஃ
ஜலாக்னி ஶஸ்த்ர காதாதி பாதா கஸ்ய பவிஷ்யதி
யதா யதா பரிக்ஷீணா புஷ்டாசாஹங்க்ருதிர் பவேத்
ததா ததாஸ்ய நஸ்யந்தி ப்ரவர்தந்தே ருகாதயஃ
காரணேன வினா கார்யம் நகதாசன வித்யதே
அஹங்காரம் வினா தத்வத் தேஹே துக்கம் கதம் பவேத்'

பொ - ரை :—எவனுக்கு நானென்ற தடிப்பு இறந்துவிட்டதோ, அவனுக்கு உடலிருப்பினும் இறந்ததேயாம். பின்னர் உடல் இறந்ததற்கு நோய்கள் எங்ஙனம் உறுவன. நீர், நெருப்பு, அம்பு, கடி, முதலிய துன்பம் எதற்கு உளதாம். நானென்றஎண்ணம் எவ்வெப்பொழுது சுருங்கியும் விரிந்தும் தோன்றுமோ, அவ்வப்பொழுது சுருங்கலால் இவனுக்கு நோய் முதலியன அழிகின்றன. விரிதலால் அவைகள் இவனைத் தொடருகின்றன. முதலின்றி ஒருகாலும் தொழில் நிகழ்வதில்லை. அதுபோல் நானென்ற தடிப்பின்றி உடலில் துன்பம் எவ்வாறுண்டாம். (37)

அ - ணக :—யோக சித்தியுள்ளவனுக்கு ஈசுவரநிலையும், ஜீவன்முக்தி நிலையும், உளதாகின்றன எனக் கூறல்.

शरीरेण जिताः सर्वे शरीरं योगिभिर्जितम् ।
तत्कथं कुरुते तेषां सुखदुःखादिकं फलम् ॥ ३८ ॥
इन्द्रियाणि मनोबुद्धिः कामक्रोधादिकं जितम् ।
तेनैव विजितं सर्वं नासौ केनापि बाध्यते ॥ ३९ ॥
महाभूतानि तत्वानि संहृतानि क्रमेण च ।
सप्तधातुमयो देहो दग्धो योगाग्निनाशनैः ॥ ४० ॥

ஶரீரேண ஜிதா: ஸர்வே ஶரீரம் யோகிபிர் ஜிதம்
தத் கதம் குருதே தேஷாம் ஸுகதுக்காதிகம் பலம்
இந்த்ரியாணி மனோ புத்தி: காமக்ரோதாதிகம் ஜிதம்
தேனைவ விஜிதம் ஸர்வம் நாஸௌ கேனபி பாத்யதே
மஹாபூதானி தத்வானி ஸம்ஹ்ருதானி க்ரமேண ச
ஸப்த தாது மயோ தேஹோ தக்தோ யோகாக்னினா ஶனை:

பொ-ரை :—உடலால் எல்லோரும் வெல்லப்பட்டனர். யோகிகளால் உடல் வெல்லப்பட்டது. வெல்லப்பட்ட அந்த உடல் அவர்களுக்குத் துன்ப முதலிய பலனை எங்ஙனம் செய்வதாகும். அந்தயோகி ஒருவனாலேயே புலன்கள், மனம், புத்தி, ஆசை, வெகுளி, முதலிய யாவும் வெல்லப்பட்டன. ஆகையால் அவன் எதனாலும் துன்புறுவதில்லை. ஐம்பூத முதலிய தத்துவக் கூட்டங்கள் முறையாக ஒடுக்கப்பட்டன. ஏழு தாதுக்கள் வடிவ உடல் யோக நெருப்பால் மெல்ல எரிக்கப்பட்டது. (40)

இதுவுமது,

देवैरपि न लक्ष्येत योगिदेहो महाबलः ।
भेदबन्धविनिर्मुक्तो नानाशक्तिधरः परः ॥ ४१ ॥
यथाकाशस्तथा देह आकाशादपि निर्मलः ।
सूक्ष्मात्सूक्ष्मतरो दृश्यः स्थूलात्स्थूलो जडाजडः ॥ ४२ ॥
इच्छारूपो हि योगीन्द्रः स्वतन्त्रस्त्वजरामरः ।
क्रीडते त्रिषु लोकेषु लीलया यत्र कुत्रचित् ॥ ४३ ॥

'தேவைரபி ந லக்ஷ்யேத யோகிதேஹோ மஹாபலஃ
பேதபந்த விநிர்முக்தோ நாநாஶக்தி தரஃ பரஃ
யதாகாஶஸ் ததா தேஹ ஆகாஶாதபி நிர்மலஃ
ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரோ த்ருஶ்யஃ ஸ்தூலாத் ஸ்தூலோ [ஜடாஜடஃ
இச்சா ரூபோ ஹி யோகீந்த்ரஃ ஸ்வதந்த்ரஸ்த்வஜராமரஃ
க்ரீடதே த்ரிஷு லோகேஷு லீலயா யத்ர குத்ரசித்'

பொ - ரை :—வேற்றுமையாகிய கட்டினின்றும் விடுபட்டதும், சிறந்த பல ஆற்றலைப் பெற்றதும், மிக்க வலிமையுள்ளதுமான யோகியின் உடல் தேவர்களாலும் அறியப் படுவதில்லை. ஆகாயம் எப்படியோ அப்படி யோகியின் உடல் உள்ளது. ஆகாயத்தைக் காட்டிலும் தூய்மையானது. நுண்ணியதினும் மிக்க நுண்ணியதாய் காணத்தக்கது. பெரிதினும் பெரிதாம். ஜடப்பொருளினும் ஜடப்பொருளாம். தன்னிஷ்டப்படியுள்ள யோகிகளின் தலைவன் விரும்பிய வுருவத்தை எடுத்துக் கொண்டு மூப்பு, மரணமின்றி மூவுலகங்களிலும் எங்கேயாவது எளிதாய் விளையாடுகின்றான். (43)

अचिन्त्यशक्तिमान्योगी नानारूपाणि धारयेत् ।
संहरेच्च पुनस्तानि स्वेच्छया विजितेन्द्रियः ॥ ४४ ॥
नासौ मरणमाप्नोति पुनर्योगबलेन तु ।
हठेन मृत एवासौ मृतस्य मरणं कुतः ॥ ४५ ॥
मरणं यत्र सर्वेषां तत्रासौ परिजीवति ।
यत्र जीवन्ति मूढास्तु तत्रासौ मृत एव वै ॥ ४६ ॥
कर्तव्यं नैव तस्यास्ति कृतेनासौ न लिप्यते ।
जीवन्मुक्तः सदा स्वच्छः सर्वदोषविवर्जितः ॥ ४७ ॥

'அசிந்த்ய ஶக்திமான் யோகீ நாநாரூபாணி தாரயேத்
ஸம்ஹரேச்ச புனஸ் தானி ஸ்வேச்சயா விஜிதேந்த்ரியஃ
நாஸௌ மரணமாப்னோதி புனர் யோகபலேனது
ஹடேன ம்ருத ஏவாஸௌ ம்ருதஸ்ய மரணம் குதஃ
மரணம் யத்ர ஸர்வேஷாம் தத்ராஸௌ பரிஜீவதி
யத்ர ஜீவந்தி மூடாஸ்து தத்ராஸௌ ம்ருத ஏவ வை
கர்தவ்யம் நைவ தஸ்யாஸ்தி க்ருதேனஸௌ நலிப்யதே,
ஜீவன் முக்தஃ ஸதா ஸ்வச்சஃ ஸர்வதோஷ விவர்ஜிதஃ''

பொ - ரை:—எண்ணுதற்கரிய வலிமை பெற்ற யோகி பல உடல்களை எடுத்துக் கொள்வான். புலன்களை வென்ற அவன் தன்னிச்சையால் அவைகளை மீண்டும் ஒடுக்கிக்கொள் வன். யோகவன்மையால் அவன் மீண்டும் மறிப்பதில்லை. அடத்தால் அவன் இறந்தவனேயாவன். இறந்தவனுக்கு இறப்பு எவ்வாறுண்டாம். எல்லோருக்கும் எதில் மாண முளதோ, அதில் அவன் உயிருடன் வாழ்வன். எதில் மூடர் கள் வாழ்கின்றனரோ, அதில் அவன் இறந்தவனகவே இருப்

பன். அவனுக்குச் செய்யத்தக்கது ஒன்றுமே இல்லை. செய லோடு அவன் ஒட்டுவது மில்லை. எல்லாக் குற்றங்களினின்றும் நீங்கி தூய்மை யுள்ளவனாய் என்றும் ஜீவன் முக்தனாகவே உளன். (47)

அ - கை :—போலி ஞானிகளை இகழ்தல்.

विरक्ता ज्ञानिनश्चान्ये देहेन विजिताः सदा ।
ते कथं योगिभिस्तुल्या मांसपिण्डाः कुदेहिनः ॥४८॥
देहान्ते ज्ञानिभिः पुण्यात्पापाच्च फलमाप्यते ।
ईदृशं तु भवेत्तत्तद्भुक्त्वा ज्ञानी पुनर्भवेत् ॥ ४९ ॥

'விரக்தா ஜ்ஞானினஶ்சான்யே தேஹேன விஜிதாஃ ஸதா
தே கதம் யோகிபிஸ்துல்யா மாம்ஸபிண்டாஃ குதேஹினஃ
தேஹாந்தே ஜ்ஞானிபிஃ புண்யாத் பாபாச்ச பலமாப்யதே
ஈத்ருஶம் து பவேத் தத்தத் புக்த்வா ஞானீ புனர் பவேத்'

பொ - ரை :—மிக்க பற்றுள்ளவர்களும் ஞானியாக நடிப் பவர்களுமான மற்றவர்கள் என்றும் உடலால் வெல்லப்பட்ட வர்களாவர். நிந்திக்கத்தற்கான உடலுள்ள தசைப் பிண்டங்க ளான அவர்கள் எங்ஙனம் யோகிகளோடு ஒப்பாவார்கள். உடலிறுதியில் போலி ஞானிகளால் நல்வினை தீவினைகளின் பயன் நுகரப்படுகிறது. இங்ஙனம் அந்தந்த வினைப்பயனை நுகர்ந்தவனாய் மறிப்பன். போலியறிவினன் மீண்டும் பிறப்பன். (49)

அ - கை :—அவர்களுக்குச் சித்தர்களின் சேர்க்கையால் நற்பயனுண்டாமெனக் கூறல்.

पश्चात्पुण्येन लभते सिद्धेन सह सङ्गतिम् ।
ततः सिद्धस्य कृपया योगी भवति नान्यथा ॥ ५० ॥
ततो नश्यति संसारो नान्यथा शिवभाषितम् ।

'பஸ்சாத் புண்யேன லபதே ஸித்தேன ஸஹ ஸங்கதிம்
ததஃ ஸித்தஸ்ய க்ருபயா யோகீ பவதி நான்யதா
ததோ நஸ்யதி ஸம்ஸாரோ நான்யதா சிவபாஷிதம்'

போ - ரை:—பிறகு நல்வினைப்பயனால் நல்ல சித்தனோடு கூட்டுறவு உளதாகிறது. அக்கூட்டுறவால் சித்தனது அருளால் யோகநிலை பெறுகின்றான். வேறு வழியால் ஆவதன்று. அந்த யோகப் பயிற்சியால் ஸம்சாரம் அதாவது பிறவித் தொடர் அறுபடுகின்றது. வேறு வழியால் ஆவதன்று. எனச் சிவனால் சொல்லப்பட்டது. (50)

அ - கை :—ஞானயோகங்கள் ஒன்றற்கொன்று உதவியாமெனக் கூறல்.

योगेन रहितं ज्ञानं न मोक्षाय भवेद्विधे ।
ज्ञानेनैव विना योगो न सिद्ध्यति कदाचन ॥ ५१ ॥

யோகேன ரஹிதம் ஜ்ஞானம் ந மோக்ஷாய பவேத் விதே
ஜ்ஞானேனைவ வினா யோகோ ந ஸித்யதி கதாசன.

போ - ரை :—பிரமாவே! யோகமின்றிய ஞானம் முக்தியின் பொருட்டு ஆவதில்லை. ஞானமின்றிய யோகமுமே ஒருக்காலும் மோக்ஷசித்தியைத் தருவதில்லை. (51)

அ - கை :—யோகமே சிறந்த முக்தி வழியெனக் கூறல்.

जन्मान्तरैश्च बहुभिर्योगो ज्ञानेन लभ्यते ॥ ५२ ॥
ज्ञानं तु जन्मनैकेन योगादेव प्रजायते ।
तस्माद्योगात्परतरो नास्ति मार्गस्तु मोक्षदः ॥ ५३ ॥

प्रविचार्य चिरं ज्ञानं मुक्तोऽहमिति मन्यते ।
किमसौ मननादेव मुक्तो भवति तत्क्षणात् ॥ ५४ ॥
पश्चाज्जन्मान्तरशतैर्योगादेव विमुच्यते ।
न तथा भवतो योगाज्जन्म मृत्यू पुनःपुनः ॥ ५५ ॥

ஜன்மாந் தரைஶ்ச பஹுபிர் யோகோ ஜ்ஞானேன லப்யதே
ஜ்ஞானந்து ஜன்மனைகேன யோகாதேவ ப்ரஜாயதே
தஸ்மாத் யோகாத் பரதரோ நாஸ்தி மார்கஸ்து மோக்ஷதஃ
ப்ரவிசார்ய சிரம் ஞானம் முக்தோऽஹமிதி மந்யதே
கிமஸௌ மனனாதேவ முக்தோ பவதி தத்க்ஷணாத்
பஶ்சாஜ் ஜன்மாந்தர ஶதைர் யோகாதேவ விமுச்யதே
ந ததா பவதோ யோகாஜ் ஜன்ம ம்ருத்யூ புனஃ புனஃ

போ - ரை :—அனேகம் பிறவிகளில் ஈட்டிய ஞானத்தால் யோகம் அடையப்படுகிறது. ஞானமோவெனில் ஒரு பிறவியிலேயே யோகத்தால் உண்டாகின்றது. ஆகையால் வீட்டின்பத்தைத் தருவது யோகத்திலும் சிறந்த வழியில்லை. நீண்டநாள் ஞானத்தை நன்கு ஆய்ந்து நான் முக்தன் என்று எண்ணுகின்றான். எண்ணுவதாலேயே அத்தணை விரைவில் இவன் முக்தனுவானு என்ன? ஆகான் என்பதாம். பின்னர் நூற்றுக்கணக்கான பிறவிகளில் பழகிய யோகத்தாலேயே விடுபடுகின்றான். யோகத்தால் பிறப்பு இறப்புகள் அவ்வாறு மீண்டும் மீண்டும் உண்டாவன அல்ல. (55)

இதுவுமது

प्राणापानसमायोगश्चन्द्रसूर्यैकता भवेत् ।
सप्तधातुमयं देहमग्निना रञ्जयेद्ध्रुवम् ॥ ५६ ॥

व्याधयस्तस्य नश्यन्ति छेदखातादि का कथा ।
तदसौ परमाकाश रूपो देह्यवतिष्ठति ॥ ५७ ॥
किं पुनर्बहुनोक्तेन मरणं नास्ति तस्य वै ।
देहिवद् दृश्यते लोके दग्धकर्पूरवत्स्वयम् ॥ ५८ ॥

*'ப்ராணபான ஸமாயோகஸ் சந்த்ர ஸூர்யைகதா பவேத்*
*ஸப்த தாதுமயம் தேஹ மக்னிர் ரஞ்ஜயேத் த்ருவம்*
*வ்யாதயஸ் தஸ்ய நஶ்யந்தி சேதகாதாதி கா கதா*
*ததஸௌ பரமாகாஶ ரூபோ தேஹ்யவதிஷ்டதி*
*கிம்புனர் பஹுனோக்தேன மரணம் நாஸ்தி தஸ்ய வை*
*தேஹிவத் த்ருஶ்யதே லோகே தக்த கர்பூரவத் ஸ்வயம்.'*

போ - ரை :—யோகமானது பிராணபானன்களை ஒன்றுக்குவதும், சந்திர சூரியர்களைச் சேர்த்து வைப்பதுமாகும். மற்றும் ஏழு தாதுக்கள் வடிவ உடலை விரைவில் சிவக்கச் செய்கின்றதெனன்பது அறிக. மற்றும் உடலுக்கு நோய்களும் வெட்டுதல் புதைத்தல் முதலியனவும் ஒழிகின்றன. ஆகையால் அத்தகைய யோகசித்தி யுடையவன் பெருவெளியுருக் கொண்டு நிற்கின்றான். மீண்டும் விரித்துரைப்பதாற் பயன் என்? அவனுக்கு மரணமென்பதே இல்லை. அவன் எரிந்த கற்பூரம் போன்று தானே உருவிழந்து நிற்பன். ஆயினும், உலகில் உடலோடு உள்ளவன் போன்று காணப்படுகின்றான். (58)

அ - கை :—யோகப் பயிற்சியுள்ள மனத்திற்கே ஆன்ம ஞானம் உண்டாம் எனக் கூறல்.

चित्तं प्राणेन संबद्धं सर्वजीवेषु संस्थितम् ।
रज्ज्वा यद्वत्सुसंबद्धः पक्षी तद्वदिदं मनः ॥ ५९ ॥

नानाविधैर्विचारैस्तु न बाध्यं जायते मनः ।
तस्मात्तस्य जयोपायः प्राण एव हि नान्यथा ॥ ६० ॥
तर्कैर्जल्पैः शास्त्रजालैर्युक्तिभिर्मन्त्रभेषजैः ।
न वशो जायते प्राणः सिद्धोपायं विना विधे ॥ ६१ ॥

'சித்தம் ப்ராணேன ஸம்பத்தம் ஸர்வ ஜீவேஷு ஸம்ஸ்திதம்
ரஜ்ஜ்வா யத்வத் ஸுஸம்பத்த: பக்ஷீ தத்வதிதம் மன:
நாநாவிதைர் விசாரைஸ்து நபாத்யம் ஜாயதே மன:
தஸ்மாத் தஸ்ய ஜயோபாய: ப்ராண ஏவ ஹி நான்யதா
தர்கைர் ஜல்பை: ஶாஸ்த்ர ஜாலைர் யுக்திபிர் மந்த்ர பேஷஜை:
ந வஶோ ஜாயதே ப்ராண: ஸித்தோபாயம் விநா விதே'

போ - ரை :—பிரம்மாவே! சித்தமானது பிராணனால் உண்டுபண்ணப்பட்டதாய், எல்லாச் சீவர்களிடத்திலும் நிலை பெற்றுள்ளது. கயிற்றால் நன்கு கட்டப்பட்ட பறவை எங்ஙனமோ, அங்ஙனம் இம்மனம் பிராணனால் கட்டப் பட்டுளது. பல்வேறு சரித்திரச் சிந்தனைகளால் மனம் தடுக் கப்படமாட்டாது. ஆகையால் அதை வெல்லும் வழி பிராண னைத் தடுப்பதால் சித்திப்பதாகும். வேறு வழியால் ஆவ தன்று. அதுவும் சித்தர்கள் கூறும் வழியன்றி வேறு கேள்வி களால், பேச்சுக்களால், சரித்திரக் கூட்டங்களால், யுக்தி களால், மந்திரங்களால், மூலிகைகளால் பிராணன் வசப்பட மாட்டாது.

இதுவுமது

उपायं तमविज्ञाय योगमार्गे प्रवर्तते ।
खण्डज्ञानेन सहसा जायते क्लेशवत्तरः ॥ ६२ ॥

योऽजित्वा पवनं मोहाद्योगमिच्छति योगिनाम् ।
सोऽपक्कं कुम्भमारुह्य सागरं तर्तुमिच्छति ॥ ६३ ॥
यस्य प्राणो विलीनोऽन्तः साधके जीविते सति ।
पिण्डो न पततिस्तस्य चित्तं दोषैः प्रबाध्यते ॥ ६४ ॥

'உபாயம் தமவிஜ்ஞாய யோகமார்கே ப்ரவர்தடே
கண்ட ஜ்ஞானேன ஸஹஸா ஜாயதே க்லேஶவத்தர:
யோऽஜித்வா பவனம் மோஹாத் யோகமிச்சதி யோகினம்
ஸோऽபக்வம் கும்பமாருஹ்ய ஸாகரம் தர்து மிச்சதி
யஸ்ய ப்ராணோ விலீனோऽந்த: ஸாதகே ஜீவிதே ஸதி
பிண்டோ நபததிஸ் தஸ்ய சித்தம் தோஷை: ப்ரபாத்யதே'

பொ - ரை —அச்சித்தனது வழியை அறியாது யோக நெறியில் முயல்கின்றவனுக்கு துண்டித்த அறிவால் மிகுந்த அலுப்பே பயனாக முடிகின்றது. யோகத்தைப் பயில்பவர்களுள் எவன் காற்றை வெல்லும் வழியறியாது யோகத்தை விரும்புகின்றானோ, அவன் வேகாத மட்கடத்தைப் பற்றி கடலைத் தாண்ட விரும்புகின்றவனாவன். உயிருடன் உள்ள பொழுது எவனுக்குப் பிராணன் உள்ளத்து ஒடுங்கியதாமோ, அவனுக்கு இவ்வுடலாகிய கூடு விழுவதில்லை, சித்தம் குற்றங்களால் தாக்கப் படுவதுமில்லை. (64)

அ - கை :—முதலில் யோகப் பயிற்சியே கற்க வேண்டுமெனக் கூறல்.

शुद्धे चेतसि तस्यैव स्वात्मज्ञानं प्रकाशते ।
तस्माज्ज्ञानं भवेद्योगाज्जन्मनैकेन पद्मज ॥ ६५ ॥
तस्माद्योगं तमेवादौ साधको नित्यमभ्यसेत् ।
मुमुक्षुभिः प्राणजयः कर्तव्यो मोक्षहेतवे ॥ ६६ ॥

'ஶுத்தே சேதஸி தஸ்யைவ ஸ்வாத்மஜ்ஞானம் ப்ரகாஶதே·
தஸ்மாஜ் ஞானம் பவேத் யோகாஜ் ஜன்மனைகேன பத்மஜ
தஸ்மாத் யோகம் தமேவாதௌ ஸாதகோ நித்ய மப்யஸேத்·
முமுக்ஷுபிঃ ப்ராணஜயঃ கர்தவ்யோ மோக்ஷ ஹேதவே.'

போ - ரை :—பிரம்மாவே! தூய சித்தமுள்ளவனுக்கே ஆன்ம அறிவு ஒளிருகின்றது. அந்தச் சித்தத் தூய்மை யோகப் பயிற்சியால் உளதாகின்றது. அச்சித்தத் தூய்மையால் ஞானம் ஒரு பிறவியில் உண்டாகின்றது, ஆகையால் நன்முயற்சியுடன் எப்பொழுதும் அந்த யோக நெறியைப் பழகுவானாக. வீடுபெறும் வேட்கையுள்ளவர்களால் முதலில் பிராணனது வெற்றியே விரும்பத்தக்கது. (66)

இதுவுமது,

योगात्परतरं पुण्यं योगात्परतरं शिवम् ।
योगात्परतरं सूक्ष्मं योगात्परतरं न हि ॥ ६७ ॥
योऽपानप्राणयोरैक्यं रजसो रेतसस्तथा ।
सूर्याचन्द्रमसोर्योगं जीवात्मपरमात्मनोः ॥ ६८ ॥
एवं हि द्वन्द्वजालस्य संयोगो योग उच्यते ।

'யோகாத் பரதரம் புண்யம் யோகாத் பரதரம் ஶிவம்
யோகாத் பரதரம் ஸூக்ஷ்மம் யோகாத் பரதரம் நஹி
யோऽபான ப்ராணயோரைக்யம் ரஜஸோ ரேதஸஸ் ததா
ஸூர்யாசந்த்ர மஸோர் யோகம் ஜீவாத்ம பரமாத்மனோঃ
ஏவம் ஹி த்வந்த்வ ஜாலஸ்ய ஸம்யோகோ யோக உச்யதே.'

போ - ரை —யோகத்தினும் மிகச் சிறந்தது புண்ணியம், யோகத்தினும் மிகச் சிறந்தது சிவம். யோகத்தினும் மிகச் சிறந்தது நுண்மை. ஆகையால் யோகத்தினும் மிகச் சிறந்தது·

இல்லை. எவன் பிராணுபானன்களின் சேர்க்கையை அறிவனோ, அவன் சுக்ல ரஜசுகளின் சேர்க்கையை அறிவன். எவன் சூரிய சந்திரர்களின் சேர்க்கையை அறிவனோ, அவன் ஜீவான்ம பரமான்மாக்களின் ஐக்கியத்தை அறிவன் என்பது தெளிக. இவ்வாறு இருவகைக் கூட்டத்தின் சேர்க்கையே யோகமெனச் சொல்லப்பட்டது. (68)

அ - கை :—இனி யோகத்தின் முடிபு கூறல்.

अथ योगशिखां वक्ष्ये सर्वज्ञानेषु चोत्तमाम् ॥ ६९ ॥
यदानुध्यायते मन्त्रं गात्रकम्पोऽथ जायते ।
आसनं पद्मकं बद्ध्वा यच्चान्यदपि रोचते ७० ॥
नासाग्रे दृष्टिमारोप्य हस्तपादौ च संयतौ ।
मनः सर्वत्र संगृह्य ॐकारं तत्र चिन्तयेत् ॥ ७१ ॥
ध्यायते सततं प्राज्ञो हृत्कृत्वा परमेश्वरम् ।
एकस्तम्भे नवद्वारे त्रिस्थूणे पञ्चदैवते ॥ ७२ ॥
ईदृशे तु शरीरे वा मतिमान्नोपलक्षयेत् ।

'அத யோக ஶிகாம் வக்ஷ்யே ஸர்வஜ்ஞானேஷு [சோத்தமாம்
யதானுத்யாயதே மந்த்ரம் காத்ரகம்போத ஜாயதே
ஆஸனம் பத்மகம் பத்த்வா யச்சான்யதபி ரோசதே
நாஸாக்ரே த்ருஷ்டிமாரோப்ய ஹஸ்த பாதௌச ஸம்யதௌ
மன: ஸர்வத்ர ஸங்க்ருஹ்ய ஓங்காரம் தத்ர சிந்தயேத்
த்யாயதே ஸததம் ப்ராஜ்ஞோ ஹ்ருத்க்ருத்வா பரமேஶ்வரம்
ஏகஸ்தம்பே நவத்வாரே த்ரிஸ்தூணே பஞ்சதைவதே
ஈத்ருஶேது ஶரீரே வா மதிமான் னோபலக்ஷயேத்.'

போ - ரை:—பிறகு ஞானங்கள் எவற்றினும் சிறந்த யோகத்தின் முடிவை கூறுகின்றேன் கேட்பாயாக. யோகத்தைப் பயில்கின்றவன் பதுமாசனத்திலோ, அல்லது பிரியமான ஆசனத்திலோ அமர்ந்து, கைகால்களை ஒடுக்கி பார்வையை மூக்கு நுனியில் செலுத்தி, மனதை எங்கும் செல்லாது தடுத்து, அம்மனத்தில் எப்பொழுதும் பிரணவ மந்திரத்தை ஜெபிப்பானாக. அங்ஙனம் ஜெபிப்பதால் முதலில் உடல் நடுக்கமுள்ளதாகின்றது. அறிஞர்கள் பிரணவ வடிவ சிவனை இதயத்தில் வைத்து இடையறாது சிந்திக்கின்றார்கள். அங்ஙனம் செய்யும்பொழுது பிரம்ம நாடியாகிய ஒரு கம்பமுள்ளதும், ஒன்பது வாயிலுள்ளதும், இடை பிங்கலை சுழுமுனையாகிய மூன்று தூணுள்ளதும், ஐம்பூத வடிவானதும், ஐந்து தேவதைகளை யுடையதுமான இந்தஉடலாகிய வீட்டில் அறிஞன் கருத்தைச் செலுத்தாது இருப்பானாக. (72)

அ - கை:—இருதயத்தில் சிவனை இங்ஙனம் தியானிக்க வேண்டுமெனக் கூறல்.

आदित्यमण्डलाकारं रश्मिज्वालासमाकुलम् ॥ ७३ ॥
तस्य मध्यगतं वह्निं प्रज्वलेद्दीपवर्तिवत् ।
दीपशिखा तु या मात्रा सा मात्रा परमेश्वरे ॥ ७४ ॥

'ஆதித்ய மண்டலாகாரம் ரஸ்மிஜ்வாலா ஸமாகுலம்
தஸ்ய மத்ய கதம் வஹ்னிம் ப்ரஜ்வலேத் தீபவர்திவத்
தீபசிகாது யா மாத்ரா ஸா மாத்ரா பரமேஸ்வரே.'

போ - ரை:—இதயத்தில் ஒளிக்கிரணங்களால் சூழப் பெற்ற சூரியன் உளன். அச் சூரியன் உருண்டை வடிவானவன். சூரியன் நடுவில் அக்கினியுளது. அவ்வக்கினியை விளக்கின் திரியிலுள்ள சுடர்போன்று எரியச் செய்வானாக.

பிறகு அக்நிப் சுடர்போன்று இதயத்தில் சிவத்தைத் தியானஞ் செய்வானாக. (74)

அ - கை :—யோகப் பயிற்சியால் முடிந்த பதத்தை அறிகின்றான் எனக் கூறல்.

भिन्दन्ति योगिनः सूर्यं योगाभ्यासेन वै पुनः ।
द्वितीयं सुषुम्नाद्वारं परिशुभ्रं समर्पितम् ॥ ७५ ॥
कपालसंपुटं पीत्वा ततः पश्यति तत्वदम् ।

'பிந்தந்தி யோகினஃ ஸூர்யம் யோகாப்யாஸேன வை புனஃ
த்விதீயம் ஸுஷும்னாத்வாரம் பரிஶுப்ரம் ஸமர்பிதம்
கபால ஸம்புடம் பீத்வா ததஃ பஶ்யதி தத்பதம்.'

பொ - ரை :—யோகிகள் யோகப்பயிற்சியாலேயே சூரியனைத் துளைத்துச் செல்கின்றனர். பின்னர் அவர்களுக்கு மிகத்தூய்மையான சுழுமுனைவழி கிடைக்கப் பெறுகின்றது. அவ்வழியிற் சென்று தலையுச்சியிலுள்ள அமுத மண்டலத்தைப் பருகுகின்றனர். பிறகு தத்பத வடிவ சிவத்தை அறிவாற் கலந்து இன்புறுகின்றனர். (75)

அ - கை :—அத்தகைய ஆற்றலில்லாதவனுக்குப் புண்ய உலகத்தின் அடைவு கூறல்.

अथ तद् ध्यायते जन्तु रालस्याच प्रमादतः ॥ ७६ ॥
यदि त्रिकालमागच्छेत् स गच्छेत्पुण्यसंपदम् ।
पुण्यमेतत्समासाद्य संक्षिप्यकथितं मया ॥ ७७ ॥

'அத தத் த்யாயதே ஜந்து ராலஸ்யாச்ச ப்ரமாததஃ
யதி த்ரிகால மாகச்சேத் ஸ கச்சேத் புண்யஸம்பதம்
புண்யமேதத் ஸமாஸாத்ய ஸம்க்ஷிப்ய கதிதம் மயா.'

போ - ரை :—எந்தப் புருடன் சோம்பலுடனும் தடு மாற்றத்துடனும் அந்தப் பிரணவ வடிவ சிவத்தை அடையுங் கருத்துடன் முக்காலங்களிலும் தியானிப்பனோ, அவன் விண்ணுலகத்திலுள்ள செல்வத்தை அடைகின்றான். இந்த நல்ல விஷயமானது என்னால் சுருக்கியும் பெருக்கியும் உனக்குச் சொல்லப்பட்டது. அறிந்து கொள்வாயாக. (77)

அ - கை :—யோகம் கைவரப் பெற்றவனுக்குத் தன்னறிவு தோன்றுமெனக் கூறல்.

लब्धयोगोऽथ बुध्येत प्रसन्नं परमेश्वरम् ।
जन्मान्तर सहस्रेषु यदा क्षीणं तु किल्बिषम् ॥ ७८ ॥
तदा पश्यति योगेन संसारोच्छेदनं महत् ।

'லப்தயோகோऽத புத்யேத ப்ரஸன்னம் பரமேஶ்வரம்
ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு யதா க்ஷீணந்து கில்பிஷம்
ததா பஶ்யதி யோகேன ஸம்ஸாரோச் சேதனம் மஹத்'

போ - ரை :—ஆயிரக்கணக்கான பிறவிகளில் செய்த யோகப் பயிற்சியால் பாபங்களினின்றும் நீங்கிய நன்மகன் ஓயாது வருத்துகின்ற பிறவியறுதலைக் காண்கின்றான். பின்னர் அவன் தன்னில் வேறில்லாப் பரம்பொருளைத் தெளிவாய் உணர்கின்றான். (78)

அ - கை :—யோகத்தைப் பயில்வதற்காகப் பிராணனை வென்ற ஆசிரியனை அடையவேண்டுமெனக் கூறல்.

अधुना संप्रवक्ष्यामि योगाभ्यासस्य लक्षणम् ॥ ७९ ॥
मरुज्जयो यस्य सिद्धः सेवयेत्तं गुरुं सदा ।
गुरुवक्त्रप्रसादेन कुर्यात्प्राणजयं बुधः ॥ ८० ॥

'அதுனு ஸம்ப்ரவக்ஷ்யாமி யோகாப்யாஸஸ்ய லக்ஷணம்
மருஜ்ஜயோ யஸ்யஸித்தஃ ஸேவயேத் தம் குரும் ஸதா
குருவக்த்ர ப்ரஸாதேன குர்யாத் ப்ராணஜயம் புதஃ.'

போ - ரை:—பிரம்மாவே! இப்பொழுது யோகப் பயிற்சிக்குள்ள இலக்கணம் கூறுகின்றேன், கேட்பாயாக. எந்த ஆசிரியன் பிராணனை வென்றவனே, அவனையே குருவாகக் கொண்டு எப்பொழுதும் தொண்டு செய்வாயாக. பின்னர் அவ்வாசான் வாய்ச்சொல்லாகிய அருளுபதேசத்தால் அறிஞன் பிராணனது வெற்றியைச் செய்வானாக. (80)

அ - கை:—ஸரஸ்வதி என்ற நாடியை அசைக்கும் உபாயங் கூறல்.

वितस्ति प्रमितं दैर्घ्यं चतुरङ्गुल विस्तृतम् ।
मृदुलं धवलं प्रोक्तं वेष्टनाम्बरलक्षणम् ॥ ८१ ॥

'விதஸ்தி ப்ரமிதம் தைர்க்யம் சதுரங்குல விஸ்த்ருதம்
ம்ருதுலம் தவளம் ப்ரோக்தம் வேஷ்டனும்பர லக்ஷணம்.'

போ - ரை:—நாவைச் சுற்றுதற்கு நான்கு விரல் அகலமும், ஒரு சாண் நீளமும், மிருதுவானதும், தூய்மையானதுமான துணியின் இலக்கணம் கூறப்பட்டது. (81)

அ - கை:—குண்டலினியை அசைத்தலால் மூன்று முடிச்சுக்கள் அறுபடுகின்றன எனக் கூறல்.

निरुध्य मारुतं गाढ शक्तिचालन युक्तितः ।
अष्टधा कुण्डलीभूता मृज्वीं कुर्यात्तु कुण्डलीम् ॥ ८२ ॥
पायोराकुञ्चनं कुर्यात्कुण्डलीं चालयेत् तदा ।
मृत्युवक्त्रगतस्यापि तस्य मृत्यु भयं कुतः ॥ ८३॥

एतदेव परं गुह्यं कथितं तु मया तव ।
वज्रासन गतो नित्यमूर्ध्वाकुञ्चन मभ्यसेत् ॥ ८४ ॥

*'நிருத்ய மாருதம் காடம் ஶக்தி சாலன யுக்திதஃ*
*அஷ்டதா குண்டலீபூதா ம்ருஜ்வீம் குர்யாத்து குண்டலீம்*
*பாயோ ராகுஞ்சனம் குர்யாத் குண்டலீம் சாலயேத் ததா*
*ம்ருத்யு வக்த்ர கதஸ்யாபி தஸ்ய ம்ருத்யு பயம் குதஃ*
*ஏததேவ பரம் குஹ்யம் கதிதம்து மயா தவ*
*வஜ்ராஸன கதோ நித்யம் ஊர்த்வாகுஞ்சன மப்யஸேத்.'*

பொ - ரை:—மூலாதாரத்தில் குண்டலி சக்தி எட்டுச் சுற்றாய் வளைந்துள்ளது. அச் சக்தியை உறுதியாக காற்றை உள்ளே தடுத்து, அசைப்பிக்குமுபாயத்தால் நிமிரச் செய்வானாக. மூலத்தை மேலுந்தச் செய்து அப்பொழுதே குண்டலி சக்தியை அசைப்பானாக, இங்ஙனம் பயில்கின்றவன் நமன் வாயில் விழுந்தவனாயினும் அவனுக்கு இறப்பினச்சம் ஏது. ஆகையால் வஜ்ராஸனத்தில் அமர்ந்தவனாய் என்றும் மூலம் மேலெழும்பும்படிப் பயில்வானாக. (84)

இதுவுமது.

वायुना ज्वलितो वह्निः कुण्डलीमनिशं दहेत् ।
संतप्ता साऽग्निना जीव शक्तिस्त्रैलोक्य मोहिनी ॥ ८५ ॥
प्रविशेच्चन्द्रमण्डले तु सुषुम्ना वदनान्तरे ।
वायुना वह्निना सार्धं ब्रह्मग्रन्थि भिनत्ति सा ॥ ८६ ॥
विष्णुग्रन्थिं ततो भित्त्वा रुद्रग्रन्थौ च तिष्ठति ।
ततस्तु कुम्भकैर्गाढं पूरयित्वा पुनःपुनः ॥ ८७ ॥

'வாயுனு ஜ்வலிதோ வஹ்னிஃ குண்டலீமனிஶம் தஹேத்
ஸந்தப்தா ஸா$\,$க்னிநுஜீவ ஶக்திஸ் த்ரைலோக்ய
மோஹினீ
ப்ரவிஶேத் சந்த்ரமண்டலேது ஸுஷும்நு வதநுந்தரே
வாயுநு வஹ்னிநு ஸார்தம் ப்ரஹ்ம க்ரந்திம் பினத்தி ஸா
விஷ்ணுக்ரந்திம் ததோ பித்வா ருத்ரக்ரந்தௌச திஷ்டதி
ததஸ்து கும்பகைர் காடம் பூரயித்வா புனஃ புனஃ,'

பொ - ரை:—அங்ஙனம் பயில்வதால் காற்றால் ஒளி யோடு கிளம்பிய மூலக்கனல் குண்டலி சக்தியைத் தாக்கு கின்றது. அப்பொழுது மூவுலகத்தையும் மயங்கச்செய்யும் சீவசக்தியாகிய அவள் எழுகின்றாள். பிறகு மூலக்கனலால் நன்கு கொளுத்தப்பட்டவளாய் எழுந்து காற்றோடும் நெருப் போடும் சேர்ந்த அவள் சுழுமுனை வழியிலுள்ள பிரம்ம முடிச்சை அறுக்கின்றாள். பிறகு விஷ்ணு முடிச்சையும் அறுத்து, உருத்திர முடிச்சை அடைந்து நிற்கின்றாள். ஆகையால் அடிக்கடி பிராணனைப் பூரித்தும் கும்பித்தும் உறுதியாகப் பயில்வாயாக. (87)

அ - கை:—நான்குவித கும்பகத்தை அப்யசித்து ருத்திரகிரந்தியை உடைக்க வேண்டுமெனக் கூறல்.

अथाभ्यसेत्सूर्यभेद मुज्जायीं चापि शीतलीम् ।
भस्त्रां च सहितो नाम स्याच्चतुष्टय कुम्भकः ॥ ८८ ॥
बन्धत्रयेण संयुक्तः केवल प्राप्तिकारकः ।

'அதாப்யஸேத் ஸூர்யபேத முஜ்ஜாயீம் சாபி ஶீதளீம்
பஸ்த்ராம்ச ஸஹிதோ நாம ஸ்யாச் சதுஷ்டய கும்பகஃ
பந்தத்ரயேண ஸம்யுக்தஃ கேவல ப்ராப்தி காரகஃ'

போ - ரை :—பிறகு சூரியபேதி, உஜ்ஜாயீ, சீதளீ, பஸ்த்ரிகா, என நான்கு கும்பகங்கள் கூறப்படுகின்றன. அதிகாரி இந் நான்கு கும்பகங்களையும் பயில்வானாக. பிறகு காமகிரி, பூர்ணகிரி, ஜாலந்தரமாகிய மூன்றையும் பயில்வதால் தனித்த கும்பகம் சித்தித்து விடுகின்றது. (88)

அ - கை :—சூரிய கும்பகத்தின் இலக்கணம் கூறல்.

अथास्य लक्षणं सम्यक्कथयामि समासतः ॥ ८९ ॥
एकाकिना समुपगम्य विविक्त देशं
प्राणादिरूपममृतं परमार्थतत्वम् ।
लघ्वाशिना धृतिमता परिभावितव्यं
संसाररोग हरमौषध मद्वितीयम् ॥ ९० ॥
सूर्यनाड्या समाकृष्य वायुमभ्यासयोगिना ।
विधिवत्कुम्भकं कृत्वा रेचयेच्छीतरश्मिना ॥ ९१ ॥
उदरे बहुरोगघ्नं क्रिमिदोषं निहन्ति च ।
मुहुर्मुहुरिदं कार्यं सूर्यभेद मुदाहृतम् ॥ ९२ ॥

'அதாஸ்ய லக்ஷணம் ஸம்யக் கதயாமி ஸமாஸதঃ
ஏகாகினா ஸமுபகம்ய விவிக்த தேசம்
ப்ராணாதிரூபமம்ருதம் பரமார்த தத்வம்
லக்வாசினா த்ருதிமதா பரிபாவிதவ்யம்
ஸம்ஸார ரோகஹரமௌஷத மத்விதீயம்

'ஸூர்ய நாட்யா ஸமாக்ருஷ்ய வாயு மப்யாஸ யோகினா
விதிவத் கும்பகம் க்ருத்வா ரேசயேச் சீதரச்மினா
உதரே பஹுரோகக்னம் க்ரிமிதோஷம் நிஹந்திச
முஹுர் முஹுரிதங்கார்யம் ஸூர்யபேத முதாஹ்ருதம்'.

போ - ரை:—சூரிய கும்பகத்தின் இலக்கணத்தை நன்கு சுருக்கமாய்ச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. அதிகாரி ஆஸனத்தில், அமர்ந்து சுருங்கிய உணவு கொள்பவனாய், உறுதியான மனமுள்ளவனாய், தனித்திருப்பவனாய், ஓய்ந்த இடத்தில் இருந்துகொண்டு பிராணன் முதலிய வடிவு கொண்டதும், உண்மைப் பொருளானதும், அமுதமானதும், பிறவி நோயைப் போக்கும் மருந்தாயுள்ளதுமான இருமையின் நீங்கிய பரம்பொருளை உள்ளத்தில் நன்கு சிந்திப்பானாக. பிறகு சூரிய நாடியில் காற்றை நன்கு உள்ளிழுத்து முறைப்படி கும்பகம் செய்து, சந்திரநாடியில் வெளியில் விடுவானாக. இந்தப் பயிற்சியானது, வயிற்றிலுள்ள அனேக நோய்களையும், புழுக்களாலுண்டாகும் தீங்கையும், அழிக்கின்றது. இப் பயிற்சி அடிக்கடி செய்யத்தக்கது. இங்ஙனம் சூரிய பேதி என்ற பயிற்சி சொல்லப்பட்டது (92)

அ - கை:—உஜ்ஜாயி கும்பகத்தின் இலக்கணங் கூறல்.

नाडीभ्यां वायुमाकृष्य कुण्डल्याः पार्श्वयोःक्षिपेत् ।
धारयेदुदरे पश्चाद्रेचये दिडया सुधीः ॥ ९३ ॥
कण्ठे कफादिदोषघ्नं शरीराग्नि विवर्धनम् ।
नाडीजलापहं धातु गतदोष विनाशनम् ॥ ९४ ॥
गच्छतस्तिष्ठतः कार्य मुज्जाय्याख्यं तु कुम्भकम् ।

'நாடீப்யாம் வாயு மாக்ருஷ்ய குண்டல்யா: பார்ஶ்வயோ: க்ஷிபேத்
தாரயேதுதரே பஶ்சாத் ரேசயேதிடயா ஸுதீ:
கண்டே கபாதி தோஷக்னம் ஶரீராக்னி விவர்தனம்
நாடீஜலாபஹம் தாது கததோஷ விநாஶனம்
கச்சதஸ் திஷ்டத: கார்யமுஜ்ஜாயாக்யந்து கும்பகம்.'

போ - ரை:—நன்மதியுள்ள புருடன் இரு மூக்குகளா லும் காற்றை இழுத்து குண்டலியின் இரு பக்கத்திலும் விடுவானாக. பிறகு வயிற்றில் காற்றைத் தடுத்து நிறுத்தி இடது மூக்கால் வெளியில் விடவேண்டும். இதுவே உஜ் ஜாயி என்ற கும்பகமாகின்றது. இது நடக்கும் பொழுதும் நிற்கும்பொழுதும் செய்யத்தக்கது. இந்தக் கும்பகமானது கழுத்திலுள்ள கபமுதலிய குற்றங்களைக் கெடுப்பதும், உடலிலுள்ள நெருப்பை வளர்ப்பதும், நாடிகளிலுள்ள நீரைப் பிரிப்பதும், ஏழுதாதுக்களிலுள்ள குற்றங்களை ஒழிப் பது மாகின்றது. (94)

அ - கை:—சீதளீ கும்பகத்தின் இலக்கணங் கூறல்.

मुखेन वायुं संगृह्य घ्राणरन्ध्रेण रेचयेत् । ९५ ॥
शीतलीकरणं चेदं हन्ति पित्तं क्षुधां तृषाम् ।

'முகேன வாயும் ஸங்க்ருஹ்ய க்ராண ரந்த்ரேண ரேசயேத் ஶீதளீகரணம் சேதம் ஹந்தி பித்தம் க்ஷுதாம் த்ருஷாம்.'

போ - ரை:—வாயாற் காற்றை நன்கு இழுத்து இரு மூக்குகளால் வெளியில் விடவேண்டும். இந்தச் சீதளீ கும்பகப் பயிற்சியும் பித்தம், பசி, தாகம் இவற்றைக் கெடுக் கின்றது. (95)

அ - கை:—பஸ்திரிகா கும்பகத்தின் இலக்கணங் கூறல்.

स्तनयोरथ भस्त्रेव लोहकारस्य वेगतः ॥ ९६ ॥
रेचयेत्पूरयेद्वायु माश्रमं देहगं धिया ।
यथा श्रमो भवेद्देहे तथा सूर्येण पूरयेत् ॥ ९७ ॥

कण्ठसंकोचनं कृत्वा पुनश्चन्द्रेण रेचयेत् ।
वातपित्त श्लेष्महरं शरीराग्नि विवर्धनम् । ९८ ॥
कुण्डली बोधकं वक्त्र दोषघ्नं शुभदं सुखम् ।
ब्रह्मनाडी मुखान्तस्थ कफाद्यर्गल नाशनम् ॥ ९९ ॥
सम्यग्बन्ध समुद्भूतं ग्रन्थित्रय विभेदकम् ।
विशेषेणैव कर्तव्य भस्त्राख्यं कुम्भकं त्विदम् ॥ १०० ॥

*'ஸ்தனயோரத பஸ்த்ரேவ லோஹ காரஸ்ய வேகத:*
*ரேசயேத் பூரயேத் வாயு மாஸ்ரமம் தேஹகம் தியா*
*யதா ஸ்ரமோ பவேத்தேஹே ததா ஸூர்யேண பூரயேத்*
*கண்ட ஸங்கோசனம் க்ருத்வா புனஸ்சந்த்ரேண ரேசயேத்*
*வாத பித்த ஸ்லேஷ்மஹரம் ஸரீராக்னி விவர்தனம்*
*குண்டலீ போதகம் வக்த்ர தோஷக்னம் ஸுபதம் ஸுகம்*
*ப்ரஹ்ம நாடீ முகாந்தஸ்த கபாத்யர்களநாஸனம்*
*ஸம்யக் பந்த ஸமுத்பூதம் க்ரந்தித்ரய விபேதகம்*
*விஸேஷேணைவ கர்தவ்யம் பஸ்த்ராக்யம் கும்பகம் த்விதம்.'*

டீ-ரை:—இரும்புவேலை செய்யும் கம்மனுடைய துருத்தி காற்றை வேகமாய்க்கொண்டு வெளியில் விடுவது போன்று, புத்திமானுகிய புருடன் வயிற்றிலுள்ள காற்றை களைப்புண்டாகும்படி இரு மூக்குகளாலும் வெளியில்விட்டு, உள்ளிழுக்க வேண்டும். பின்னர் உடம்பு களைப்புண்டாகும் வண்ணம் சூரிய நாடியாற் காற்றை நிறப்பவேண்டும். பிறகு கழுத்தை வளைத்துக்கொண்டு சந்திர நாடியால் வெளியில் விடுதல் வேண்டும். இவ்விதப் பயிற்சி பஸ்திரிகா கும்பகம் ஆகின்றது. இது மிகுதியாகச் செய்யத்தக்கது. இந்த பஸ்திரிகா கும்பகமானது வாத பித்த சிலேத்துமங்களைப் போக்குவதும், வாயிலுள்ள குற்றத்தைக் கெடுப்பதும்,

உடலிலுள்ள நெருப்பை வளர்ப்பதும், குண்டலி சக்தியை விழிப்புறச் செய்வதும், இன்பமாவதும், நலத்தைத் தருவதும், சுழுமுனை நாடியின் முகத்திலுள்ள கபமுதலிய தடையைக் கெடுப்பதும், நன்கு பயில்வதால் மூன்று முடிச்சுக்களை அறுப்பதுமாகின்றது. ஆகையால் இந்த பஸ்திரிகா கும்பகத்தை மிகுதியாக அப்யசிக்கத் தக்கது. (100)

அ - கை :—மூவகைப் பயிற்சியைக் கூறல்.

बन्धत्रय मथेदानीं प्रवक्ष्यामि यथाक्रमम् ।
नित्यं कृतेन तेनासौ वायोर्जय मवाप्नुयात् ॥ १०१ ॥
चतुर्णामपि भेदानां कुम्भके समुपस्थिते ।
बन्धत्रयमिदं कार्यं वक्ष्यमाणं मया हि तत् ॥ १०२ ॥
प्रथमो मूलबन्धस्तु द्वितीयोड्डीयाणाभिधः ।
जालन्धरः तृतीयस्तु लक्षणं कथयाम्यहम् ॥ १०३ ॥

'பந்தத்ரய மதேதானீம் ப்ரவக்ஷ்யாமி யதா க்ரமம்
நித்யம் க்ருதேன தேனாஸௌ வாயோர்ஜயம வாப்னுயாத்
சதுர்ணாமபி பேதானாம் கும்பகே ஸமுபஸ்திதே
பந்தத்ரய மிதம் கார்யம் வக்ஷ்யமாணம் மயா ஹி தத்
ப்ரதமோ மூலபந்தஸ்து த்விதீயோட்டீயாணா பிதஃ
ஜாலந்தரஃ த்ருதீயஸ்து லக்ஷணம் கதயாம்யஹம்.'

பொ - ரை :—இப்பொழுது முறையாக மூவகைப் பயிற்சியைக் கூறுகின்றேன். கேட்பாயாக. எப்பொழுதும் இந்த மூன்றையும் பயில்கின்றவன் காற்றின் வெற்றியைப் பெறுகின்றான். மேற்சொன்ன நான்கின் பயிற்சியால் கும்பகம் சித்திக்கின்றது. அத்துடன் என்றும் சொல்லப்

போகின்ற இந்த மூன்றையும் செய்யவேண்டும். அவற்றில் முதலது மூலபந்தம். இரண்டாவது உட்டியாண பந்தம். மூன்றாவது ஜாலந்தர பந்தம் ஆகிறது. இதன் இலக்கணத்தை நான் சொல்லுகின்றேன். (103)

அ - கை:—மூலபந்தத்தின் இலக்கணங் கூறல்.

गुदं पार्ष्ण्यातु संपीड्य पायु माकुञ्चयेद्बलात् ।
वारं वारं यथा चोर्ध्वं समायाति समीरणः ॥ १०४ ॥
प्राणापानौ नादबिन्दू मूलबन्धेन चैकताम् ।
गत्वा योगस्य संसिद्धिं यच्छतो नात्र संशयः ॥ १०५ ॥

'குதம் பார்ஷ்ண்யாது ஸம்பீட்ய பாயுமாகுஞ்சயேத் பலாத்
வாரம் வாரம் யதா சோர்த்வம் ஸமாயாதி ஸமீரணஃ
ப்ராணாபானௌ நாதபிந்தூ மூலபந்தேன சைகதாம்
கத்வா யோகஸ்ய ஸம்ஸித்திம் யச்சதோ நாத்ர ஸம்சயஃ'

பொ - ரை:—இரு விலாப்பக்கங்களை நன்றாய் அழுந்தப் பிடித்து குண்டியை வலித்து மேல் எழச் செய்வானாக. எவ்வாறு காற்று மேற் செல்லுமோ, அவ்வாறு அடிக்கடி பயில்வானாக. இவ்விதப் பயிற்சியால் பிராணாபானன்களும் நாத பிந்துக்களும் ஐக்கியத்தை அடைந்து, யோகசித்தியைத் தருகின்றன. இதில் ஐயமில்லை. (105)

அ - கை:—உட்டியாண பந்தத்தின் இலக்கணங் கூறல்.

कुम्भकान्ते रेचकादौ कर्तव्यस्तूड्डीयाणकः ।
बन्धो येन सुषुम्नायां प्राणस्तूड्डीयते यतः ॥ १०६ ॥
तस्मादुड्डीयाणाख्योऽयं योगिभिः समुदाहृतः ।
उड्डियाणं तु सहजं गुरुणा कथितं सदा ॥ १०७ ॥

अभ्यसेत्तद्तन्द्रस्तु वृद्धोऽपि तरुणो भवेत् ।
नाभेरूर्ध्वं मधश्चापि ताणं कुर्यात्प्रयत्नतः ॥ १०८ ॥
षाण्मास मभ्यसेन्मृत्युं जयत्येव न संशयः ।

'கும்பகாந்தே ரேசகாதௌ கர்தவ்யஸ் தூட்டீயாணகஃ
பந்தோ யேன ஸுஷும்ணாயாம் ப்ராணஸ் தூட்டியதே யதஃ
தஸ்மாதுட்டீயாணாக்யோ஽யம் யோகிபிஃ ஸமுதாஹ்ருதஃ
உட்டியாணந்து ஸஹஜம் குருணா கதிதம் ஸதா
அப்யஸேத்ததந்த்ரஸ்து வ்ருத்தோ஽பி தருணோ பவேத்
நாபேரூர்த்வ மதஶ்சாபி தாணம் குர்யாத் ப்ரயத்னதஃ
ஷாண்மாஸ மப்யஸேன் ம்ருத்யும் ஜயத்யேவ ந ஸம்ஶயஃ'

பொ - ரை :—கும்பகத்தின் முடிவிலும், இரேசகத்தின் முதலிலும், உட்டியாணமென்ற பயிற்சி செய்யத்தக்கது. இந்தப் பயிற்சியால் சுழுமுனை வழியிற் பிராணன் மேல் நோக்கிச் செல்லுகின்றது. ஆகையால் இந்தப் பயிற்சி யோகிகளால் உட்டியாணமென்றே சொல்லப்பட்டது. மற்றும் ஆசிரியரால் இந்த உட்டியாண பந்தமானது என்றும் உடன் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. சோம்பலின்றி இதைப் பயில்கின்றவன் கிழவனாயினும் வாலிபனாகின்றான். முயற்சியுடன் அடிவயிற்றை நாபிக்குமேல் ஏறச் செய்வானாக. இங்ஙனம் ஆறுமாதம் பழகுவானாயின் அவன் நமனை வெல்லுகின்றான். இதில் ஐயமில்லை. (108)

அ - கை :—ஜாலந்தர பயிற்சியின் இலக்கணங் கூறல்.

पूरकान्ते तु कर्तव्यो बन्धो जालन्धराभिधा ॥ १०९ ॥
कण्ठसंको च रूपोऽसौ वायुमार्गनिरोधकः ।
कण्ठमाकुञ्च्य हृदये स्थापयेद्दढ मिच्छया ॥ ११० ॥

बन्धो जालन्धराख्योऽय ममृताप्याय कारकः ।
अधस्तात्कुञ्चनेनाशु कण्ठसंकोचने कृते । १११ ॥
मध्ये पश्चिमताणेन स्यात्प्राणो ब्रह्मनाडिगः ।

'பூரகாந்தே து கர்தவ்யோ பந்தோ ஜாலந்தராபிதா
கண்ட ஸங்கோச ரூபோ஽ஸௌ வாயு மார்க நிரோதக:
கண்டமாகுஞ்ச்ய ஹ்ருதயே ஸ்தாபயேத் த்ருட மிச்சயா
பந்தோ ஜாலந்தராக்யோ஽ப மம்ருதாப்யாய காரக:
அதஸ்தாத் குஞ்சனேனாஶு கண்ட ஸங்கோசனே க்ருதே
மத்யே பஶ்சிம தாணேன ஸ்யாத் ப்ராணோ ப்ரஹ்ம
நாடிக:'

பொ - ரை :—காற்றை வயிற்றில் நிரப்பிய பின்; கழுத்தை மார்பில் அழுந்த வைப்பது ஜாலந்தரப் பயிற்சியாகும். இந்தப் பயிற்சி காற்றின் வழியைத் தடுக்கின்றது. இது அமிர்தத்தைப் பெருகச் செய்கின்றது. கழுத்தைச் சுருங்கச்செய்வதான ஜாலந்தரப் பயிற்சியாலும், குண்டியை மேலுந்துவதான மூலபந்தத்தாலும், அடிவயிற்றை மேலேறச்செய்வதான உட்டியாண பந்தத்தாலும், பிராணன் விரைந்து சுழுமுனை நாடியுட் செல்லுகின்றது. (111)

அ - கை :—குண்டலி சக்தியால் மூன்று முடிச்சை அறுத்தவன் நிருவிகற்பநிலையை எய்துகின்றான். எனக் கூறல்.

वज्रासनस्थितो योगी चालयित्वा तु कुण्डलीम् ॥ ११२ ॥
कुर्यादनन्तरं भस्त्रीं कुण्डली माशु बोधयेत् ।
भिद्यन्ते ग्रन्थयो वंशे तप्तलोह शलाकया ॥ ११३ ॥

तथैव पृष्ठवंशे स्याद् ग्रन्थिभेदस्तु वायुना ।
पिपीलिकायां लग्नायां कण्डूस्तत्र प्रवर्तते ॥ ११४ ॥
सुषुम्नायां तथाभ्यासात्सततं वायुना भवेत् ।
रुद्रग्रन्थिं ततोभित्वा ततो याति शिवात्मकम् ॥ ११५ ॥
चन्द्रसूर्यौ समौ कृत्वा तयोर्योगः प्रवर्तते ।
गुणत्रय मतीतं स्याद्ग्रन्थित्रय विभेदनात् ॥ ११६ ॥
शिवशक्ति समायोगे जायते परमा स्थितिः ।

'வஜ்ராஸன ஸ்திதோயோகீ சாலயித்வாது குண்டலீம்
குர்யாதனந்தரம் பஸ்த்ரீம் குண்டலீமாஶு போதயேத்
பித்யந்தே க்ரந்தயோ வம்ஶே தப்தலோஹ ஶலாகயா
ததைவ ப்ருஷ்ட வம்ஶேஸ்யாத் க்ரந்தி பேதஸ்து வாயுனா
பிபீலிகாயாம் லக்னாயாம் கண்டூஸ்தத்ர ப்ரவர்ததே
ஸுஷும்னாயாம் ததாப்யாஸாத் ஸததம் வாயுனா பவேத்
ருத்ரக்ரந்திம் ததோ பித்வா ததோயாதி ஶிவாத்மகம்
சந்த்ரஸூர்யௌ ஸமௌ க்ருத்வா தயோர் யோகஃ ப்ரவர்ததே
குணத்ரயமதீதம் ஸ்யாத் க்ரந்தித்ரய விபேதனாத்
ஶிவஶக்தி ஸமாயோகே ஜாயதே பரமா ஸ்திதிஃ.'

பொ-ரை:-யோகி வஜ்ராஸனத்தில் அமர்ந்து, குண்டலி சக்தியை அசைப்பானாக. பிறகு துருத்திவடிவ பஸ்திரிகா பயிற்சியைச் செய்யவேண்டும். அந்தப்பயிற்சியால் குண்டலி சக்தி விரைந்து விழித்து எழுகின்றாள். அப்பொழுது பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியால் மூங்கிலிலுள்ள கணுக்கள் எங்ஙனம் துளைக்கப்படுகின்றனவோ, அங்ஙனமே முதுகெலும்பிலுள்ள முடிச்சானது காற்றால் அறுபடுகின்றது. அப்பொழுது முதுகெலும்பில் எறும்புமொய்த்ததுபோன்று

தினவு உண்டாகின்றது. இடையறாது பயில்வதால் சுழுமுனு நாடியிலும் அங்ஙனம் தினவு ஏற்படும். அதிலிருந்து குண்டலி சக்தியானவள் உருத்திர முடிச்சை அறுத்து, சிவ வடிவத்தை எய்துகின்றாள். அப்பொழுதே சூரிய சந்திரர்களின் ஐக்கியம் உண்டாகின்றது. பின்னர் சிவசக்திகளின் சேர்க்கை உளதாகின்றது. அப்பொழுது குண்டலி சக்தி மூன்று முடிச்சுக்களை அறுத்தலால் முக்குணங்களைக் கடந்து நின்றவள் ஆகின்றாள். சிவசக்திகளின் ஐக்கியம் உண்டானபொழுதே மேலான நிருவிகற்பநிலை உண்டாகின்றது. (116)

அ-கை:-சுழுமுனையே முத்தி வழியெனவும், காலத்தை உண்பதெனவும், கூறல்.

यथाकरी करेणैव पानीयं पिबेत्सदा ॥ ११७ ॥
सुषुम्ना वज्रनालेन पवमानं ग्रसेत्तथा ।
वज्रदण्ड समुद्भूता मणयश्चैक विंशतिः ॥ ११८ ॥
सुषुम्नायां स्थिताः सर्वे सूत्रे मणिगणा इव ।
मोक्षमार्गे प्रतिष्ठाना सुषुम्ना विश्वरूपिणी ॥ ११९ ॥
यथैव निश्चितः कालश्चन्द्रसूर्य निबन्धनात् ।
आपूर्य कुम्भितो वायुर्बहिर्नो याति साधके ॥ १२० ॥

'யதா கரீ கரேணைவ பானீயம் பிபேத் ஸதா
ஸுஷும்நா வஜ்ரநாளேன பவமானம் க்ரஸேத் ததா
வஜ்ரதண்ட ஸமுத்பூதா மணயஶ்சைக விம்ஶதிஃ
ஸுஷும்நாயாம் ஸ்திதாஃ ஸர்வே ஸூத்ரே மணிகணு இவ
மோக்ஷமார்கே ப்ரதிஷ்டானு ஸுஷும்நு விஶ்வரூபிணீ
யதைவ நிஶ்சிதஃ காலஶ் சந்த்ரஸூர்ய நிபந்தனுத்
ஆபூர்ய கும்பிதோ வாயுர் பஹிர் நோ யாதி ஸாதகே.'

போ - ரை :—யானை எங்ஙனம் துதிக்கையால் என்றும் நீரைப் பருகுகின்றதோ, அங்ஙனம் யோகி சுழுமுனையாகிய தண்டால் காற்றை இழுக்கவேண்டும். வஜ்ரதண்டமாகிய முதுகெலும்பிலிருந்து, இருபத்தொரு மணிகள் உண்டாயின. அவைகளெல்லாம் நூலிற் கோக்கப்பட்ட மணிகள்போன்று, சுழுமுனு நாடியில் கோக்கப்பட்டுள்ளன. அவைகள் இருபத்தொரு அனுபவ வடிவ இரத்தினங்கள் என்பது அறியவும். அவைகள் முக்தி வழியாகிய சுழுமுனு நாடியில் முழுதும் பரவி நிலைபெற்றுள்ளன. இவ்வித அனுபவங்களின் முடிவில், முக்தி உளதாகின்றது. சூரியசந்திரர்களின் நடையிலிருந்து, எங்ஙனம் காலம் அறியப்படுகின்றதோ, அங்ஙனம் யோகம் முயல்பவனிடத்து காலம் அறியப்படுவதில்லை. எங்ஙனமெனின்? பூரித்துக் கும்பித்த காற்று சுழுமுனையில் ஒடுங்குகின்றது. வெளியில் வருவதில்லை. (120)

இதுவுமது

पुनःपुनस्तद्वदेव पश्चिम द्वारलक्षणम् ।
पूरितस्तु सतद्वारै रीषत्कुम्भकतां गतः ॥ १२१ ॥
प्रविशेत्सर्व गात्रेषु वायुः पश्चिम मार्गतः ।
रेचितः क्षीणतां याति पूरितः पोषयेत्ततः ॥ १२२ ॥

'புனః புனஸ்தத்வதேவ பஶ்சிமத்வார லக்ஷணம்
பூரிதஸ்து ஸ தத்வாரை ரீஷத் கும்பகதாம் கதஃ
ப்ரவிஶேத் ஸர்வகாத்ரேஷு வாயுஃ பஶ்சிம மார்கதஃ
ரேசிதஃ க்ஷீணதாம் யாதி பூரிதஃ போஷயேத் ததஃ

போ - ரை:—யோகி மீண்டும் அவ்விதப் பயிற்சி செய்வதால், காற்று வெளிப்படுவதேஇல்லை. ஆகையால் இதுவே

காலத்தை உண்ணும் சுழுமுனையின் இலக்கணம் என்பது அறிக. இடை பிங்கலைகளால் பூரித்த அந்தக் காற்று சிறிது கும்பகத்தை அடைந்து, பிறகு உடலெங்கும் பரவுகிறது. பிறகு சுழுமுனை வழியாக வெளிப்படின், உடல்மெலிகின்றது. நிரப்புவதால் உடல் வளருகின்றது. (122)

அ - கை:—சுழுமுனையின் அடைவால் பிரம்ம ஞானம் உண்டாமெனக் கூறல்.

यत्रैव जातं सकलेबरं मनः
तत्रैव लीनं कुरुते स योगात् ।
स एव मुक्तो निरहंकृतिः सुखी-
मूढा न जानन्ति पिण्डपातिनः ॥ १२३ ॥
चित्तं विनष्टं यदि भासितं स्यात्-
तत्र प्रतीतो मरुतोऽपि नाशः ।
न चेद्यदि स्यान्न तु तस्य शास्त्रं-
नात्मप्रतीति र्न गुरुर्न मोक्षः ॥ १२४ ॥

'யத்ரைவ ஜாதம் ஸகளேபரம் மனஃ
தத்ரைவ லீனம் குருதே ஸ யோகாத்
ஸ ஏவ முக்தோ நிரஹங் க்ருதிஃ ஸுகீ
மூடா ந ஜானந்தி பிண்ட பாதினஃ
சித்தம் வினஷ்டம் யதி பாஸிதம் ஸ்யாத்
தத்ர ப்ரதீதோ மருதோபி நாஶஃ
ந சேத்யதி ஸ்யாந் நது தஸ்ய ஶாஸ்த்ரம்
நாத்ம ப்ரதீதிர் ந குருர் ந மோக்ஷஃ'

போ - ரை:—எதிலிருந்து எல்லாக் கருவிகளுடனும் மனந் தோன்றியதாமோ, அதனிடத்திலேயே யோகி யோகப்

பயிற்சியால் மனதை ஒடுக்குகின்றான். சித்தம் ஒடுங்கிய பின்னர், பிராணனும் அங்கேயே ஒடுங்குகின்றது. அவனே சிறந்த ஞானத்தைப்பெற்று அகங்காரமற்ற சுகவடிவ முக்தனாகின்றான் என்பது அறியவும். எவ்விடத்து சித்தம் இறந்ததாயிற்றோ, அவ்விடத்தே பிராணனும் தோன்றாது நாசமுறுகின்றது. இங்ஙனம் சித்தம் பிராணன் இவைகள் அழிவுற,யோகம்பயிலாதவர்களுக்குச் சாஸ்திரம் பயனில்லை. ஆன்ம ஞானமும் பயனில்லை. ஆசிரியனும் பயனில்லை. முக்தியும் பயனில்லை என்பதாம். அவர்களே அறியாமையால் வீணே உடலை வீழ்த்துகின்றனர். என்பது உணர்க. (124)

जम्बुको रुधिरं यद्वद्बलादाकृष्यति स्वयम् ।
ब्रह्मनाडी तथा धातून्संततताभ्यास योगतः ॥ १२५ ॥
अनेनाभ्यास योगेन नित्यमासन बन्धतः ।
चित्तं विलीनतामेति बिन्दुर्नो यात्यधस्तथा ॥ १२६ ॥

'ஜம்புகோ ருதிரம் யத்வத் பலாதாக்ருஷ்யதி ஸ்வயம்
ப்ரஹ்ம நாடீ ததா தாதூன் ஸந்ததாப்யாஸ யோகதஃ
அனேனாப்யாஸ யோகேன நித்யமாஸன பந்ததஃ
சித்தம் விலீனதாமேதி பிந்துர்னோ யாத்யதஸ் ததா.'

போ-ரை:—பிறகு அந்த யோகி இடையறாது யோகத்தைப் பயில்வதால் நரி எங்ஙனம் இரத்தத்தைத் தானே வலிந்து இழுக்கின்றதோ, அங்ஙனம் யோகவன்மையால் சுழுமுனை நாடியானது, ஏழு தாதுக்களையும் உண்டு விடுகின்றது. இத்தகைய யோகப்பயிற்சியாலும், நாள்தோறும் ஆஸனத்தைப் பயில்வதாலும், மனம் இல்லாது ஒழிகின்றது அவ்விதமே அவனுக்கு வீர்யம் கீழ் வீழ்வதில்லை. (126)

அ - கை :—யோகப் பயிற்சியால் தனது உண்மை நிலையை நேர்மையாகப் பெறுகின்றான் எனக் கூறல்.

रेचकं पूरकं मुक्त्वा वायुनास्थीयते स्थिरम् ।
नानानादाः प्रवर्तन्ते संस्रवेच्चन्द्र मण्डलम् ॥ १२७ ॥
नश्यन्ति क्षुत्पिपासाद्याः सर्वदोषास्ततस्सदा ।
स्वरूपे सच्चिदानन्दे स्थिति माप्नोति केवलम् ॥ १२८ ॥
कथितं तु तवप्रीत्या ह्येतदभ्यास लक्षणम् ।

'ரேசகம் பூரகம் முக்த்வா வாயுனா ஸ்தீயதே ஸ்திரம்
நாநா நாதாः ப்ரவர்தந்தே ஸம்ஸ்ரவேச் சந்த்ரமண்டலம்
நஶ்யந்தி க்ஷுத்பிபாஸாத்யாः ஸர்வதோஷாஸ் ததஸ் ஸதா
ஸ்வரூபே ஸச்சிதானந்தே ஸ்திதிமாப்னோதி கேவலம்
கதிதந்து தவ ப்ரீத்யா ஹ்யேததப்யாஸ லக்ஷணம்.'

பொ - ரை :—பிரம்மாவே! இரேசக பூரகங்களை விடுத்த பின், பிராணன் உறுதியாய் அசையாது நிற்குமாயின், அவனுக்குப் பல்வேறு நாதங்கள் கேட்கப்படுகின்றன. பிறகு சந்திரமண்டலம் அமுதைப் பொழிகின்றது. அதனால் உடலி லுள்ள எல்லா நோய்களும், பசிதாக முதலியனவும், ஒழி கின்றன. அப்பொழுதே அவன் சச்சிதானந்த வடிவ தனது ஒப்பற்ற நிலையைப் பெறுகின்றான். என்பது அறியவும். இத்தகைய யோகசித்தியின் இலக்கணம் உனக்கு அன்போடு சொல்லப்பட்டது. (128)

அ - கை :—மந்திரமுதல் நான்கின் கூட்டே, மஹா யோகம் எனக் கூறல்.

मन्त्रो लयो हठो राज योगान्ता भूमिकाः क्रमात् ॥ १२९ ॥
एक एव चतुर्धाऽयं महायोगोऽभिधीयते ।

'மந்த்ரோ லயோஹடோ ராஜ யோகாந்தா பூமிகா க்ரமாத்
ஏக ஏவ சதுர்தாऽயம் மஹாயோகோऽபிதீயதே.'

போ - ரை:—மந்திரயோகம், லயயோகம், ஹடயோகம், இராஜயோகமென முறையாய் நான்கு படிகளாகின்றன. மஹாயோகமொன்றையே நான்காய்ப் பிரித்துச் சொல்லப் பட்டது. (129)

அ - கை :—மந்திரயோகத்தின் இலக்கணங் கூறல்.

हकारेण बहिर्याति सकारेण विशेत्पुनः ॥ १३० ॥
हंसहंसेति मन्त्रोऽयं सर्वैर्जीवैश्च जप्यते ।
गुरुवाक्यात्सुषुम्नायां विपरीतो भवेज्जपः ॥ १३१ ॥
सोऽहं सोऽहमिति यः स्यान्मन्त्रयोगः स उच्यते ।

'ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விஶேத் புனঃ
ஹம்ஸ ஹம்ஸேதி மந்த்ரோऽயம் ஸர்வைர் ஜீவைஶ்ச [ஜப்யதே
குருவாக்யாத் ஸுஷும்னாயாம் விபரீதோ பவேஜ் ஜபঃ
ஸோऽஹம் ஸோऽஹமிதி யঃ ஸ்யான் மந்த்ரயோகঃ ஸ [உச்யதே.'

போ - ரை :—மூச்சுக்காற்று ஹ என்ற வொலியுடன் வெளிப்படுகின்றது. ஸ என்ற வொலியுடன் உள் நுழைகின்றது. இதுவே ஹம்ஸ மந்திரமாகின்றது. இந்த ஹம்ஸ மந்திரத்தை எல்லாவுயிர்களும் ஜபிக்கின்றன. இம் மந்திரமானது, ஆசாரியனால் சுழுமுனைவழியில் "ஸோஹம் ஸோஹமென மாற்றி உபதேசிக்கப் படுமாயின், இதுவே மந்திரயோகமாகின்றது. (131)

அ - கை :—ஹடயோகத்தின் இலக்கணங் கூறல்.

प्रतीतिमन्त्रयोगाच्च जायते पश्चिमे पथि ॥ १३२ ॥
हकारेण तु सूर्यः स्यात्सकारेणेन्दुरुच्यते ।
सूर्याचन्द्रमसोरैक्यं हठ इत्यभिधीयते ॥ १३३ ॥

'ப்ரதீதி மந்த்ர யோகாச்ச ஜாயதே பஶ்சிமே பதி
ஹகாரேண து ஸூர்ய: ஸ்யாத் ஸகாரேணேந்து ருச்யதே
ஸூர்யா சந்த்ர மஸோரைக்யம் ஹட இத்யபிதீயதே.'

பொ - ரை :—ஹகாரத்தால் சூரியன் சொல்லப்படுகின்றான். ஸகாரத்தால் சந்திரன் சொல்லப்படுகின்றான். இச் சூரிய சந்திரர்களின் சேர்க்கையே ஹடயோகம் எனப்படுகிறது. மேற்சொன்ன மந்திரயோகத்தாலும், இந்த ஹடயோகத்தாலும், பின்புறமுள்ள சுழுமுனையில் வழியுண்டாகின்றது என்று அறிக. (133)

அ-கை :—இலயயோகத்தின் இலக்கணங் கூறுகின்றது.

हठेन गृह्यते जाड्यं सर्वदोष समुद्भवम् ।
क्षेत्रज्ञः परमात्मा च तयोरैक्यं यदा भवेत् ॥ १३४ ॥
तदैक्ये साधिते ब्रह्मंश्चित्तं याति विलीनताम् ।
पवनः स्थैर्य मायाति लय योगोदयेसति ॥ १३५ ॥
लयात्संप्राप्यते सौख्यं स्वात्मानन्दं परं पदम् ।

'ஹடேன க்ருஹ்யதே ஜாட்யம் ஸர்வதோஷ ஸமுத்பவம்
க்ஷேத்ரஜ்ஞ: பரமாத்மா ச தயோரைக்யம் யதா பவேத்
ததைக்யே ஸாதிதே ப்ரஹ்மன் சித்தம் யாதி விலீனதாம்
பவன: ஸ்தைர்ய மாயாதி லயயோகோதயே ஸதி
லயாத் ஸம்ப்ராப்யதே ஸௌக்யம் ஸ்வாத்மானந்தம் பரம்
[பதம்.'

போ - ரை :—அடயோகப் பயிற்சியால் உடலிலுள்ள எல்லாக் குற்றங்களும், சோம்பலும், நீங்குகின்றன. பிறகு இலய யோகத்தால் ஜீவான்மா பரமான்மாக்களின் ஐக்கியம் உண்டாகின்றது. இந்த இலய யோகமானது முற்றுப்பெறின் சித்தம் ஓய்வு பெறுகின்றது. இலய யோகத்தின் பயனாகிய சித்தவொழிவில் பிராணன் அசையாது நிற்பதாகின்றது. சித்தம் பிராணன் இவைகளின் ஒழிவால் முடிவிடமாய் தனதான்ம இன்பமாயுள்ள சுகத்தைப் பெறுகின்றான். (135)

அ - கை :—இராஜயோகத்தின் இலக்கணங் கூறல்.

योनिमध्ये महाक्षेत्रे जपा बन्धूक संनिभम् ॥ १३६ ॥
रजो वसति जन्तूनां देवीतत्वं समावृतम् ।
रजसो रेतसो योगाद्राजयोग इति स्मृतः ॥ १३७ ॥
अणिमादिपदं प्राप्य राजते राजयोगतः ।

'யோனிமத்யே மஹாக்ஷேத்ரே ஜபாபந்தூக ஸம்நிபம்
ரஜோ வஸதி ஜந்தூனாம் தேவீதத்வம் ஸமாவ்ருதம்
ரஜஸோ ரேதஸோ யோகாத் ராஜயோக இதி ஸ்ம்ருதஃ
அணிமாதிபதம் ப்ராப்ய ராஜதே ராஜ யோகதஃ'

போ - ரை :—ஜீவர்களின் மஹாக்ஷேத்திரமாகிய யோனி நடுவில் செம்பருத்தி கற்றாழைகளின் மலர்கள் போன்ற நிறமுள்ள செந்நீருளது. அது தேவீதத்துவ மெனப்படுகிறது. (புருவமத்தியிலுள்ள சந்திரனிடத்தில் வெண்ணீர் உளது. அது சிவதத்துவமெனப்படுகிறது.) இந்தச் செந்நீர் வெண்ணீர்களின் சேர்க்கையே இராஜயோகமாகிறது. இந்த இராஜயோகப் பயிற்சியால் அணிமா முதலிய சித்தியைப் பெற்று யோகி விளங்குகின்றான் என்று அறியவும்.

அ - கை :-யோகத்தின் பொது இலக்கணமும், யோகத்தால் வீட்டினடைவும் கூறல்.

प्राणापान समायोगो ज्ञेयं योग चतुष्टयम् ॥ १३८ ॥
संक्षेपात्कथितं ब्रह्मन्नान्यथा शिवभाषितम् ।
क्रमेण प्राप्यते प्राप्यमभ्यासादेव नान्यथा ॥ १३९ ॥
एकेनैव शरीरेण योगाभ्यासाच्छनैः शनैः ।
चिरात्संप्राप्यते मुक्तिर्मर्कटक्रम एव सः ॥ १४० ॥

'ப்ராணாபான ஸமாயோகோ ஜ்ஞேயம் யோக சதுஷ்டயம்
ஸம்க்ஷேபாத் கதிதம் ப்ரஹ்மன் நான்யதா ஶிவபாஷிதம்
க்ரமேண ப்ராப்யதே ப்ராப்யமப் யாஸாதேவ நான்யதா
ஏகேனைவ ஶரீரேண யோகாப்யாஸாச் ஶனைஃ ஶனைஃ
சிராத் ஸம்ப்ராப்யதே முக்திர் மர்கடக்ரம ஏவ ஸஃ'

பொ - ரை:—பிரம்மாவே! மேற்சொன்ன யோகம் நான்கும், பிராணாபானன்களின் ஐக்கியமென்றே அறியத்தக்கது. இங்ஙனம் சுருக்கமாகச் சிவபெருமானாற் சொல்லப்பட்டது. முறையான யோகப் பயிற்சியாலேயே முத்தி அடையப் படுகின்றது. வேறு வழியாற் பெறப்படுவது அன்று. இம் முக்தியினடைவு குரங்குப் பிடிவழக்கெனப்படுகிறது. (140)

அ - கை :—யோகசித்தி பெறாது இறந்தவனுக்கு மறுபிறப்பில் சித்தியுண்டாமெனக் கூறல்.

योगसिद्धिं विना देहः प्रमादाद्यदि नश्यति ।
पूर्ववासनया युक्तः शरीरं चान्यदाप्नुयात् ॥ १४१ ॥
ततः पुण्यवशात्सिद्धो गुरुणा सह संगतः ।
पश्चिम द्वारमार्गेण जायते त्वरितं फलम् ॥ १४२ ॥
पूर्वजन्म कृताभ्यासात्सत्वरं फलमश्नुते ।

'யோகஸித்திம் விநாதேஹ: ப்ரமாதாத் யதி நச்யதி
பூர்வ வாஸனயா யுக்த: சரீரம் சான்யதாப்னுயாத்
தத: புண்யவசாத் ஸித்தோ குருணா ஸஹ ஸங்கத:
பச்சிம த்வாரமார்கேண ஜாயதே த்வரிதம் பலம்
பூர்வஜன்ம க்ருதாப்யாஸாத் ஸத்வரம் பலமச்னுதே.'

பொ - ரை :—யோகி பயிற்சியின் குறைவால் யோக சித்தியைப் பெறாது உடலை விடுவானாயின், முன் நினைவுடன் கூடி வேறு உடலை அடைகின்றான். பின்னர் நல்வினைப் பயனால் குருவை அடைந்து யோகசித்தியைப் பெறுகின்றான். அவனுக்குப் பின்புறமுள்ள சுழுமுனை வழியானது விரைவில் திறக்கப்படுகிறது. இது அவன் முற்பிறப்பிற் செய்த யோகப் பயிற்சியின் பயனுமென்று அறிவாயாக. (142)

அ - கை :—யோகப் பயிற்சியே தடையற்ற முத்தியைத் தருமெனக் கூறல்.

एतदेव हि विज्ञेयं तत्काक मतमुच्यते ॥ १४३ ॥
नास्ति काक मतादन्यदभ्यासाख्य मतः परम् ।
तेनैव प्राप्यते मुक्तिर्नान्यथा शिवभाषितम् ॥ १४४ ॥

ஏததேவ ஹி விஜ்ஞேயம் தத் காக மதமுச்யதே
நாஸ்தி காக மதாதன்ய தப்யாஸாக்யமத: பரம்
தேனைவ ப்ராப்யதே முக்திர் நான்யதா சிவபாஷிதம்.

பொ - ரை :—இந்த யோகவழியே நன்கு அறியத் தக்கது. இது காகபுசுண்டரது கொள்கை எனப்படும். இந்த காக மதத்தினும் வேறு யோகப் பயிற்சி சிறந்ததா யில்லை. அந்தக் காகபுசுண்டரது வழியாலேயே முக்தி அடையப் படுகின்றது. வேறு வழியால் ஆவது அன்று, எனச் சிவனால் சொல்லப்பட்டது. (144)

அ - கை :—யோகிக்கு எல்லாச் செல்வத்தினடைவும், ஜீவன் முக்திப் பேறும், உண்டாமெனக் கூறல்.

हठयोग क्रमात्काष्ठा सहजीव लयादिकम् ।
नाकृतं मोक्षमार्गं स्यात्प्रसिद्धं पश्चिमं विना ॥ १४५ ॥
आदौ रोगाः प्रणस्यन्ति पश्चाज्जाड्यं शरीरजम् ।
ततः समरसो भूत्वा चन्द्रो वर्षत्यनारतम् ॥ १४६ ॥
धातूंश्च संग्रहेद्वह्निः पवनेन समं ततः ।
नानानादाः प्रवर्तन्ते मार्दवं स्यात्कलेबरम् ॥ १४७ ॥

‘ ஹடயோகக்ரமாத் காஷ்டா ஸஹஜீவ லயாதிகம்
நாக்ருதம் மோக்ஷமார்கம் ஸ்யாத் ப்ரஸித்தம் பஸ்சிமம் விஞ
ஆதௌ ரோகாஃ ப்ரணஸ்யந்தி பஸ்சாத் ஜாட்யம் ஸரீரஜம்
ததஃ ஸமரஸோ பூத்வா சந்த்ரோ வர்ஷத்யஞரதம்
தாதூம்ஸ்ச ஸங்க்ரஹேத் வஹ்னிஃ பவனேன ஸமம் ததஃ
நாஞ நாதாஃ ப்ரவர்தந்தே மார்தவம் ஸ்யாத் களேபரம்.

பொ-ரை :—ஹடயோக முறையால் முடிவான ஞானத்துடன் ஜீவ வொடுக்க முதலியன, உண்டாகின்றன. ஆனல் வெளிப்படையான சுழுமுஞ வழியன்றி வீட்டின் வழி ஏற்படுவதில்லை. அவ்வழி உண்டாயின் அவனுக்கு முதலில் நோய்கள் ஒழிகின்றன. பின்னர் உடம்பிலுள்ள சோம்பல் நீங்குகின்றது. பிறகு பிராணன், அக்கினி, சூரியன், சந்திரன், சக்தி, சிவம் இவர்களின் ஐக்கியம் உண்டாகின்றது. பின்னர் சந்திரன் இடையருது அமுதைப் பொழிகின்ருன். அதன் பின் காற்றுடன் கூடிய நெருப்பு ஏழு தாதுக்களையும் உண்டு விடுகின்றது. பிறகு பல்வேறு நாதங்கள் உண்டாகின்றன. யோகியின் உடலும் மிருதுவாய் அமைகின்றது. (147)

இதுவுமது,

जित्वा वृष्ट्यादिकं जाड्यं खेचरः स भवेन्नरः ।
सर्वज्ञोऽसौ भवेत्कामरूपः पवनवेगवान् ॥ १४८ ॥
क्रीडते त्रिषु लोकेषु जायन्ते सिद्धयोऽखिलाः ।
कर्पूरे लीयमाने किं काठिन्यं तत्र विद्यते ॥ १४९ ॥
अहंकार क्षये तद्वद्देहे कठिनता कुतः ।
सर्वकर्ता च योगीन्द्रः स्वतन्त्रोऽनन्तरूपवान् ॥ १५० ॥
जीवन्मुक्तो महायोगी जायते नात्र संशयः ।

"ஜித்வா வ்ருஷ்ட்யாதிகம் ஜாட்யம் கேசரஃ ஸ பவேந்நரஃ
ஸர்வஜ்ஞோऽஸௌ பவேத் காமரூபஃ பவனவேகவான்.
க்ரீடதே த்ரிஷு லோகேஷு ஜாயந்தே ஸித்தயோऽகிலாஃ
கர்பூரே லீயமானே கிம் காடின்யம் தத்ர வித்யதே
அஹங்கார க்ஷயே தத்வத் தேஹே கடினதா குதஃ
ஸர்வ கர்தாச யோகீந்த்ரஃ ஸ்வதந்த்ரோऽனந்த ரூபவான்
ஜீவன் முக்தோ மஹாயோகி ஜாயதே நாத்ர ஸம்ஶயஃ'

போ - ரை :—இவ்வித சித்தி முதலியவற்றை அனுப விப்பதால் சோம்பலுண்டாகாவண்ணம் பயில்கின்ற யோகி உடம்பிலுள்ள ஜடத்தன்மையை வென்று, வானில் மேக மண்டலத்தைக் கடந்து, பிரகாசமுள்ளவனுகிய அவன் சூரிய மண்டலத்தை அடைகின்றான். அங்ஙனமே அவன் எல்லாம் அறிந்தவனாய் விரும்பிய வடிவுகொண்டு காற்றைப் போல் வேகமாய்ச் செல்லுகின்றான். அவனுக்கு எல்லாச் சித்திகளும் உண்டாகின்றன. அவன் மூன்று உலகங் களிலும் விளையாடுகின்றான். கற்பூரம் சுடரில் கரைந்த பொழுது அதில் கடினத்தன்மை எவ்வாறு இல்லையோ,

அதுபோல் யோகியினிடத்து அகங்காரம் அழிந்தபொழுது, உடலில் கடினத்தன்மை எவ்வாறு உளதாம்? இல்லை என்பது அறியவும். ஆகையால் உருவிழந்து நின்ற அந்த யோகிகள் தலைவன் சுதந்திரனும், பல்வேறு வடிவு கொண்டவனும், எல்லாவற்றையும் செய்கின்றவனாகவும் ஆகின்றான். அவனே மகா யோகியும் ஜீவன் முக்தனும் ஆகின்றான். இதில் ஐயமில்லை. (150)

அ - கை :—செயற்கையிலும் இயற்கையிலுமுண்டான சித்திகளை மறைக்கவேண்டுமெனக் கூறல்.

द्विविधाः सिद्धयो लोके कल्पिता कल्पितास्तथा ॥ १५१ ॥
रसौषध क्रियाजाल मन्त्राभ्यासादि साधनात् ।
सिध्यन्ति सिद्धयो यास्तु कल्पितास्ताः प्रकीर्तिताः ॥ १५२ ॥
अनित्या अल्पवीर्यास्ताः सिद्धयः साधनोद्भवाः ।
साधनेन विनाप्येवं जायन्ते स्वत एव हि ॥ १५३ ॥
स्वात्मयोगैक निष्ठेषु स्वातन्त्र्यादीश्वरप्रियाः ।
प्रभूताः सिद्धयो यास्ताः कल्पना रहिताः स्मृताः ॥ १५४ ॥

* த்விவிதா: ஸித்தயோ லோகே கல்பிதா கல்பிதாஸ்ததா
ரஸௌஷத க்ரியாஜால மந்த்ராப்யாஸாதி ஸாதனாத்
ஸித்யந்தி ஸித்தயோ யாஸ்து கல்பிதாஸ்தா: ப்ரகீர்திதா:
அனித்யா அல்பவீர்யாஸ்தா: ஸித்தய: ஸாதனோத்பவா:
ஸாதனேன விநாப்யேவம் ஜாயந்தே ஸ்வத ஏவ ஹி
ஸ்வாத்ம யோகைக நிஷ்டேஷு ஸ்வாதந்த்ர்யாதீஶ்வர [ப்ரியா:
ப்ரபூதா: ஸித்தயோ யாஸ்தா: கல்பனா ரஹிதா: ஸ்ம்ருதா:

போ - ரை :—உலகில் சாதனங்களாலுண்டாவன, இயற்கையிலுண்டாவன, எனச் சித்திகள் இருவகையின, இரஸம், மூலிகை, தொழில், மந்திரம், பயிற்சி முதலிய சாதனங்களால் எந்தச் சித்திகள் உண்டாயினவோ, அவைகள் பொய்ச் சித்திகள் என்று அறியவும். சாதனமின்றித் தாமே உண்டான சித்திகள் எவையோ, அவை தனது ஆன்மயோகம் ஒன்றிலேயே நிலைத்தவர்களிடத்தில் உண்டாவன, என்று அறிக. இச் சித்திகளே ஈசனுக்குப் பிரியமானவைகள், உண்மையானவைகள் என்று கருதப்படுகின்றன. (154)

இதுவுமது.

सिद्धा नित्या महावीर्या इच्छारूपाः स्वयोगजाः ।
चिरकालात्प्रजायन्ते वासना रहितेषु च ॥ १५५ ॥
तास्तु गोप्या महायोगात्परमात्म पदेऽव्यये ।
विना कार्यं सदा गुप्तं योगसिद्धस्य लक्षणम् ॥ १५६ ॥

'ஸித்தா நித்யா மஹாவீர்யா இச்சாரூபாஃ ஸ்வயோகஜாஃ
சிரகாலாத் ப்ரஜாயந்தே வாஸனா ரஹிதேஷுச
தாஸ்து கோப்யா மாஹாயோகாத் பரமாத்ம பதேऽவ்யயே
விநா கார்யம் ஸதா குப்தம் யோகஸித்தஸ்ய லக்ஷணம்.'

போ - ரை :—தனது யோக வலிமையால் வெளிப்படுகின்றவர்களும், விரும்பிய வடிவு கொள்கின்றவர்களுமான பேராற்றல் வாய்ந்த அச்சித்தர்கள் என்றும் அழியாதவர்களாய் இருக்கின்றார்கள். உடலை மறந்து வாஸனையொழிந்தவர்களிடத்திலும் நீண்ட நாட்குப் பின்னர் இச்சித்திகள் தோன்றுகின்றன. மகா யோகத்தினின்றும் உண்டான அழிவற்ற பரமான்ய பதத்தில் அச்சித்திகள் மறைத்துக்

காக்கத்தக்கன. பயனின்றி என்றும் வெளிப் படுத்தாதிருத்தலே யோகசித்தி அடைந்தவனது இலக்கணம் என்று அறிக. (156)

அ - கை :—யோக சித்தியுள்ளவன், ஜீவன். முக்தன், இவர்களின் இலக்கணங் கூறல்.

यथा काशीं समुद्दिश्य गच्छद्भिः पथिकैः पथि ।
नानातीर्थानि दृश्यन्ते नानामार्गास्तु सिद्धयः ॥ १५७ ॥
स्वयमेव प्रजायन्ते लाभालाभ विवर्जिते ।
योगमार्गे तथैवेदं सिद्धिजालं प्रवर्तते ॥ १५८ ॥
परीक्षकैः स्वर्णकारै र्हेम संप्रोच्यते यथा ।
सिद्धिभिर्लक्षयेत्सिद्धं जीवन्मुक्तं तथैव च ॥ १५९ ॥
अलौकिक गुणास्तस्य कदाचिद्दृश्यते ध्रुवम् ।
सिद्धिभिः परिहीनं तु नरं बद्धं तु लक्षयेत् ॥ १६० ॥

'யதா காஶீம் ஸமுத்திஶ்ய கச்சத்பி: பதிகை: பதி
நாநா தீர்தானி த்ருஶ்யந்தே நாநா மார்காஸ்து ஸித்தய:
ஸ்வயமேவ ப்ரஜாயந்தே லாபாலாப விவர்ஜிதே
யோகமார்கே ததைவேதம் ஸித்தி ஜாலம் ப்ரவர்ததே
பரீக்ஷகை: ஸ்வர்ணகாரைர் ஹேம ஸம்ப்ரோச்யதே யதா
ஸித்திபிர் லக்ஷயேத் ஸித்தம் ஜீவன் முக்தம் ததைவச
அலௌகிக குணாஸ்தஸ்ய கதாசித் த்ருஶ்யதே த்ருவம்
ஸித்திபி: பரிஹீனந்து நரம் பத்தம்து லக்ஷயேத்.'

போ - ரை :—காசியை நோக்கிச் செல்கின்ற வழிப் போக்கர்கள் பல்வேறு தீர்த்தங்களையும், பல்வேறு வழிகளையும், பல்வேறு பயன்களையும், எங்ஙனம் காண்கின்ற

னரோ, அங்ஙனமே விருப்பு வெறுப்பற்ற முக்தனிடத்தில் பல சித்திகள் தாமே உண்டாகின்றன. அங்ஙனமே யோக வழியிலும், கூட்டமான சித்திகள் தோன்றுகின்றன. பரீக்ஷையிற்றேர்ந்த கம்மியர்களால் தங்கம் எங்ஙனம் அறிந்து சொல்லப்படுகிறதோ? அங்ஙனமே ஜீவன் முக்தனையும், சித்தனையும், சித்திகளால் அறியத்தக்கது. எப்பொழுதாவது அச்சித்தனுக்கு உலகைக் கடந்த செயல் வெளிப்படுகின்றது. அத்தகைய சித்திகளின்றிய மனிதன் கட்டுப் பட்டவன் என்று அறிவாய் (160)

அ - கை :—ஞானிக்கு உடலுள்ள பொழுதே விதேக முக்தியினடைவு கூறல்.

अजरामर पिण्डो यो जीवन्मुक्तः स एव ही ।
पशुकुक्कुट कीटाद्या मृतिं संप्राप्नुवन्ति वै ॥ १६१ ॥
तेषां किं पिण्डपोतेन मुक्तिर्भवति पद्मज ।
न बहिः प्राण आयाति पिण्डस्य पतनं कुतः ॥ १६२ ॥
पिण्डपातेन या मुक्तिः सा मुक्ति र्न तु हन्यते ।
देहे ब्रह्मत्व मायाते जलानां सैन्धव यथा ॥ १६३ ॥
अनन्यतां यदा याति तदा मुक्तः स उच्यते ।
विमतानि शरीराणि इन्द्रियाणि तथैव च ॥ २६४ ॥
ब्रह्मदेहत्व मापन्नं वारि बुद्बुदतामिव ।

'அஜராமர பிண்டோ யோ ஜீவன்முக்தஃ ஸ ஏவஹி
பசுகுக்குட கீடாத்யா ம்ருதிம் ஸம்ப்ராப்னுவந்தி வை
தேஷாம் கிம் பிண்டபாதேன முக்திர் பவதி பத்மஜ
ந பஹிஃ ப்ராண ஆயாதி பிண்டஸ்ய பதனம் குதஃ

பிண்டபாதேன யாமுக்திः ஸாமுக்திர் நது ஹன்யதே
தேஹே ப்ரஹ்மத்வ மாயாதே ஜலானாம் ஸைந்தவம் யதா
அனன்யதாம் யதா யாதி ததா முக்தः ஸ உச்யதே
விமதானி ஶரீராணி இந்த்ரியாணி ததைவச
ப்ரஹ்ம தேஹத்வ மாபன்னம் வாரி புத்புததாமிவ.'

போ-ரை:—எவன் மூப்பு இறப்புகளின் நீங்கிய உட லுள்ளவனே, அவனே ஜீவன் முக்தன் எனப்படுவன். மாடு, கோழி, புழு முதலியவைகள் மறித்தே விடுகின்றன. அவை கட்கு உடலை விடுவதால் முக்தி உளதாமா என்ன? யோகிக் கோவெனில் பிராணன் வெளிப்படுவதே இல்லை. ஆகையால் உடல் கீழ் வீழ்வதில்லை. உடல் வீழ்ச்சியால் யாதொரு முக்தி யுளதாமோ, அது முக்தி எனப் படுவதில்லை. மற்றே சொல்லப்பட்டதாகிறது. எங்ஙனம் நீரின் திரட்சியே உப்புக் கட்டியாமோ, அங்ஙனம் பிரம்மமே உடலாய்ச் சமைகின்றது எப்பொழுது இவற்றில் வேற்றுமை யுணர்வு இன்றியவ னாமோ, அப்பொழுதே அவன் முக்தன் எனப் படுகின்றான். கடலில் குமிழிகள் போன்று பிரமத்தில் உடல்களும் புலன் களும் வேற்றுருவாயின. ஆகையால் பிரம்மமே உடலாயிற்று என்பது அறியவும். (164)

அ-கை:—சிற்றுருவும் பேருருவும் சிவாலயம் எனக் கூறல்.

दशद्वारपुरं देहं दशनाडी महापथम् ॥ १६५ ॥
दशभिर्वायुभिर्व्याप्तं दशेन्द्रिय परिच्छदम् ।
षडाधारापवरकं षडन्वय महावनम् ॥ १६६ ॥

चतुः पीठ समाकीर्णं चतुराम्नाय दीपकम् ।
बिन्दुनाद महालिंगं शिवशक्ति निकेतनम् ॥ १६७ ॥
देहं शिवालयं प्रोक्तं सिद्धिदं सर्वदेहिनाम् ।

'தஶத்வார புரம் தேஹம் தஶநாடீ மஹாபதம்
தஶபிர் வாயுபிர் வ்யாப்தம் தஶேந்த்ரிய பரிச்சதம்
ஷடாதாரா பவரகம் ஷடன்வய மஹாவனம்
சதுஃ பீடஸமாகீர்ணம் சதுராம்நாய தீபகம்
பிந்துநாத மஹாலிங்கம் ஶிவஶக்தி நிகேதனம்
தேஹம் ஶிவாலயம் ப்ரோக்தம் ஸித்திதம்
ஸர்வதேஹினாம்.'

பொ-ரை:—உடல் பத்து வாயிலுள்ள ஊராகவும், பத்து நரம்புகளாலாகிய பெருவழி உள்ளதெனவும், பத்து காற்றுகளால் நிறைந்ததும், பத்து புலன்களாகிய வேலையாட்களை உடையதும், ஆறு தாரச் சக்கரங்களுக்கு உள்ளிடமாயிருப்பதும், ஆறு ருதுக்கள் தோன்றும் காடாக உள்ளதும், காம கிரி முதலிய பீடங்களால் பரவியதும், நான்கு வேதங்களால் விளங்குவதும், பிந்து நாதங்களைப் பெரிய லிங்கமாகவுடையதும், சிவசக்திகள் இருக்கும் இடமானதுமான இந்த உடல் சிவாலயமென்றே சொல்லப்படுகிறது. எல்லாவுயிர்களும் விரும்பிய சித்தியைக் கொடுப்பதெனவும் அறிக. (167)

அ-கை:—ஆறுதாரங்களையும் நான்கு பீடங்களையும் விரித்துக் கூறல்.

गुदमेढ्रान्तरालस्थं मूलाधारं त्रिकोणकम् ॥ १६८ ॥
शिवस्य जीवरूपस्य स्थानं तद्धि प्रचक्षते ।
यत्र कुण्डलिनी नाम पराशक्तिः प्रतिष्ठिता ॥ १६९ ॥

यस्मादुत्पद्यते वायु र्यस्माद्वह्निः प्रवर्तते ।
यस्मादुत्पद्यते बिन्दुर्यस्मान्नादः प्रवर्तते ॥ १७० ॥
यस्मादुत्पद्यते हंसो यस्मादुत्पद्यते मनः ।
तदेतत्काम रूपाख्यं पीठं काम फलप्रदम् ॥ १७१ ॥
स्वाधिष्ठानाह्वयं चक्रं लिङ्गमूले षडश्रके ।
नाभिदेशे स्थितं चक्रं दशारं मणिपूरकम् ॥ १७२ ॥

குதமேட்ராந்த ராளஸ்தம் மூலாதாரம் த்ரிகோணகம்
ஶிவஸ்ய ஜீவரூபஸ்ய ஸ்தானம் தத்ஹி ப்ரசக்ஷதே
யத்ர குண்டலினீ நாம பரா சக்திஃ ப்ரதிஷ்டிதா
யஸ்மாதுத்பத்யதே வாயுர் யஸ்மாத் வஹ்னி ப்ரவர்ததே
யஸ்மா துத்பத்யதே பிந்துர் யஸ்மாந்நாதஃ ப்ரவர்ததே
யஸ்மாதுத்பத்யதே ஹம்ஸோ யஸ்மாதுத்பத்யதே மனஃ
ததேதத் காமரூபாக்யம் பீடம் காம பலப்ரதம்
ஸ்வாதிஷ்டானாஹ்வயம் சக்ரம் லிங்கமூலே ஷடஶ்ரகே
நாபிதேஶே ஸ்திதம் சக்ரம் தஶாரம் மணிபூரகம்.

பொ - ரை :—மல வாயிலுக்கும் நீர் வாயிலுக்கும் நடுவிலுள்ளது மூலாதாரமாகிறது. அதுவே ஜீவவுருக்கொண்ட சிவனுக்கு இருப்பிடமாகச் சொல்லப்படுகிறது. எதில் குண்டலினி எனப் பெயருள்ள பராசக்தி நிலைபெற்றுளதோ, எங்கிருந்து பிராணன் தோன்றுகிறதோ, எங்கிருந்து மூலக் கனல் வெளிப்படுகிறதோ, எதிலிருந்து பிந்து தோன்றுகிறதோ, எதிலிருந்து நாதம் வெளிப்படுகிறதோ, எதிலிருந்து ஹம்ஸ மந்திரம் தோன்றுகிறதோ, எதிலிருந்து மனம் உண்டாகிறதோ, அத்தகைய பெருமை உள்ளதும், விரும்பிய பயனைக் கொடுப்பதுமான அது காமகிரி பீட

மென்று அறிக. குறியினடியில் ஆறு இதழுள்ள சுவாதிட்டான சக்காம் உளது. கொப்பூளில் பத்திதழுள்ள மணிபூரகச் சக்கரம் உளது.

இதுவுமது

द्वादशारं महाचक्रं हृदये चाप्यनाहतम् ।
तदेतत्पूर्ण गिर्याख्यं पीठं कमलसंभव ॥ १७३ ॥
कण्ठकूपे विशुद्ध्याख्यं यच्चक्रं षोडशाश्रकम् ।
पीठं जालन्धरं नाम तिष्टत्यत्र सुरेश्वर ॥ १७४ ॥
आज्ञा नाम भ्रुवोर्मध्ये द्विदलं चक्र मुत्तमम् ।
उड्याणाख्य महापीठ मुपरिष्टात्प्रतिष्ठितम् ॥ १७५ ॥
चतुरश्रं धरण्यादौ ब्रह्मा तत्राधि देवता ।
अर्धचन्द्राकृतिजलं विष्णुस्तस्याधि देवता ॥ १७६ ॥
त्रिकोण मण्डलं वह्नी रुद्रस्तस्याधि देवता ।
वायोर्बिम्बं तु षट्कोण मीश्वरोऽस्याधि देवता ॥ १७७ ॥
आकाश मण्डलं वृत्तं देवतास्य सदा शिवः ।
नादरूपं भ्रुवोर्मध्ये मनसो मण्डलं विदुः ॥ १७८ ॥

'த்வாதஶாரம் மஹாசக்ரம் ஹ்ருதயே சாப்யனாஹதம்
ததேதத் பூர்ணகிரயாக்யம் பீடம் கமலஸம்பவ
கண்டகூபே விஶுத்த்யாக்யம் யச்சக்ரம்
ஷோடஶாஶ்ரகம்
பீடம் ஜாலந்தரம் நாம திஷ்டத்யத்ர ஸுரேஶ்வர
ஆஜ்ஞா நாம ப்ருவோர் மத்யே த்விதளம் யச்சக்ர
முத்தமம்
உட்யாணாக்ய மஹாபீட முபரிஷ்டாத் ப்ரதிஷ்டிதம்

7

சதுரஸ்ரம் தரண்பாதெள ப்ரஹ்மா தத்ராதி தேவதா
அர்த சந்த்ராக்ருதி ஜலம் விஷ்ணுஸ்தஸ்யாதி தேவதா
த்ரிகோண மண்டலம் வஹ்னீ ருத்ரஸ்தஸ்யாதி தேவதா
வாயோர் பிம்பந்து ஷட்கோண மீஸ்வரோதஸ்யாதி
தேவதா
ஆகாஶமண்டலம் வ்ருத்தம் தேவதாஸ்ய ஸதாஶிவஃ
நாதரூபம் ப்ருவோர்மத்யே மனஸோ மண்டலம் விதுஃ'

பொ - ரை:—மார்பில் பன்னிரண்டிதழுள்ள மகிமை பொருந்திய அனுகத சக்கரம் உள்ளது. அதுவே பூர்ணகிரி பீடமென்று அறிக. கண்ட கூபத்தில் பதினாறு இதழுள்ள விசுத்தி சக்கரமுளது. அதில் ஜாலந்தரபீடம் உளதென்று அறிக. புருவங்களின் நடுவில் இரண்டிதழுள்ள சிறந்த ஆஜ்ஞா சக்கரம் உளது. அதற்குமேல் உட்டியான பீடம் நிலைபெற்றுள்ளது என அறியவும். முதலிலுள்ள மூலாதாரத்தில் பிருதிவி நாற்கோணமாக இருக்கிறது. அதற்கு பிரம்மா அதிதேவதை. கொப்பூளில் அப்புதத்துவம் அறைச் சந்திர வடிவமாக உளது. அதற்கு விஷ்ணு அதிதேவதை. மார்பில் நெருப்பு முக்கோண வடிவமாக உளது. அதற்கு அதிதேவதை உருத்திரன். கண்டத்தில் காற்று அறுகோண வடிவாக உளது. அதற்கு அதிதேவதை மகேசன். புருவ நடுவில் ஆகாயம் வட்டமாக உளது. அதற்கு அதிதேவதை சதாசிவன். புருவங்களின் நடுவில் நாதவடிவாய் மனம் உளது என்று அறியவும். (178)

முதல் அத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது அத்தியாயம்

அ - கை :—பண்பட்ட அதிகாரிக்கு யோக ஞானத்தைக் கூறவேண்டும் எனக் கூறல்.

पुनर्योगस्य माहात्म्यं श्रोतुमिच्छामि शंकर ।
येन विज्ञान मात्रेण खेचरी समतां व्रजेत् ॥ १ ॥
शृणु ब्रह्मन्प्रवक्ष्यामि गोपनीयं प्रयत्नतः ।
द्वादशाब्दं तु शुश्रूषां यः कुर्या दप्रमादतः ॥ २ ॥
तस्मै वक्ता यथा तथ्यं दान्ताय ब्रह्मचारिणे ।
पाण्डित्या दर्थलोभाद्वा प्रमादाद्यः प्रयच्छति ॥ ३ ॥
तेनाधीतं श्रुतं तेन तेन सर्वं मनुष्ठितम् ।
मूलमन्त्रं विजानाति यो विद्वान्गुरु दर्शितम् ॥ ४ ॥

'புனர் யோகஸ்ய மாஹாத்ம்யம் ஶ்ரோதுமிச்சாமி ஶங்கர
யேன விஜ்ஞான மாத்ரேண கேசரீ ஸமதாம் வ்ரஜேத்,
ஶ்ருணு ப்ரஹ்மன் ப்ரவக்ஷ்யாமி கோபனீயம் ப்ரயத்னத:
த்வாதஶாப்தம் து ஶுஶ்ரூஷாம் ய: குர்யா தப்ரமாதத:
தஸ்மை வக்தா யதா தத்யம் தாந்தாய ப்ரஹ்மசாரிணே
பாண்டித்யா தர்தலோபாத்வா ப்ரமாதாத் ய: ப்ரயச்சதி
தேனாதீதம் தம் ஶ்ருதம் தேன தேன ஸர்வ மனுஷ்டிதம்
மூலமந்த்ரம் விஜானாதி யோ வித்வான் குரு தர்ஶிதம்.'

போ - ரை :—சிவபெருமானே ; யாதொரு யோகத்தை நன்கு அறிவதாலேயே சூரியனுக் கொப்பான ஒளியைப் பெறுவனோ, அத்தகைய மந்திரயோகத்தின் மகிமையை மீண்டும் கேட்க விரும்புகின்றேன். பிரம்மாவே ! அதைக் கூறுகின்றேன் கேட்பாயாக, எந்த மாணவன் பன்னிரண்

டாண்டு சோம்பலின்றி குருபணி செய்கின்றவனும் பிரம்ம சரியம் புலனொடுக்க முதலிய நற்குணமுள்ளவனே, அவன் பொருட்டு ஆசிரியன் இந்த உண்மையான யோக நெறியைக் கூறவேண்டும். அவ்வாறின்றி பெருமையை விரும்பியாவது பொருளிச்சையாலாவது, மறதியாலாவது, கூறத்தக்கதன்று; முயன்று மறைத்து இந்த வித்தை காக்கத்தக்கது. குருவால் உபதேசித்தருளிய மூலமந்திரத்தை எந்த அறிஞன் விளக்க முற அறிவனே அவன் எல்லாங்கற்றவன். அவனே எல்லாங் கேட்டவன். அவனே எல்லாஞ் செய்து முடித்தவன் என்று அறிக. (4)

அ - கை :—பிரணவ மூலமந்திரத்தின் மகிமையைக் கூறல்.

शिवशक्ति मयं मन्त्रं मूलाधारात्समुत्थितम् ।
तस्य मन्त्रस्य वै ब्रह्मञ्छ्रोता वक्ता च दुर्लभः । ५ ॥
एतत्पीठ मिति प्रोक्तं नादलिङ्गं मदात्मकम् ।
तस्य विज्ञान मात्रेण जीवन्मुक्तो भवेज्जनः ॥ ६ ॥
अणिमादिक मैश्वर्य मचिरादेव जायते ।

'ஶிவ ஶக்தி மயம் மந்த்ரம் மூலாதாராத் ஸமுத்திதம்
தஸ்ய மந்த்ரஸ்ய வை ப்ரஹ்மன் ஶ்ரோதா வக்தாச [துர்லபஃ
ஏதத் பீடமிதி ப்ரோக்தம் நாதலிங்கம் மதாத்மகம்
தஸ்ய விஜ்ஞான மாத்ரேண ஜீவன்முக்தோ பவேஜ்ஜனஃ
அணிமாதிக மைஶ்வர்ய மசிராதேவ ஜாயதே.'

பொ - ரை :—பிரம்மாவே! பிரணவ வடிவ மூலமந்திரம் மூலாதாரத்தினின்றும் வெளிப்பட்டது. அது சிவ

சக்தி வடிவமானது. அந்த மூலமந்திரத்தைச் சொல்பவனும் அரிது. கேட்பவனும் அரிது, இந்தப் பிரணவமானது, எனது வடிவமென்றும், நாதலிங்கமென்றும், பீடமென்றுஞ் சொல்லப்படுகிறது. அதன் சிறப்பை அறிவதால் மனிதன் ஜீவன் முக்தனாகின்றான். அவனுக்கு அணிமா முதலிய எட்டு ஐஸ்வரியமும் விரைவில் உண்டாகின்றது. (6)

அ - கை :—மூலமந்திர மென்பதின் விளக்கங் கூறல்.

मननात्प्राणनाच्चैव मद्रूपस्याव बोधनात् ॥ ७ ॥
मन्त्र मित्युच्यते ब्रह्मन् मदधिष्ठानतोऽपि वा ।
मूलत्वात्सर्व मन्त्राणां मूलाधारात्समुद्भवात् ॥ ८ ॥
मूलस्वरूप लिङ्गत्वान्मूलमन्त्र इति स्मृतः ।

'மனனாத் ப்ராணனாச்சைவ மத்ரூபஸ்யாவ போதனாத்
மந்த்ர மித்யுச்யதே ப்ரஹ்மன் மததிஷ்டானதோऽபிவா
மூலத்வாத் ஸர்வ மந்த்ராணாம் மூலாதாராத் ஸமுத்பவாத்
மூலஸ்வரூப லிங்கத்வான் மூலமந்த்ர இதி ஸ்ம்ருதః'

பொ - ரை :—பிரம்மாவே! இந்தப் பிரணவமானது எனது வடிவத்தை அறிவிப்பதாலும், எல்லாவற்றின் உள்ளிருந்து இயக்குவதாலும், முக்தி விருப்புள்ளவர்கள் மனனஞ் செய்வதாலும், என்னையே நிலைக் களனாகப் பெற்று விளங்குவதாலும், மூலமந்திரமென்று சொல்லப் படுகிறது. மற்றும் மூலாதாரத்திலிருந்து தோன்றுவதாலும், எல்லாமந்திரங்களும் உண்டாதற்கு மூலமாயிருப்பதாலும், மூலவடிவ லிங்கமாயிருப்பதாலும், மூலமந்திரமென்று கருதப் படுகிறது. (8)

அ - கை :—நாதலிங்கம் என்பதின் விளக்கங் கூறல்.

सूक्ष्मत्वात्कारणत्वाच्च लयनाद्गमनादपि ॥ ९ ॥
लक्षणात्परमेशस्य लिङ्गमित्यभिधीयते ।

'ஸூக்ஷ்மத்வாத் காரணத்வாச்ச லயனாத் கமனாதபி
லக்ஷணாத் பரமேஶஸ்ய லிங்கமித்ய பிதியதே'

பொ - ரை :—பிரணவமாகிய நாதலிங்கமானது, செவிக்கேயன்றி மற்றைய பொறிகட்குப் புலனாகாது நுட்பமாயிருப்பதாலும், எல்லா வொலிகளுந் தோன்றுதற் கிடமாயிருப்பதாலும், எல்லாவொலிகளையுந் தன்னிடத்தே யொடுக்கிக் கொள்வதாலும், தானெல்லா வொலிகளிலுங் கலந்து நிற்பதாலும், முதற்பொருளாகிய பரமசிவனை அறிவிப்பதாலும், நாதலிங்கமென்று சொல்லப்படுகிறது. (9)

அ - கை :—பிரணவ சூத்திரமென்பதின் விளக்கங் கூறல்.

संनिधानात्समस्तेषु जन्तुष्वपि च संततम् ॥ १० ॥
सूचकत्वाच्च रूपस्य सूत्रमित्य भिधीयते ।

'ஸந்நிதானாத் ஸமஸ்தேஷு ஜந்துஷ்வபிச ஸந்ததம்
ஸூசகத்வாச்ச ரூபஸ்ய ஸூத்ரமித் யபிதீயதே'

பொ - ரை :—பிரணவ சூத்திரமாவது எல்லாவுயிர்களிலும் தொடர்ந்து நிற்பதாலும், மிகவும் அண்மையில் இருப்பதாலும், உருவத்தை நன்கு அறிவிப்பதாலும், சூத்திரமென்று சொல்லப்படுகிறது. (10)

அ - கை :—பிரணவமே பிந்துவாகவும், பீடமாகவும் உளதெனக் கூறல்.

महामाया महालक्ष्मी महादेवी सरस्वती ॥ ११ ॥
आधारशक्ति रव्यक्ता यया विश्वं प्रवर्तते ।
सूक्ष्माभा बिन्दुरूपेण पीठरूपेण वर्तते ॥ १२ ॥

'மஹாமாயா மஹாலக்ஷ்மீர் மஹாதேவீ ஸரஸ்வதீ
ஆதாரஶக்தி ரவ்யக்தா யயா விஶ்வம் ப்ரவர்ததே
ஸூக்ஷ்மாபா பிந்துரூபேண பீடரூபேண வர்ததே,'

பொ - ரை :—யாதொரு பிரணவவடிவ பிரகிருதியால் உலகந் தோற்ற முறுகின்றதோ, அதுவே துர்கை, இலக்குமி, ஸரஸ்வதி என்ற மகா சக்திகளை ஒடுக்கி நின்ற ஆதார சக்தி என்றும், அவ்வியக்த சக்தி என்றுஞ் சொல்லப்படுகிறது. தோற்ற ஒடுக்கங்கட்கு இடமாயுள்ள அச்சூக்கும சக்தியானது, பிந்துவாகவும், பீடமாகவும், உளது என்று அறிக. (12)

அ - கை :—அந்த ஒப்பு உயர்வற்ற பிரணவோபதேசத்தால் பிரம்ம ஞானத்தினடைவைக் கூறல்.

बिन्दुपीठं विनिर्भिद्य नादलिङ्ग मुपस्थितम् ।
प्राणेनोच्चार्यते ब्रह्मन् षण्मुखी करणेन च ॥ १३ ॥
गुरूपदेश मार्गेण सहसैव प्रकाशते ।

'பிந்து பீடம் விநிர்பித்ய நாதலிங்க முபஸ்திதம்
ப்ராணேனோச்சார்யதே ப்ரஹ்மன் ஷண்முகீ கரணேன ச
குருபதேஶ மார்கேண ஸஹஸைவ ப்ரகாஶதே.'

பொ - ரை :—பிரம்மாவே! மாணவன் இவ்வாறு குரு உபதேசத்தாலும், ஷண்முகி முத்திரையைப் பயில்வதாலும், பிராணனோடு பிரணவத்தைத் தொடர்ந்து உச்சரிப்பதாலும், பிந்துவையும், பீடத்தையும் கடந்து சென்று நாதலிங்கத்தை

அடைகின்றான். அப்பொழுதே அவனுக்கு பிரம்ம விளக்கம் உளதாகின்றது. (14)

அ - கை:—அவ்விடத்து பிரணவமாகிய பிரம்மம் மூன்று பிரிவாய் விளங்குமெனக் கூறல்.

स्थूलं सूक्ष्मं परं चेति त्रिविधं ब्रह्मणो वपुः ॥ १४ ॥
पञ्च ब्रह्ममयं रूपं स्थूलं वैराजमुच्यते ।
हिरण्यगर्भं सूक्ष्मं तु नादं बीज त्रयात्मकम् ॥ १५ ॥

'ஸ்தூலம் ஸூக்ஷ்மம் பரம்சேதி த்ரிவிதம் ப்ரஹ்மணோ வபுః
பஞ்ச ப்ரஹ்ம மயம் ரூபம் ஸ்தூலம் வைராஜ முச்யதே
ஹிரண்யகர்ப ஸூக்ஷ்மம் து நாதம் பீஜ த்ரயாத்மகம்.'

பொ - ரை:—பிரணவமாகிய பிரம்மம் தூல, சூக்கும, பரமென, மூன்று பிரிவாய் விளக்கமுறுகின்றது. அதன் தூலவடிவமானது விராட்டு என்றும், (பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவனாகிய) பஞ்ச பிரம்ம வடிவென்றும், சூக்குமமானது:—ஹிரண்யகர்பமென்றும், பரமானது:—நாதமென்றுஞ் சொல்லப் படுகிறது. இதுவே பிரணவத்தின் அகார முதலிய பீஜத்திரய வடிவமென்று அறியவும். (15)

அ - கை:—அந்தப் பிரணவ வடிவ ஆன்ம மந்திரப் பயிற்சியாலேயே சுத்தப் பிரமத்தினடைவைக் கூறல்.

परं ब्रह्म परं सत्यं सच्चिदानन्द लक्षणम् ।
अप्रमेय मनिर्देश्य मवाङ्मानस गोचरम् ॥ १६ ॥
शुद्धं सूक्ष्मं निराकारं निर्विकारं निरञ्जनम् ।
अनन्त मपरिच्छेद्य मनूपम मनामयम् ॥ १७ ॥
आत्ममन्त्र सदाभ्यासात्परतत्त्वं प्रकाशते ।

'பரம் ப்ரஹ்ம பரம் ஸத்யம் ஸச்சிதானந்த லக்ஷணம்
அப்ரமேய மனிர்தேஶ்ய மவாங்மானஸ கோசரம்
ஶுத்தம் ஸூக்ஷ்மம் நிராகாரம் நிர்விகாரம் நிரஞ்ஜனம்
அனந்த மபரிச்சேத்ய மனூபம மனாமயம்
ஆத்ம மந்த்ர ஸதாப்யாஸாத் பாதத்வம் ப்ரகாஶதே.'

பொ-ரை:—மேலானது, பெரியது, சிறந்தது, சத்ய மானது, சத்து சித்து ஆனந்த இலக்கணமுள்ளது. அளவை கடந்தது, இதுவெனக் காட்டொணாதது, மனோ வாக்கு களுக்கு எட்டாதது, தூய்மையானது, நுட்பமானது, உரு வின்றியது, மாறுபாடற்றது, நிறைந்தது, முடிவற்றது, பிரி வற்றது, உவமையற்றது, நோயற்றது, என இவ்வாறாகிய பரம்பொருள் ஆன்மப் பிரணவ மந்திரத்தை இடையறாது பயில்வதால் ஒளிருகின்றது. (17)

அ-கை:—பரதத்துவ விளக்கத்தில் உளதாகுங் குறி களைக் கூறல்.

तदभिव्यक्ति चिह्नानि सिद्धि द्वाराणि मे शृणु ॥ १८ ॥
दीपज्वालेन्दु खद्योत विद्युन्नक्षत्र भास्वराः ।
दृश्यन्ते सूक्ष्मरूपेण सदा युक्तस्य योगिनः ॥ १९ ॥
अणिमादिक मैश्वर्य मचिरात्तस्य जायते ।

'ததபிவ்யக்தி சிஹ்னானி ஸித்தித்வாராணி மே ஶ்ருணு
தீபஜ்வாலேந்து கத்யோத வித்யுந் நக்ஷத்ர பாஸ்வராः
த்ருஶ்யந்தே ஸூக்ஷ்ம ரூபேண ஸதா யுக்தஸ்ய யோகினः
அணிமாதிக மைஶ்வர்ய மசிராத் தஸ்ய ஜாயதே.'

பொ-ரை:—பிரம்மாவே! அந்தப் பரதத்துவத்தை அறிபவனுக்குண்டாகுங் குறிகளையும், சித்தியுண்டாம் வழி

களையும், என்னிடங் கேட்பாயாக. இடையறாது ஆன்ம தத்துவத்தை அகத்துப் பயில்கின்ற யோகிக்கு தீபச்சுடர், சந்திரன், ஆகயத்தோற்றம், மின்னல் நக்ஷத்திர முதலிய ஒளிகள் நுண்ணிய வுறுப்புடன் அகத்து காணப்பெறுகின்றன. மற்றும், அவனுக்கு அணிமா முதலிய ஐஸ்வர்யம் விரைவில் உண்டாகின்றது. (19)

அ - கை :—நாதத்தைப் பயில்பவனது மகிமையைக் கூறல்.

नास्ति नादात्परो मन्त्रो न देवः स्वात्मनः परम् ॥ २० ॥
नानु संधेः परा पूजा न हि तृप्तेः परं सुखम् ।
गोपनीयं प्रयत्नेन सर्वदा सिद्धि मिच्छता ॥ २१ ॥

'நாஸ்தி நாதாத் பரோ மந்த்ரோ நதேவஃ ஸ்வாத்மனஃ பரம்
நானு ஸந்தேஃ பரா பூஜா நஹி த்ருப்தேஃ பரம் ஸுகம்
கோபனீயம் ப்ரயத்னேன ஸர்வதா ஸித்தி மிச்சதா.'

பொ - ரை :—நாதப் பயிற்சியினும் சிறந்த மந்திரமில்லை. தனது ஆன்மாவைக் காட்டிலும் சிறந்த தெய்வமில்லை. அநுபவத்தினும் சிறந்த பூஜை இல்லை. திருப்தியினும், அல்லது அமைதியினும் சிறந்த சுகமில்லை. ஆகையால் பேரின்பத்தை அடைய விரும்பிய புருடனால் முயர்ச்சியுடன் என்றும் இந்த வித்தையானது மறைத்துக் காக்கத் தக்கது. (21)

அ - கை :—தெய்வத்தினிடத்தும், குருவினிடத்தும், பக்தியுள்ள ஒருவனுக்கே பரதத்துவ ஞானம் உண்டாமெனக் கூறல்.

मद्भक्त एतद्विज्ञाय कृतकृत्यःसुखी भवेत् ।
यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कतिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥ २२ ॥

'மத்பக்த ஏதத்விஜ்ஞாய க்ருதக்ருத்யஃ ஸுகீ பவேத்
யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ
தஸ்யைதே கதிதா ஹ்யர்தாஃ ப்ரகாஶந்தே மஹாத்மனஃ'

பொ - ரை:—என்னிடம் பக்தியுள்ளவனே இந்தப் பரதத்துவத்தை அறிந்து செய்யத்தக்கன செய்து இன்ப வுருவம் எய்துகின்றான். தேவதையினிடத்து சிறந்த பக்தி எவனுக்குளதோ, அவ்விதமே குருவினிடத்தும் சிறந்த பக்தி எவனுக்குளதோ, அந்த மகாத்மாவிற்கே இதில் கூறியுள்ள நுட்பமான பொருள்கள் விளக்கமெய்துகின்றன. (22)

இரண்டாவது அத்தியாயம் முடிந்தது.

---

## மூன்றாவது அத்தியாயம்

அ - கை:—நாதப் பிரம்மத்திலிருந்து, பரா, பஸ்யந்தி, மத்திமா, வைகிரி, முதலிய வாக்குகள் தோன்றும் முறையைக் கூறல்.

यन्नमस्यं चिदाख्यातं यत्सिद्धीनां च कारणम् ।
येन विज्ञान मात्रेण जन्म बन्धात्प्रमुच्यते ॥ १ ॥
अक्षरं परमो नादः शब्दब्रह्मेति कथ्यते ।
मूलाधार गता शक्तिः स्वाधारा बिन्दुरूपिणी ॥ २ ॥

யந் நமஸ்யம் சிதாக்யாதம் யத் ஸித்தீனாம்ச காரணம்
யேன விஜ்ஞான மாத்ரேண ஜன்மபந்தாத் ப்ரமுச்யதே
அக்ஷரம் பரமோ நாதஃ ஸப்த ப்ரஹ்மேதி கத்யதே
மூலாதார கதா ஸக்திஃ ஸ்வாதாரா பிந்துரூபிணீ'

போ - ரை:—பரதொன்று வணங்குதற்குறிய சித்வடிவமோ, அணிமாதி அட்டசித்திகளின் காரணம் யாதோ, எந்த நாதப்பிரம்மத்தின் ஞானமாத்திரத்தால் பிறவிக் கட்டிலிருந்து விடுதலை பெறுவனோ, அதுவே அழிவற்ற நாதப் பிரம்மமெனவும், சப்தப் பிரம்மமெனவும் சொல்லப்படுகிறது. மூலாதாரத்தை அடைந்துள்ளது குண்டலினி சக்தியாகிறது. அதை ஆதாரமாகப் பெற்று விளங்குவது பிந்துரூப சக்தியாகும்.

இதுவுமது

तस्यामुत्पद्यते नादः सूक्ष्मबीजा दिवांकुरः ।
तां पश्यन्तीं विदुर्विश्वं यया पश्यन्ति योगिनः ॥ ३ ॥
हृदये व्यज्यते घोषो गर्जत्पर्जन्य संनिभः ।
तत्र स्थिता सुरेशान मध्यमेत्यभिधीयते ॥ ४ ॥
प्राणेन च स्वराख्येन प्रथिता वैखरी पुनः ।

'தஸ்யாமுத்பத்யதே நாதஃ ஸூக்ஷ்மபீஜா திவாங்குரஃ
தாம் பஸ்யந்தீம் விதுர் விஸ்வம் யயா பஸ்யந்தி யோகினஃ
ஹ்ருதயே வ்யஜ்யதே கோஷோ கர்ஜத் பர்ஜன்ய ஸந்நிபஃ
தத்ர ஸ்திதா ஸுரேஸான மத்யமேத்ய பிதீயதே
ப்ராணேனச ஸ்வராக்யேன ப்ரதிதா வைகரீ புனஃ'

போ - ரை:—அச்சக்தியினிடத்தில் நாதம் உண்டாகின்றது. விதையிலிருந்து சூக்குமமான மூளை தோன்றுவது

போல் அந்த நாதத்திலிருந்து பரா வாக்கு உண்டாகிறது. அந்தப் பரா வாக்கிலிருந்து பஸ்யந்தி வாக்கு உண்டாகிறது. யோகிகள் எதனால் உலகைக் காண்கின்றனரோ, அதனால் அதைப் பஸ்யந்தி எனக் கூறுகின்றனர். அந்தப் பஶ்யந்தி வாக்கிலிருந்து மத்திமா என்ற வாக்குண்டாகின்றது. அது இதயத்தில் இடியையொத்த வொலியுடன் தோற்ற முறுவதாகும். அதுவே மத்திமா என்று சொல்லப்படுகிறது. பிரம்மாவே! மீண்டும் அந்த மத்யமா என்ற வாக்கானது ஒலி வடிவாய்ப் பிராணனோடு வாயினிடத்து வெளிபடுவதால் வைகரி என்ற பெயருள்ளதாகின்றது. (4)

அ - கை :—அந்த வைகரீ வாக்கினது விரிவைக் கூறல்.

शाखा पल्लव रूपेण ताल्वादि स्थान घट्टनात् ॥ ५ ॥
अकारादि क्षकारान्तान्यक्षराणि समीरयेत् ।
अक्षरेभ्यः पदानि स्युः पदेभ्यो वाक्यसंभवः ॥ ६ ॥
सर्वे वाक्यात्मका मन्त्रा वेदशास्त्राणि कृत्स्नशः ।
पुराणानि च काव्यानि भाषाश्च विविधा अपि ॥ ७ ॥

'ஶாகா பல்லவ ரூபேண தால்வாதி ஸ்தானகட்டனாத்
அகாராதி க்ஷகாராந்தான்யக்ஷராணி ஸமீரயேத்
அக்ஷரேப்ய: பதானிஸ்யு: பதேப்யோ வாக்ய ஸம்பவ:
ஸர்வே வாக்யாத்மகா மந்த்ரா வேத ஶாஸ்த்ராணி
க்ருத்ஸ்னஶ:
புராணானிச காவ்யானி பாஷாஶ்ச விவிதா அபி.'

பொ - ரை :—கிளைகளில் இலைகள் தோன்றுவதுபோல் கழுத்து, உதடு, பல், அண்ண முதலிய இடங்களைத்தாக்கி வெளிப்படுவதால் அகார முதல் க்ஷகாராந்தமாயுள்ள எழுத்துக்கள் தெளிவாய்த் தோன்றுகின்றன. அவைகள் முறையே

எழுத்துக்கள், பதங்கள், சொற்கள், மந்திரங்கள், வேதங்கள், சாத்திரங்கள், பதினெண் புராணங்கள், காவியங்கள், பல்வேறு மொழிகள்.

இதாவுமது,

सप्तस्वराश्च गाथाश्च सर्वे नाद समुद्भवाः ।
एषा सरस्वती देवी सर्वभूत गुहाश्रया ॥ ८ ॥
वायुना वह्नियुक्तेन प्रेर्यमाणा शनैः शनैः ।
द्वित्रिवर्ण पदैर्वाक्यै रित्येवं वर्तते सदा ॥ ९ ॥

'ஸப்தஸ்வராஸ்ச காதாஸ்ச ஸர்வே நாத ஸமுத்பவாஃ
ஏஷா ஸரஸ்வதீ தேவீ ஸர்வபூத குஹாஸ்ரயா
வாயுனு வஹ்னியுக்தேன ப்ரேர்யமாணு ஸனைஃ ஸனைஃ
த்வித்ரி வர்ண பதைர் வாக்யை ரித்யேவம் வர்த்தே ஸதா.

பொ - ரை:—ஏழுஸ்வரங்கள், கதைகள், முதலிய யாவும் நாதப்பிரம்மத்திலிருந்து வெளிப்பட்டன. ஆகையால் இந்த நாதப்பிரம்மமே வாக் தெய்வமாகிய ஸரஸ்வதி எனப்படுகிறுள். எல்லாச் சீவர்களின் இதய மலரில் ஒலி வடிவாய் ஸரஸ்வதி வசிக்கின்றுள். இதயத்திலுள்ள வாக் வாதினியாகிய ஸரஸ்வதி நெருப்புடன் கூடிய பிராணனுல் ஏவப்பட்டவளாய் மெல்ல மெல்ல ஓரெழுத்து, இரண்டெழுத்து, மூன்றெழுத்து, பதங்கள், வாக்கியங்கள், எனக் கூறும்படியாக வாயினிடத்து வெளிப்படுகின்றுள். (9)

அ - கை:—அந்த வைகரீ வாக்கை உபாசிப்பவனுக்கு வாக்சித்தி உண்டாமெனக் கூறல்.

य इमां वैखरीं शक्तिं योगी स्वात्मनि पश्यति ।
स वाक्सिद्धि मवाप्नोति सरस्वत्याः प्रसादतः ॥ १० ॥
वेदशास्त्र पुराणानां स्वयं कर्ता भविष्यति ।

'ய இமாம் வைகரீம் ஶக்திம் யோகீ ஸ்வாத்மனி பஶ்யதி
ஸ வாக்ஸித்தி மவாப்னோதி ஸரஸ்வத்யாঃ ப்ரஸாததঃ
வேதஶாஸ்த்ர புராணானாம் ஸ்வயம் கர்தா பவிஷ்யதி.'

பொ - ரை:—யாதொரு யோகிபுருடன் தன்னிடத்தி லுள்ள வைகரீ வாக் தேவதையை உபாசித்து அறிவனே, அவன் சொல்வன்மையைப் பெறுகின்றான். மற்றும் அத் தேவதையின் திருவருளால் வேத சாத்திர புராணங்களைத் தானே இயற்றும் ஆற்றலுள்ளவன் ஆகின்றான். (10)

அ - கை:—இவற்றிற்கெல்லாம் மூலமாயுள்ளது அழி வற்ற பரம்பொருள் எனக் கூறல்.

यत्र बिन्दुश्च नादश्च सोमसूर्याग्नि वायवः ॥ ११ ॥
इन्द्रियाणि च सर्वाणि लयं गच्छन्ति सुव्रत ।
वायो यत्र विलीयन्ते मनो यत्र विलीयते ॥ १२ ॥
यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन् स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥ १३ ॥
यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्रचैवात्मनाऽत्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ १४ ॥

'யத்ர பிந்துஶ்ச நாதஶ்ச ஸோமஸூர்யாக்னி வாயவঃ
இந்த்ரியாணிச ஸர்வாணி லயம் கச்சந்தி ஸுவ்ரத
வாயோ யத்ர விலீயந்தே மனோ யத்ர விலீயதே
யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் ததঃ

யஸ்மின் ஸ்திதோ ந துக்கேன குருணாऽபி விசால்யதே
யத்ரோ பரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா
யத்ர சைவா த்மனாऽத்மானம் பச்யன்னாத்மனி துஷ்யதி.'

பொ - ரை :—நல்ல விரதமுள்ளவனே! பிந்து, நாதம், சந்திரன், சூரியன், அக்கினி, வாயுக்கள், இந்திரியங்கள் எல்லாம் எதனிடத்தில் ஒடுங்குகின்றனவோ, பிராணன் எங்கு ஒடுங்குகின்றதோ, மனம் எங்கு ஒடுங்குகின்றதோ, அது அழிவற்ற பரம்பொருளென்று அறிக. எதை அடைந்த பின் வேறொன்றின் வேட்கையறுமோ, எதனின் மேலானது இல்லையோ, எதில் நிலைத்த பின் பெருந் துன்பத்தினாலும் அலைக்கப்படுவதில்லையோ, அது பெரும் பொருளென அறியவும். யோகத்தைப் பயில்வதால் சித்தம் வெளியினின்றும் உட்திரும்பியதாய் யாண்டு ஒடுங்குகின்றதோ, அது ஆன்மா எனப்படுகிறது. நல்ல மனதால் யாதொரு ஆன்மாவைக்கண்டு அதனிடத்திலேயே இன்புறுகின்றானோ, அதுவே பரதத்துவமென அறியவும். (14)

இதுவுமது,

सुखमात्यन्तिकं यत्तद् बुद्धिग्राह्य मतीन्द्रियम् ।
एतत्क्षराक्षरातीत मनक्षर मितीर्यते ॥ १५ ॥
क्षरः सर्वाणि भूतानि सूत्रात्माऽक्षर उच्यते ।
अक्षरं परमं ब्रह्म निर्विशेषं निरञ्जनम् ॥ १६ ॥
अलक्षण मलक्ष्यं तदप्रतर्क्यं मनूपमम् ।
अपारपार मच्छेद्य मचिन्त्य मतिनिर्मलम् ॥ १७ ॥
आधारं सर्वभूताना मनाधार मनामयम् ।
अप्रमाण मनिर्देश्य मप्रमेय मतीन्द्रियम् ॥ १८ ॥

'ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்ய மதீந்த்ரியம்
ஏதத் க்ஷரா க்ஷராதீத மனக்ஷர மிதீர்யதே
க்ஷர: ஸர்வாணி பூதானி ஸூத்ராத்மாக்ஷர உச்யதே
அக்ஷரம் பரமம் ப்ரஹ்ம நிர்விசேஷம் நிரஞ்ஜனம்
அலக்ஷண மலக்ஷ்யம் தத்ப்ரதர்க்ய மனூபமம்
அபார பார மச்சேத்ய மசிந்த்ய மதிநிர்மலம்
ஆதாரம் ஸர்வபூதானா மனாதார மனாமயம்
அப்ரமாண மனிர்தேஸ்ய மப்ரமேய மதீந்த்ரியம்.'

பொ-ரை:—அப்பர தத்துவமே முதலிறுதியற்ற சுக வடிவமாம். பொறிகளைக் கடந்து நிற்பது யாதோ, அது ஞானவடிவ புத்தியால் அறியப்படுகின்றது. இந்த ஆன்மா அழியும் பொருள் அழியாப் பொருள்களைக் கடந்து நிற்பதாய் அழிவற்றதெனச் சொல்லப்படுகிறது. எல்லா வுயிர்ப் பகுதிகளும் அழிவுறுவன. எல்லாவற்றினும் ஊடுருவித் தொடர்ந்து நிற்பதான ஆன்மா அழிவற்றதெனக் கண்டு தெளிக. அத்தகைய பரசிவம், அழிவற்றது, பரம்பொருள், சிறப்பின்றியது, குறியற்றது, இலக்கணமில்லது, இலக்கியமாகாதது, ஊகிக்கொணாதது, உவமையற்றது, எல்லையற்றது, கரையிலாதது, வேறு பிரிக்கொணாதது, சிந்திக்கொணாதது, மிகத் தூய்மையானது, பூதம் யாவும் இருக்குமிடமானது, எதற்கும் இடமாகாதது, நோயிலாதது, அளவைக் கடந்தது, இதுவெனச் சுட்டொணாதது, முன்னிலையற்றது, பொறிவழி கடந்திருப்பது. (18)

இதுவுமது,

अस्थूल मनणु ह्रस्व मदीर्घ मज मव्ययम् ।
अशब्दस्पर्श रूपं त दचक्षुः श्रोत्र नामकम् ॥ १९ ॥

सर्वज्ञं सर्वगं शान्तं सर्वेषां हृदये स्थितम् ।
सुसंवेद्यं गुरुमतात्सुदुर्बोध मचेतसाम् ॥ २० ॥
निष्कलं निर्गुणं शान्तं निर्विकारं निराश्रयम् ।
निर्लेपकं निरापायं कूटस्थ मचलं ध्रुवम् ॥ २१ ॥

'அஸ்தூல மனணுஹ்ரஸ்வ மதீர்க மஜ மவ்யயம்
அஸப்தஸ் பர்ஸரூபம் த தசக்ஷுஃ ஸ்ரோத்ர நாமகம்
ஸர்வஜ்ஞம் ஸர்வகம் ஸாந்தம் ஸர்வேஷாம் ஹ்ருதயே ஸ்திதம்
ஸுஸம்வேத்யம் குருமதாத் ஸுதுர்போத மசேதஸாம்
நிஷ்களம் நிர்குணம் ஸாந்தம் நிர்விகாரம் நிராஸ்ரயம்
நிர்லேபகம் நிராபாயம் கூடஸ்த மசலம் த்ருவம்.'

பொ - ரை :— பருமனுகாதது, அணுத்திரனில்லது, குறில் நெடிலற்றது, பிறப்பில்லது, வெளிப்படக் காணுதது, ஊருடன் உருவமற்றது, கண்ணுடன் செவியிலாதது, பிரம்மப் பொருளென அறியத்தக்கது. மற்றும் எல்லாம் அறிவது, எங்குஞ் சென்றிருப்பது, சாந்தமே வடிவாய் எல்லாச் சீவர்களின் இதயத்தில் நிலைபெற்றுள்ளது, குருவருள் பெற்றவர்க்கு எளிதில் அறியப்படுவது, தீமனச்சிரார்க்கு அறியவேபடாதது, கலையிலாதது, குணமிலாதது, சாந்தமானது, மாறுபாடற்றது, பற்றுக்கோடிலாதது, ஒட்டாதது, தீங்கிழையாதது, நிலைபெற்ற மலைபோன்றது, இருந்தபடியே இருப்பது, பரம்பொருள் என அறியவும். (21)

அ - கை :—அந்தச் சப்தப் பிரம்மத்தை பக்தியாலும், பாவனையாலும் பயில்வதால் பரப்பிரம்மத்தின் அடைவு உண்டாமெனக் கூறுகிறது.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमः पारे प्रतिष्ठितम् ।
भावाभाव विनिर्मुक्तं भावनामात्र गोचरम् ॥ २२ ॥
भक्तिगम्यं परं तत्त्व मन्तर्लीनेन चेतसा ।
भावना मात्रमेवात्र कारणं पद्मसंभव ॥ २३ ॥
यथा देहान्तर प्राप्ति कारणं भावना नृणाम् ।
विषयं ध्यायतः पुंसो विषये रमते मनः ॥ २४ ॥
मामनु स्मरतश्चित्तं मय्येवात्र विलीयते ।
सर्वज्ञत्वं परेशत्वं सर्वसंपूर्ण शक्तिता ॥ २५ ॥
अनन्त शक्तिमत्त्वं च ममानु स्मरणाद्भवेत् ।

'ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ் தமஃ பாரே ப்ரதிஷ்டிதம்
பாவா பாவ விநிர்முக்தம் பாவனாமாத்ர கோசரம்
பக்தி கம்யம் பரம் தத்வ மந்தர்லீனேன சேதஸா
பாவனா மாத்ரமேவாத்ர காரணம் பத்மஸம்பவ
யதா தேஹாந்தர ப்ராப்தி காரணம் பாவனா ந்ருணாம்
விஷயம் த்யாயதஃ பும்ஸோ விஷயே ரமதே மனஃ
மாமனு ஸ்மரதஸ்சித்தம் மய்யேவாத்ர விலீயதே
ஸர்வஜ்ஞத்வம் பரேஶத்வம் ஸர்வஸம்பூர்ண ஶக்திதா
அனந்த ஶக்திமத்வம் ச மமானு ஸ்மரணாத் பவேத்.'

பொ - ரை :—அது ஜோதிகளுக்கெல்லாம் ஜோதியானது, இருட்டின் முடிவில் நிலைபெற்றுள்ளது, உள்பொருள் இல்பொருள்களின் நீங்கியது, பாவனை ஒன்றிற்கே அறியவுறுவது, பக்தியுடன் உள்ளொடுங்கிய மனதால் அறிபடும் பரதத்துவமானது, ஜீவர்கள் வேற்றுடலை அடைவதற்கு எங்ஙனம் பாவனையே காரணமாகின்றதோ, இந்தப் பரதத்துவத்தை அடையும் விஷயத்திலும் பாவனை ஒன்றே முக்கிய

மானதென்று அறிக. விடயத்தைச் சிந்திக்கின்றவனது மனம் எங்ஙனம் விடயத்திலேயே இன்புறுகின்றதோ, அங்ஙனமே என்னையே சிந்திக்கின்றவனது சித்தம் என்னிடத்திலேயே ஒடுங்குகின்றது, பரசிவமாகும் இயல்பும், எல்லாவற்றையும் அறியும் ஆற்றலும், எல்லாவற்றையும் குறைவின்றிச் செய்யும் வலிமையும், அளவிறந்த வாற்றலோடிருத்தலும், என்னை இடையறாது தியானிப்பதால் உளதாகின்றது. (25)

மூன்றாவது அத்தியாயம் முடிந்தது.

---

## நான்காவது அத்தியாயம்

அ - கை :—ஜீவனது தோற்றம் பொய்யெனக் கூறல்.

चैतन्यस्यैक रूपत्वाद्भेदो युक्तो न कर्हिचित् ।
जीवत्वं च तथा ज्ञेयं रज्ज्वां सर्पग्रहो यथा ॥ १ ॥
रज्ज्वज्ञानात्क्षणेनैव यद्वद्रज्जुर्हि सर्पिणी ।
भाति तद्वच्चितिः साक्षाद्विश्वाकारेण केवला ॥ २ ॥

'சைதன்யஸ்யைக ரூபத்வாத்பேதோ யுக்தோ ந கர்ஹிசித்
ஜீவத்வஞ்ச ததாஜ்ஞேயம் ரஜ்ஜ்வாம் ஸர்பக்ரஹோ யதா
ரஜ்ஜ்வஜ்ஞானாத் க்ஷணேனைவ யத்வத் ரஜ்ஜுர்ஹி ஸர்பிணீ
பாதி தத்வத் சிதிஃ ஸாக்ஷாத் விஸ்வாகாரேண கேவலா.'

பொ - ரை :—பரமான்மா ஒன்றாய் நிறைவாய் எல்லாமாயிருத்தலின், சித்வடிவ ஆன்மாவிற்கு வேற்றுமை ஓரிடத்தும் பொருந்தாது என்றறிக. எங்ஙனம், கயிற்றில் பாம்பின் தோற்றம் மித்தையாயுளதோ, அங்ஙனமே நிறைபொரு

ளான சித்தில் ஜீவனது தோற்றமும் மித்தையே என்று அறிக. கயிற்றை அறியாதபொழுது எங்ஙனம் கயிறே சர்ப்பமாகத் தோன்றியதோ, அங்ஙனம் சித்தை அறியாத காலத்தில் ஒப்பற்ற சித்தே உலகமாய்த் தோற்றமுறுகின்றது. (2)

அ - கை :—உலகனைத்தும் பிரம்ம வடிவே எனக் கூறல்.

उपादानं प्रपंचस्य ब्रह्मणोऽन्यन्न विद्यते ।
तस्मात्सर्वं प्रपञ्चोऽयं ब्रह्मैवास्ति न चेतरत् ॥ ३ ॥
व्याप्य व्यापकता मिथ्या सर्वमात्मेति शासनात् ।
इति ज्ञाते परे तत्त्वे भेदस्यावसरः कुतः ॥ ४ ॥

'உபாதானம் ப்ரபஞ்சஸ்ய ப்ரஹ்மணோऽன்யன் ந வித்யதே
தஸ்மாத் ஸர்வப்ரபஞ்சோऽயம் ப்ரஹ்மைவாஸ்தி ந சேதரத்
வ்யாப்ய வ்யாபகதா மித்யா ஸர்வமாத்மேதி ஶாஸனாத்
இதிஜ்ஞாதே பரே தத்த்வே பேதஸ்யாவஸரஃ குதஃ'

பொ - ரை :—முதற் பொருளாய் எல்லாவற்றினுந் தொடர்ந்திருப்பதாயுள்ள பிரம்மத்தினும் உலகு வேறுபிருத்தல் பொருந்தாது. ஆகையால் எல்லாவுலகும் பிரம்மமாகவே உளது. (அற்பமும் அன்னியமென்பது இல்லை. எல்லாம் ஆன்மாவே என உறுதிமொழி கூறியிருத்தலால்) குறைந்தது நிறைந்தது என்ற வேற்றுமையுணர்வு மித்தை என்பது அறிக. இங்ஙனம் பரதத்துவத்தின் ஞானமுண்டாகில் வேற்றுமைக்குச் சிறிதும் இடமில்லையாகின்றது. (4)

இதுவுமது,

ब्रह्मणः सर्वभूतानि जायन्ते परमात्मनः ।
तस्मादेतानि ब्रह्मैव भवन्तीति विचिन्तय ॥ ५ ॥

ब्रह्मैव सर्वनामानि रूपाणि विविधानि च ।
कर्माण्यपि समग्राणि बिभर्तीति विभावय ॥ ६ ॥
सुवर्णाज्जायमानस्य सुवर्णत्वं च शाश्वतम् ।
ब्रह्मणो जायमानस्य ब्रह्मत्वं च तथा भवेत् ॥ ७ ॥

'பிரஹ்மணஃ ஸர்வபூதானி ஜாயந்தே பரமாத்மனஃ
தஸ்மாதேதானி ப்ரஹ்மைவ பவந்தீதி விசிந்தய
ப்ரஹ்மைவ ஸர்வநாமானி ரூபாணி விவிதானிச
கர்மாண்யபி ஸமக்ராணி பிபர்தீதி விபாவய
ஸுவர்ணாஜ் ஜாயமானஸ்ய ஸுவர்ணத்வஞ்ச ஶாஶ்வதம்
ப்ரஹ்மணோ ஜாய மானஸ்ய ப்ரஹ்மத்வஞ்ச ததா
பவேத்.'

பொ - ரை :—பரதத்துவமான பிரம்மத்திலிருந்து எல்லாப் பூதங்களும் உண்டாயின. ஆகையால் அவைகள் பிரம்மமாகவே உள்ளன. நீயும் அவைகளை பிரம்மமென்றே உள்ளத்திற் கருதுக. மற்றும் அவற்றிற் காணப்படும் பல்வேறு நாம ரூபங்களையும் பிரம்மமாகவே சிந்திப்பாயாக. மீண்டும் அவற்றில் நிகழ்கின்ற தொழில்கள் எல்லாவற்றையும் தாங்கி நிற்பது பிரம்மமே. ஆகையால் அத் தொழில்களையும் பிரம்மமாகவே எண்ணுவாயாக. தங்கக் கட்டியிலிருந்து உண்டான காப்பு, கடக, குண்டல முதலியவற்றிற்கு எங்ஙனம் தங்கமே உண்மையாய் உறைவிடமாயுள்ளதோ, அங்ஙனமே பிரம்மத்திலிருந்து உண்டான உலகிற்கும் பிரம்மத்தின் இயல்பேயுளதாதல் உண்மையும், உறுதிப்பாடுமெனக் கண்டு தெளிக. (7)

அ - கை :—பிரம்மத்தினும் வேறு காண்பவனுக்கே பயத்தின் அடைவைக் கூறல்.

स्वल्पमप्यन्तरं कृत्वा जीवात्म परमात्मनोः ।
यस्तिष्ठति विमूढात्मा भयं तस्यापि भाषितम् ॥ ८ ॥
यदज्ञानाद्भवेद् द्वैत मितरत्तत्प्रपश्यति ।
आत्मत्वेन तदा सर्वं नेतरत्तत्र चाण्वपि ॥ ९ ॥

'ஸ்வல்பமப்யந்தரம் க்ருத்வா ஜீவாத்ம பரமாத்மனோः
யஸ்திஷ்டதி விமூடாத்மா பயம் தஸ்யாபி பாஷிதம்
யதஜ்ஞானாத் பவேத் த்வைதமிதரத் தத் ப்ரபஸ்யதி
ஆத்மத்வேன ததா ஸர்வம் நேதரத்தத்ர சாண்வபி.'

பொ - ரை :— யாதொரு பகுத்தறிவற்ற மூடன் ஜீவான்ம பரமான்மாக்களுக்கு சிறிதேனும் வேற்றுமை செய்துளனோ, அறிவிலியாகிய அவனுக்கே அச்சம் உளதாமெனக் கூறப்பட்டுள்ளது. எந்த பரமான்மாவை அறியாததால் வேற்றுமை உளதாயிற்றோ, அவ்வறியாமையாலேயே ஆன்மாவினின்றும் ஜீவனை வேறு பிரித்துக் காண்கின்றான். எப்பொழுது அஞ்ஞானம் நீங்கப் பெறுவனோ, அப்பொழுது எல்லாம் ஆன்மாவே எனக் கண்டவனாய், அணுத்துணையும் ஆத்மாவில் வேற்றுமை இல்லை எனக் கண்டு தெளிகின்றான். (9)

அ - கை :—பழகி நின்ற உலகைப் பொய்யெனக் கூறல்.

अनुभूतोऽप्ययं लोको व्यवहार क्षमोऽपि सन् ।
असद्रूपो यथा स्वप्न उत्तरक्षण बाधितः ॥ १० ॥
स्वप्ने जागरितं नास्ति जागरे स्वप्नता नहि ।
द्वयमेव लये नास्ति लयोऽपि अनयोर्न च ॥ ११ ॥

त्रयमेव भवेन्मिथ्या गुणत्रय विनिर्मितम् ।
अस्य द्रष्टा गुणातीतो नित्यो ह्येष चिदात्मकः ॥ १२ ॥

'அனுபூதோப்யயம் லோகோ வ்யவஹார க்ஷமோऽபி ஸன்
அஸத்ரூபோ யதா ஸ்வப்ன உத்தர க்ஷணபாதிதஃ
ஸ்வப்னே ஜாகரிதம் நாஸ்தி ஜாகரே ஸ்வப்னதா நஹி
த்வயமேவ லயே நாஸ்தி லயோऽபி அனயோர் நச
த்ரயமேவ பவேன் மித்யா குணத்ரய விநிர்மிதம்
அஸ்ய த்ருஷ்டா குணாதீதோ நித்யோ ஹ்யேஷ சிதாத்மகஃ'

பொ - ரை :—இந்த உலகமானது பல்வேறு பழக்க வழக்கங்களைத் தாங்கி நிற்பதாயினும், அறுசுவை உண்டி முதலியவற்றால் அனுபவிக்கப் படுவதாயினும், பொய் யென்றே அறியவேண்டும். ஏனெனின் ஒவ்வொரு அவத்தை யிலும் இவ்வுலகு தோன்றாது இருப்பதே அதன் காரண மாகும். எங்ஙனமெனின் சொப்பனவத்தையில் விழிப்புலகு இல்லையாகிறது. அங்ஙனமே விழிப்பு நிலையில் சொப்பன உலகு இல்லையாகிறது. இவ்விரண்டுமே தூக்க நிலையில் இல்லையாகின்றன. இத் தூக்கமும் நனவு கனவுகளில் இருப்ப தில்லை. ஆகையால் முக்குணங்களால் தோன்றிய மூன்று அவத்தைகளும் பொய்யே ஆகின்றன. மூன்று அவத்தை களிலும் தொடர்ந்து நின்று அறிந்துகொண்டு இருந்தது யாதொரு சிதான்மாவோ, அது நித்தியமாய் குணங்களைக் கடந்து நிற்பதென அறியவும். (12)

இதுவுமது,

यद्वन्मृदि घटभ्रान्तिः शुक्तौ हि रजतस्थितिः ।
तद्वद्ब्रह्मणि जीवत्वं वीक्षमाणे विनश्यति ॥ १३ ॥

यदा मृदि घटो नाम कनके कुण्डलाभिधा ।
शुक्तौ हि रजतख्याति जींवशब्दार्थता परे ॥ १४ ॥
यथैव व्योम्नि नीलत्वं यथा नीरं मरुस्तले ।
पुरुषत्वं यथा स्थाणौ तद्वद्विश्वं चिदात्मनि ॥ १५ ॥

'யத்வன் ம்ருதி கடப்ராந்தி: ஶுக்தௌ ஹி ரஜதஸ்திதி:
தத்வத் ப்ரஹ்மணி ஜீவத்வம் வீக்ஷமாணே வினஶ்யதி
யதா ம்ருதி கடோ நாம கனகே குண்டலாபிதா
ஶுக்தௌ ஹி ரஜதக்யாதிர் ஜீவஶப்தார்ததா பரே
யதைவ வ்யோம்னி நீலத்வம் யதா நீரம் மருஸ்தலே
புருஷத்வம் யதா ஸ்தாணௌ தத்வத் விஶ்வம் சிதாத்மனி.'

பொ - ரை :—மற்றும் மண்ணில் இது குடம் என்ற மயக்கவுணர்வும், கிளிஞ்சலில் இது வெள்ளி என்ற உணர்வும், உண்மையாய் ஆராயுமிடத்து, குடம் மண்ணாகவும், வெள்ளி கிளிஞ்சலாகவும், எங்ஙனம் ஆகிறதோ, அங்ஙனமே பிரம்மத்தினிடத்தில் ஜீவனது இருப்பும் ஆராயுமிடத்து அழிந்துப் பொய்யாய்ப் போம் என்று அறிக. குடமென்ற பெயர் மண்ணிலும், குண்டலமென்ற பெயர் பொன்னிலும், வெள்ளி என்ற பெயர் கிளிஞ்சலிலும் மறைந்து பொய்யாவது போல, ஜீவனென்ற பெயரும் பரத்தில் மறைந்து பொய்யாய்ப் போகிறது. ஆகாயத்தில் எங்ஙனம் நீலநிறம் பொய்யாய்த் தோற்றமாத்திரமாமோ, களர் நிலத்தில் நீரின் தோற்றம் எங்ஙனம் பொய்த் தோற்றமோ, கட்டையில் புருடனது தோற்றம் எங்ஙனம் பொய்யாகிறதோ, அங்ஙனமே சித்வடிவ ஆன்மாவினிடத்தில் உலகம் பொய்த்தோற்றமே என அறியவும். (15)

இதுவுமது,

यथैव शून्यो वेतालो गन्धर्वाणां पुरं यथा ।
यथाऽकाशे द्विचन्द्रत्वं तद्वत्सत्ये जगत्स्थितिः ॥ १६ ॥
यथा तरङ्गकल्लोलै र्जलमेव स्फुरत्यलम् ।
घटनाम्ना यथा पृथ्वी पटनाम्ना हि तन्तवः ॥ १७ ॥
जगन्नाम्ना चिदाभाति सर्वं ब्रह्मैव केवलम् ।

'யதைவ ஶூன்யோ வேதாளோ கந்தர்வாணாம் புரம் யதா
யதாऽகாஶே த்விசந்த்ரத்வம் தத்வத் ஸத்யே ஜகத் ஸ்திதி:
யதா தரங்க கல்லோலைர் ஜலமேவ ஸ்புரத்யலம்
கட நாம்நா யதா ப்ருத்வீ பட நாம்நா ஹி தந்தவ:
ஜகந்நாம்நா சிதாபாதி ஸர்வம் ப்ரஹ்மைவ கேவலம்.;

பொ - ரை —பெரிய இருட்டில் (அல்லது சூன்யத்தில்) வேதாளம் தோன்றுவது போலவும், சொப்பன நகரம் போலவும், ஆகாயத்தில் இரு சந்திரர்களின் தோற்றம் போலவும், உண்மைப் பொருளாகிய ஆன்மாவில் உலகின் தோற்றம் உளது. என்பது அறிக. எப்படி தண்ணீர் ஒன்றே அலை, திவலை, நுரை முதலிய வேற்றுமைப்புக்களாய் விளங்குகின்றதோ, அங்ஙனமே சித்து ஒன்றே உலகமென்ற பெயரால் தோற்றமுறுகின்றது. ஆகையால் எல்லாவற்றையும் ஒப்பற்ற பிரம்ம வடிவென்றே அறிந்து நிலைபெறுக. (17)

அ - கை :—எல்லாமாய் நின்ற தனது வடிவில் உலகத்தின் வேற்றுமை முற்றும் பொருத்தமற்றது எனக் கூறல்.

यथा वन्ध्यासुतो नास्ति यथा नास्ति मरौ जलम् ॥ १८ ॥
यथा नास्ति नभोवृक्षस्तथा नास्ति जगत्स्थितिः ।
गृह्यमाणे घटे यद्वन्मृत्तिका भाति वै बलात् ॥ १९ ॥
वीक्ष्यमाणे प्रपञ्चे तु ब्रह्मैवाभाति भासुरम् ।

'யதா வந்த்யா ஸுதோ நாஸ்தி யதா நாஸ்தி மரௌ ஜலம்
யதா நாஸ்தி நபோ வ்ருக்ஷஸ் ததா நாஸ்தி ஜகத் ஸ்திதி:
க்ருஹ்ய மாணே கடே யத்வன் ம்ருத்திகா பாதி வை பலாத்
வீக்ஷ்யமாணே ப்ரபஞ்சேது ப்ரஹ்மைவாபாதி பாஸுரம்.'

பொ - ரை —உலகில் எங்ஙனம் மலடிமகனில்லையோ, எங்ஙனம் மருபூமியில் தண்ணீரில்லையோ, எங்ஙனம் ஆகாயத்தில் மரமில்லையோ, அங்ஙனமே பரத்தில் உலகத்தினிருப்பும் இல்லை என்றே அறிக. இது குடம் என்று அறிந்தபொழுதும், எங்ஙனம் மண்ணே மிருதியாய் விளங்குகின்றதோ, அங்ஙனமே இது உலகமென்று அறியப்படினும் பிரம்மமே விளங்கி ஒளிருகின்றது. (19)

அ - கை :—ஆன்மாவினிடத்தில் தேகமுதலியவற்றின் தோற்றம் அஞ்ஞானத்தால் செய்யப்பட்டது எனக் கூறல்.

सदैवात्मा विशुद्धोऽस्मि ह्यशुद्धो भाति वै सदा ॥ २० ॥
यथैव द्विविधा रज्जु र्ज्ञानिनोऽज्ञानिनोऽनिशम् ।
यथैव मृन्मयः कुम्भस्तद्वद्देहोऽपि चिन्मयः ॥ २१ ॥
आत्मानात्म विवेकोऽयं मुधैव क्रियते बुधैः ।
सर्पत्वेन यथा रज्जू रजतत्त्वेन शुक्तिका ॥ २२ ॥
विनिर्णीता विमूढेन देहत्वेन तथात्मता ।
घटत्वेन यथा पृथ्वी जलत्वेन मरीचिका ॥ २३ ॥
गृहत्वेन हि काष्ठानि खड्गत्वेनैव लोहता ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञान योगतः ॥ २४ ॥

"ஸதைவாத்மா விஶுத்தோऽஸ்மி ஹ்யஶுத்தோ பாதிவை
[ஸதா
யதைவ த்விவிதா ரஜ்ஜுர் ஞானிநோऽஜ்ஞானிநோऽனிஶம்
யதைவ ம்ருண்மய: கும்பஸ் தத்வத்தேஹோऽபி சின்மய:
ஆத்மானாத்ம விவேகோऽயம் முதைவ க்ரியதே புதை:
ஸர்பத்வேன யதா ரஜ்ஜூ ரஜதத்வேன ஶுக்திகா
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேன ததாऽத்மதா
கடத்வேன யதா ப்ருத்வீ ஜலத்வேன மரீசிகா
க்ருஹத்வேன ஹி காஷ்டானி கட்கத் வேனைவ லோஹதா
தத்வதாத்மனி தேஹத்வம் பஶ்யத்யஜ்ஞானயோகத:"

பொ - ரை:—ஞானி அஞ்ஞானி இருவர்களும் ஒரே வுலகை இரண்டாகக் காண்கின்றனர். அஃதாவது ஞானி எப்பொழுதும், உலகைமிகத் தூய்மையான தனதான்மா வென்றே கண்டு இன்புறுகின்முன். அஞ்ஞானி எப்பொழு தும் உலகைத் தூய்மையற்றதாய் துன்பவடிவாய்த் தன்னின் வேருய்க் கண்டு துன்புறுகின்முன். எங்ஙனம் எனின் கயிறு ஒன்றே அறிந்தவனுக்கு அச்சமற்றதாயும், அறியாதவனுக்கு சர்ப்பவுருக்கொண்டு அச்சுறுத்துவதாயும் ஆகின்றதோ, அதுபோல என்று அறிக. எப்படிக் குடம் மண்வடிவே யாமோ, அப்படியே உடலும் சித்வடிவமே என்று ஞானி அறிகின்முன். மற்றும் எல்லாம் தன்வடிவே எனக் கண்ட ஞானி ஆன்மா இது, அனுன்மா இது, என்ற இந்த விசாரணை யானது வித்வான்களால் வீணே செய்யப்படுகின்றது எனக் கருதுகின்முன். விசாரமின்றிய மூடனுல் எப்படி கயறு சர்ப்பமாகவும், கிளிஞ்சல் வெள்ளியாகவும், நிச்சயிக்கப்படு கிறதோ, அங்ஙனமே ஆன்மாவையே உடலாகக் காண்கின் முன். மண்ணைக் குடமாகவும், பேய்த்தேரை நீராகவும்,

மரங்களை விடாகவும், இரும்பைக் கத்தியாகவும், எப்படி அறிகின்றானோ, அப்படியே அஞ்ஞானத்தின் சேர்க்கையால் மூடன் ஆன்மாவையே தேகமாய்க் காண்கின்றான். (24)

நான்காம் அத்தியாயம் முடிந்தது.

## ஐந்தாவது அத்தியாயம்

அ-கை:—தேகமே விஷ்ணுவின் ஆலயமெனக் கூறல்.

पुनर्योगं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्मस्वरूपकम् ।
समाहित मना भूत्वा शृणु ब्रह्मन् यथा क्रमम् ॥ १ ॥
दशद्वार पुरं देहं दशनाडी महापथम् ।
दशभि र्वायुभि र्व्याप्तं दशेन्द्रिय परिच्छदम् ॥ २ ॥
षडाधारा पवरकं षडन्वय महावनम् ।
चतुष्पीठ समाकीर्णं चतुराम्नाय दीपकम् ॥ ३ ॥
बिन्दुनाद महालिङ्गं विष्णु लक्ष्मीनिकेतनम् ।
देहं विष्णवालयं प्रोक्तं सिद्धिदं सर्वदेहिनाम् ॥ ४ ॥

'புனர் யோகம் ப்ரவக்ஷ்யாமி குஹ்யம் ப்ரஹ்ம [ஸ்வரூபகம்
ஸமாஹித மனா பூத்வா ஶ்ருணு ப்ரஹ்மன் யதா க்ரமம்
தஶத்வார புரம் தேஹம் தஶநாடீ மஹாபதம்
தஶபிர் வாயுபிர் வ்யாப்தம் தஶேந்த்ரிய பரிச்சதம்
ஷடாதாரா பவரகம் ஷடன்வய மஹாவனம்
சதுஷ்பீட ஸமாகீர்ணம் சதுராம்னாய தீபகம்
பிந்து நாத மஹாலிங்கம் விஷ்ணு லக்ஷ்மீ நிகேதனம்
தேஹம் விஷ்ணவாலயம் ப்ரோக்தம் ஸித்திதம் [ஸர்வதேஹினாம்.'

போ - ரை :—பிரம்மாவே! மிக ரகசியமானதும், பிரம்ம சொரூபத்தை அடைவிப்பதுமான யோகத்தை மீண்டுஞ் சொல்லுகின்றேன். மனதை உண்முகமாக்கி நின்று அதை முறையாகக் கேட்பாயாக. இந்த வுடலானது பத்து வாயிலை உடைய நகரமாகவும், பத்து நாம்புகளாலாகிய பெருவழிகளை உடையதும், பத்து வகையான காற்றுகளால் நிறைந்ததும், பத்து இந்திரியங்களாகிய வேலையாட்களை யுடையதும், மூலாதார முதலிய ஆறு சக்கரங்கட்கு இடமாயுள்ளதும், ஆறு ருதுக்கள் தங்குகின்ற வனமாகவுள்ளதும், நான்கு பீடங்களை வரிசையாக உடையதும், நான்கு வேதங்கள் விளங்குகின்ற இடமானதும், பிந்து, நாதம், மஹாலிங்கம், விஷ்ணு, இலக்குமி இவைகள் இருக்குமிடமானதுமான இந்தவுடல் விஷ்ணுவாலயமென்று சொல்லப்படுகிறது. மற்றும் எல்லா வுயிர்களும் விரும்பிய சித்தியை அடைதற்கு இடமாயுள்ளது இவ்வுடல் என்று அறியவும். (4)

அ - கை :—ஆறு ஆதார சக்கரங்கள் நான்கு பீடங்கள் என்பவற்றின் விளக்கங் கூறல்.

गुदमेढ्रान्त रालस्थं मूलाधारं त्रिकोणकम् ।
शिवस्य जीवरूपस्य स्थानं तद्धि प्रचक्षते ॥ ५ ॥
यत्र कुण्डलिनी नाम पराशक्तिः प्रतिष्ठिता ।
यस्मादुत्पद्यते वायु र्यस्माद्वह्निः प्रवर्तते ॥ ६ ॥
यस्मादुत्पद्यते बिन्दुर्यस्मान्नादः प्रवर्तते ।
यस्मादुत्पद्यते हंसो यस्मादुत्पद्यते मनः ॥ ७ ॥

'குதமேட்ராந்த ராளஸ்தம் மூலாதாரம் த்ரிகோணகம்
ஶிவஸ்ய ஜீவரூபஸ்ய ஸ்தானம் தத்ஹி ப்ரசக்ஷதே
யத்ர குண்டலினீ நாம பரா ஶக்திஃ ப்ரதிஷ்டிதா
யஸ்மாதுத் பத்யதே வாயுர் யஸ்மாத் வஹ்னிஃ ப்ரவர்ததே
யஸ்மாதுத் பத்யதே பிந்துர் யஸ்மாந்நாதஃ ப்ரவர்ததே
யஸ்மாதுத் பத்யதே ஹம்ஸோ யஸ்மாதுத்பத்யதே மனஃ'

பொ - ரை :—தாமரையிற் றோன்றியவனே! மூலாதாரமானது ஆண்குறிக்கும் மலவாயிலுக்கும் நடுவில் முக்கோணவடிவாய் உளதென்பது அறியவும். அதுவே சிவவடிவ சீவனிருக்கும் இடமெனச் சொல்லப்படுகிறது. அவ்விடத்திலேயே குண்டலினி எனப் பெயருள்ள மகாசக்தி நிலைபெற்று விளங்குகின்றாள். எங்கிருந்து பிராணனாகிய காற்று வெளிப்படுகின்றதோ, எங்கிருந்து மூலக்கனல் உண்டாகின்றதோ, எங்கிருந்து பிந்து வெளிப்படுகின்றதோ எங்கிருந்து நாதம் உண்டாகின்றதோ, ஹம்ஸ என்ற மந்திரமானது உண்டாகின்ற இடம் யாதோ, மனம் தோன்றும் இடம் யாதோ. (7)

இதுவுமது.

तदेतत्काम रूपाख्यं पीठं काम फलप्रदम् ।
स्वाधिष्ठाना ह्वयं चक्रं लिङ्गमूलं षडश्रकम् ॥ ८ ॥
नाभिदेशे स्थितं चक्रं दशारं मणिपूरकम् ।
द्वादशारं महाचक्रं हृदये चाप्यनाहतम् ॥ ९ ॥
तदेतत्पूर्णं गिर्याख्यं पीठं कमल संभव ।
कण्ठ कूपे विशुद्ध्याख्यं यच्चक्रं षोडशाश्रकम् ॥ १० ॥

'தத்தேதத் காமரூபாக்யம் பீடம் காம பலப்ரதம்
ஸ்வாதிஷ்டா ஞ்ஹ்வயம் சக்ரம் லிங்கமூலம் ஷடஸ்ரகம்
நாபிதேசே ஸ்திதம் சக்ரம் தசாரம் மணிபூரகம்
த்வாதசாரம் மஹாசக்ரம் ஹ்ருதயே சாப்யஞஹதம்,
தத்தேதத் பூர்ணகிர்யாக்யம் பீடம் கமலஸம்பவ
கண்ட கூபே விசுத்த்யாக்யம் யச்சக்ரம் ஷோட
[சாரஸ்ரகம்.'

அதுவே எல்லாவிருப்பத்தையுந் தருவதான காமகிரி பீடமென்று அறிக. ஆண்குறியின் அடியில் ஆறிதழுள்ள சுவாதிட்டான சக்கரம் உளது. நாபியில் பத்திதழுள்ள மணிபூரக சக்கரம் உளது. இதயத்தில் பன்னிரண்டிதழுள்ள பதுமம் உளது. அது அஞஹதமென்று பெயருள்ள பெரிய சக்கரமாகும். அதனோடு பூர்ணகிரி என்ற பீடம் உளதென்று அறியவும். கழுத்திற் பதினாறு இதழுள்ள பதுமம் உளது. அது விசுத்தி எனப் பெயர் பெறுகின்றது. (10)

இதுவுமது,

पीठं जालन्धरं नाम तिष्ठत्यत्र चतुर्मुख ।
आज्ञा नाम भ्रुवोर्मध्ये द्विदलं चक्रमुत्तमम् ॥ ११ ॥
उड्याणाख्यं महापीठ मुपरिष्टात्प्रतिष्ठितम् ।
स्थानान्येतानि देहेऽस्मिञ्छक्तिरूपं प्रकाशते ॥ १२ ॥
चतुरश्रा धरण्यादौ ब्रह्मा तत्राधिदेवता ।
अर्धचन्द्राकृति जलं विष्णुस्तस्याधिदेवता ॥ १३ ॥

'பீடம் ஜாலந்தரம் நாம திஷ்டத்யத்ர சதுர்முக
ஆஜ்ஞா நாம ப்ருவோர் மத்யே த்விதளம் சக்ரமுத்தமம்
உட்யாணக்யம் மஹாபீட முபரிஷ்டாத் ப்ரதிஷ்டிதம்

ஸ்தானேன்யே தானி தேஹேऽஸ்மின் ஶக்திரூபம் ப்ரகாஶதே
சதுரஶ்ரா க்ருணயாதெள ப்ரஹ்மா தத்ராதி தேவதா
அர்த சந்த்ராக்ருதி ஜலம் விஷ்ணுஸ் தஸ்யாதி தேவதா.'

போ - ரை :—அங்கேயே ஜாலந்தரமெனப் பெயருள்ள பீடம் உளது. புருவங்களின் நடுவில் இரண்டிதழ்க் கமலம் உளது. அது ஆஞ்ஞாசக்கரமெனப் பெயர் பெற்று மிகச் சிறந்ததாய் விளங்குகின்றது. அதற்கு மேல் உட்டியாண பீடம் உளது. பீடங்கள் எல்லாம் இவ்வுடலில் சக்திவடிவாயமைந்து விளங்குகின்றன என்று அறிக. மூலாதாரத்தில் பிருதிவீ தத்துவம் உளது. அது நாற்கோண வடிவமானது. அதற்கு அதிதேவதை பிரம்மா என்று அறிக. ஜலதத்துவம் நாபியிலுள்ளது. அது எட்டாம் பிறைச் சந்திரனைப் போன்று அரைவட்ட வடிவமுள்ளது. அதற்கு அதிதேவதை விஷ்ணு என்று அறியவும். (13)

त्रिकोण मण्डलं वह्नी रुद्रस्तस्याधि देवता ।
वायो र्बिम्बं तु षड्कोणं संकर्षोऽत्रा धिदेवता ॥ १४ ॥
आकाश मण्डलं वृत्तं श्रीमन्नारायणोऽत्राधिदेवता ।
नादरूपं भ्रुवोर्मध्ये मनसो मण्डलं विदुः ॥ १५ ॥
शांभव स्थानमेतत्ते वर्णितं पद्मसंभव ।

த்ரிகோண மண்டலம் வஹ்னீ ருத்ரஸ் தஸ்யாதி தேவதா
வாயோர் பிம்பந்து ஷட்கோணம் ஸங்கர்ஷோऽத்ராதிதேவதா
ஆகாஶ மண்டலம் வ்ருத்தம் ஶ்ரீ மந்நாராயணோऽத்ராதி [தேவதா
நாதரூபம் ப்ருவோர் மத்யே மனஸோ மண்டலம் விதுः
ஶாம்பவஸ்தான மேதத்தே வர்ணிதம் பத்மஸம்பவ.

போ - ரை :—அக்கினி தத்துவம் மார்பிலுளது. அது முக்கோண வடிவமானது. அதற்கு அதிதேவதை உருத்திரன் எனப்படுகிறது. வாயு தத்துவம் கண்டத்தில் உளது. அது அறுகோண வடிவமானது. அதற்கு அதி தேவதை சங்கர்ஷணன் என்று அறிக. ஆகாய தத்துவம் புருவமத்தியில் உளது. அதன் குறி வட்டமானது. அதற்கு அதிதேவதை ஸ்ரீமந் நாராயணன் என்று அறிக. மற்றும் புருவங்களின் நடுவில் மனதிற்கு இடமாக நாத தத்துவம் உளது. அதுவே சிவம் இருக்கும் இடமென்று அறிக. இவ்வாறு பஞ்ச பூதங்களும், அவற்றின் கோணங்களும், அவற்றின் அதிதேவதைகளும், பீடங்களும் விரித்துக் கூறப்பட்டன. (15)

அ - கை :—உடலிலுள்ள நரம்புகளின் நிலையையும் அவற்றின் செயலையும் கூறல்.

अतः परं प्रवक्ष्यामि नाडीचक्रस्य निर्णयम् ॥ १६ ॥

मूलाधार त्रिकोणस्था सुषुम्ना द्वादशाङ्गुला ।

मूलार्धच्छिन्न वंशाभा ब्रह्मनाडीति सा स्मृता ॥ १७ ॥

इडा च पिङ्गलाचैव तस्याः पार्श्वद्वये गते ।

विलम्बिन्यमनुस्यूते नासिकान्त मुपागते ॥ १८ ॥

इडायां हेमरूपेण वायु र्वामेन गच्छति ।

पिङ्गलायां तु सूर्यात्मा याति दक्षिण पार्श्वतः ॥ १९ ॥

विलम्बिनीति या नाडी व्यक्ता नाभौ प्रतिष्ठिता ।

तत्र नाड्यः समुत्पन्ना स्तिर्यगूर्ध्व मधोमुखाः ॥ २० ॥

அத: பரம் ப்ரவக்ஷ்யாமி நாடீசக்ரஸ்ய நிர்ணயம்
மூலாதார த்ரிகோணஸ்தா ஸுஷும்ணா த்வாதஶாங்குலா
மூலார்தச் சின்ன வம்ஶாபா ப்ரஹ்ம நாடீதி ஸா ஸ்ம்ருதா
இடா ச பிங்கலா சைவ தஸ்யா: பார்ஶ்வ த்வயே கதே
விலம்பின்யா மனுஸ்யூதே நாசிகாந்த முபாகதே
இடாயாம் ஹேமரூபேண வாயுர் வாமேன கச்சதி
பிங்கலாயாந்து ஸௌர்யாத்மா யாதி தக்ஷிண பார்ஶ்வத:
விலம்பினீதி யா நாடீ வ்யக்தா நாபௌ ப்ரதிஷ்டிதா
தத்ர நாட்ய: ஸமுத் பன்னாஸ் திர்ய கூர்த்வ மதோ முகா:

பொ - ரை:—பிரம்மாவே! அதன் பிறகு உடம்பி லுள்ள நரம்புகளின் இடத்தையும், அவற்றின் செயலையும், கூறுகின்றேன். ஒருமை மனதுடன் கேட்பாயாக. மூலா தாரத்தினுள் முக்கோணத்தில் சுழுமுனை நாடி உளது. அது பன்னிரண்டு அங்குலமுள்ளதாய் அடியிற் பிளவுபட்ட மூங் கில் போன்று பிளந்த வாயினை உடையது. அதுவே பிரம்ம நாடியெனக் கருதப்படுகிறது. அச்சுழுமுனை நாடியினது இரு பக்கத்திலும் இடை பிங்கலை என்ற இருநாடிகள் தொடர்ந்து செல்லுகின்றன. அவை நாபியிலுள்ள விலம்பினி நாடியில் கோக்கப் பட்டவைகளாய் மூக்கினது நுனிவரையிலும் செல்லுகின்றன. அவைகளில் இடை நாடியிலுள்ள காற்று னது குளிர்ச்சியானது. அது இடது மூக்கால் வெளிப்படு கின்றது. பிங்கலை நாடியிலுள்ள காற்று சூரியனைப் போன்று வெப்பமானது. அது வலது மூக்கால் வெளிப்படுகின்றது. நாபியில் விலம்பினி என்ற நாடியானது வெளிப்படையாய் நிலை பெற்றுள்ளது. அது கோழிமுட்டை போன்று உளது என்று அறிக. அதிலிருந்து நாடிகள் தோன்றி மேலும், கீழும், குறுக்குமாகச் செல்லுகின்றன. (20)

இதுவுமது,

तन्नाभि चक्रमित्युक्तं कुक्कुटाण्ड मिव स्थितम् ।
गान्धारी हस्तिजिह्वा च तस्मान्नेत्र द्वयं गते ॥ २१ ॥
पूषा चालम्बुषा चैव श्रोत्रद्वय मुपागते ।
शूरा नाम महानाडी तस्माद् भ्रूमध्य माश्रिता ॥ २२ ॥
विश्वोदरी तु या नाडी सा भुङ्क्तेऽन्नं चतुर्विधम् ।
सरस्वती तु या नाडी सा जिह्वाऽन्तं प्रसर्पते ॥ २३ ॥
राकाऽऽह्वया तु या नाडी पीत्वा च सलिलं क्षणात् ।
क्षुतमुत्पादयेद् घ्राणे श्लेष्माणं संचिनोति च ॥ २४ ॥

"தன்னாபி சக்ரமித்யுக்தம் குக்குடாண்டமிவ ஸ்திதம்
காந்தாரீ ஹஸ்தி ஜிஹ்வாச தஸ்மான் நேத்ரத்வயம் கதே
பூஷா சாலம்புஷா சைவ ஶ்ரோத்ரயத்வ முபாகதே
ஶூரா நாம மஹாநாடீ தஸ்மாத் ப்ரூமத்ய மாஶ்ரிதா
விஶ்வோதரீ து யா நாடீ ஸா புங்க்தேऽன்னம் சதுர்விதம்
ஸரஸ்வதீ து யா நாடீ ஸா ஜிஹ்வாந்தம் ப்ரஸர்பதே
ராகாऽஹ்வயா து யா நாடீ பீத்வாச ஸலிலம் க்ஷணாத்
க்ஷுதமுத்பாதயேத் க்ராணே ஶ்லேஷ்மாணம்
ஸஞ்சினோதி ச."

போ - ரை :— அதுவே நாபிச்சக்கரமென்று சொல்லப்படுகிறது. அந்த முட்டை வடிவ நாபிச்சக்கரத்திலிருந்து காந்தாரி, ஹஸ்திஜிஹ்வை, என இரு நாடிகள் தோன்றி இரு கண்களை நோக்கிச் செல்லுகின்றன. நாபியிலிருந்து மீண்டும் பூஷை, அலம்புஷை, என இரு நாடிகள் தோன்றி இரு காதுகளை நோக்கிச் செல்லுகின்றன. மீண்டும் அதிலிருந்து சூரா என்று பெயருள்ள பெரிய நாடி தோன்றி

புருவங்களின் நடுவை அடைகின்றது. நாபியிலிருந்து விஶ்வோதரி என்ற நாடி தோன்றி வயிற்றிலேயே இருந்து கொண்டு நால்வகை உண்டியையும் உண்கின்றது. மீண்டும் ஸரஸ்வதி என்ற நாடிதோன்றி நாவின் நுனிவரை செல்லுகின்றது. நாபியிலிருந்து ராகா என்ற நாடி தோன்றி மூக்கு நுனிவரை செல்லுகின்றது. அது நீரை விரைவில் குடிப்பதும், தும்மலை உண்டுபண்ணுவதும், மூக்கில் சளியைச் சேர்த்து வைப்பதும் ஆகின்றது. (24)

இதுவுமது,

कण्ठ कूपोद्भवा नाडी शङ्खिन्याख्या त्वधोमुखी ।
अन्नसारं समादाय मूर्ध्नि संचिनोति सदा ॥ २५ ॥
नाभेरधो गतास्तिस्रो नाडयः स्यु रधोमुखाः ।
मलं त्यजेत्कुहूर्नाडी मूत्रं मुञ्चति वारुणी ॥ २६ ॥
चित्राख्या सीविनी नाडी शुक्लमोचन कारिणी ।
नाडी चक्रमिति प्रोक्तं बिन्दुरूप मतः शृणु ॥ २७ ॥

'கண்ட கூபோத்பவா நாடீ ஶங்கின்யாக்யா த்வதோமுகீ
அன்னஸாரம் ஸமாதாய மூர்த்னி ஸஞ்சிநோதி ஸதா
நாபேரதோ கதாஸ் திஸ்ரோ நாடயஃ ஸ்யுரதோமுகாஃ
மலம் த்யஜேத் குஹூர்நாடீ மூத்ரம் முஞ்சதி வாருணீ
சித்ராக்யா ஸீவினீ நாடீ ஶுக்லமோசன காரிணீ
நாடீசக்ர மிதி ப்ரோக்தம் பிந்துரூப மதஃ ஶ்ருணு.'

**பொ-ரை**:—சங்கினி என்ற நாடி கழுத்திலிருந்து தோன்றுகின்றது. அது வயிறு வரையிலும் சென்றதாய் உணவின் சாரத்தை எடுத்துச் சென்று தலை உச்சியில் எப்பொழுதும் சேர்த்து வைக்கின்றது. கொப்பூழிலிருந்து

மூன்று நாடிகள் கீழ் நோக்கிச் செல்லுகின்றன. அவற்றில் குஹூ என்ற நாடி மலத்தை வெளிப்படுத்துகின்றது. வாருணி என்ற நாடி சிறு நீரை வெளிவிடுகின்றது. சித்ரா என்று பெயருள்ள சீவினீ நாடி வீரியத்தை வெளியாக்குகின்றது இவ்வாறு நாடிகளின் கூட்டம் சொல்லப்பட்டது இனி பிந்துவின் இலக்கணங் கூறுகின்றேன். கேட்பாயாக. (27)

அ - கை:—பிந்து, அக்கினி, சந்திரன், மூன்றும் சுழுமுனை நாடியின் உடல் எனக் கூறல்.

स्थूलं सूक्ष्मं परं चेति त्रिविधं ब्रह्मणो वपुः ।
स्थूलं शुक्लात्मकं बिन्दुः सूक्ष्मं पञ्चाग्निरूपकम् ॥ २८ ॥
सोमात्मकः परः प्रोक्तः सदा साक्षी सदाऽच्युतः

ஸ்தூலம் ஸூக்ஷ்மம் பரஞ்சேதி த்ரிவிதம் ப்ரஹ்மணோ வபுஃ
ஸ்தூலம் ஶுக்லாத்மகம் பிந்துஃ ஸூக்ஷ்மம் பஞ்சாக்னி ரூபகம்
ஸோமாத்மகஃ பரஃ ப்ரோக்தஃ ஸதா ஸாக்ஷீ ஸதாऽச்யுதஃ

**பொ - ரை:**—பிரம்ம நாடியின் உடல் தூலம், சூக்குமம், பரம், என மூன்றாக உள்ளன. அதன் விளக்கம்:—பிரம்மத்தினது தூலவடிவம் வீரியமெனப் படுகின்றது. பிந்துவானது சூக்குமமாகின்றது. அதுவே பஞ்சாக்னி என்றும் கருதுகின்றனர். பரமானது சந்திரனாக உள்ளது. எப்பொழுதும் இவற்றின் சாக்ஷி அழிவற்ற சிவமென்று அறிக. (28)

அ - கை:—பிரம்ம நாடியினது பிந்துவடிவ சூக்கும உடலான ஐந்து அக்கினிகளின் தியானம், அதன்பயன் இவற்றைக் கூறல்.

पातालाना मधोभागे कालाग्निर्यः प्रतिष्ठितः ॥ २९ ॥
स मूलाग्निः शरीरेऽग्निर्यस्मान्नादः प्रजायते ।
वडवाग्निः शरीरस्थो ह्यस्थिमध्ये प्रवर्तते ॥ ३० ॥
काष्ठपाषाणयोर्वह्नि र्ह्यस्थिमध्ये प्रवर्तते ।
काष्ठपाषाणजो वह्निः पार्थिवो ग्रहणीगतः ॥ ३१ ॥
अन्तरिक्ष गतो वह्नि र्वैद्युतः स्वान्तरात्मकः ।
नभस्थः सूर्यरूपोऽग्निर्नाभिमण्डल माश्रितः ॥ ३२ ॥

'பாதாளாநாமதோ பாகே காலாக்னிர் யஃ ப்ரதிஷ்டிதஃ
ஸ மூலாக்னிஃ ஶரீரேऽக்னிர் யஸ்மான் நாதஃ ப்ரஜாயதே
படவாக்னிஃ ஶரீரஸ்தோ ஹ்யஸ்திமத்யே ப்ரவர்த்ததே
காஷ்ட பாஷாணயோர் வஹ்னிர் ஹ்யஸ்திமத்யே
ப்ரவர்த்ததே
காஷ்ட பாஷாணஜோ வஹ்னிஃ பார்த்திவோ க்ரஹணீகதஃ
அந்தரிக்ஷ கதோ வஹ்னிர் வைத்யுதஃ ஸ்வாந்தராத்மகஃ
நபஸ்தஃ ஸூர்யரூபோऽக்னிர் நாபிமண்டல மாஶ்ரிதஃ'

பொ-ரை :-அதலமுதலிய உலகங்களின் அடியிலுள்ளது காலாக்கினி எனப்படுகிறது. அந்த அக்கினியே உடலில் மூலக்கனல் என்ற பெயருடன் மூலாதாரத்திலுளது. அதிலிருந்துதான் நாதம் வெளிப்படுகின்றதென அறியவும். வடவாக்கினி கடல் நடுவில் இருப்பதெனக் கூறுகின்றனர். அந்த வடவா என்ற கனலே உடலிலுள்ள எலும்பிலிருந்து கட்டை கல்களிலிருந்து வெளிப்படுங்கனல் போல வெளிப்படுகின்றது. கட்டை கல்களிலிருந்து வெளிப்படுங் கனலானது, பார்த்தி வாக்கினி எனப்படுகிறது. அந்தப் பார்த்திவாக்கினியானது மனைவியிடத்து உளதென்று அறி

யவும். மின்னல் வடிவ அக்கினி ஆகாயத்தில் உண்டாகிறது. அதுவே தனது உள்ளத்தின் கண்ணே உள்ள ஆன்மாக்கினி என்று அறியவும். மீண்டும் ஆகாயத்தில் சூரியாக்கினி உளது. அச்சூரிய வடிவ அக்கினியே உடலில் நாபிச்சக்கரத்தை அடைந்துளது என்று அறியவும். (32)

இதுவுமது,

विषं वर्षति सूर्योऽसौ स्रवत्यमृत मुन्मुखः ।
तालुमूले स्थितश्चन्द्रः सुधां वर्षत्यधोमुखः ॥ ३३ ॥
भ्रूमध्य निलयो बिन्दुः शुद्धस्फटिक संनिभः
महाविष्णोश्च देवस्य तत्सूक्ष्मं रूपमुच्यते ॥ ३४ ॥
एतत्पञ्चाग्निरूपं यो भावयन् बुद्धिमान् धिया ।
तेन भुक्तं च पीतं च हुतमेव न संशयः ॥ ३५ ॥

'விஷம் வர்ஷதி ஸூர்யோऽஸௌ ஸ்ரவத்யம்ருத முன்முக:
தாலுமூலே ஸ்திதஶ்சந்த்ர: ஸுதாம் வர்ஷத்யதோமுக:
ப்ரூமத்ய நிலயோ பிந்து: ஶுத்தஸ்படிக ஸந்நிப:
மஹாவிஷ்ணோஶ்ச தேவஸ்ய தத் ஸூக்ஷ்மம் ரூபமுச்யதே
ஏதத் பஞ்சாக்னி ரூபம் யோ பாவயன் புத்திமான் தியா
தேன புக்தஞ்ச பீதஞ்ச ஹுதமேவ ந ஸம்ஶய:.'

பொ-ரை:—அச் சூரியாக்கினி மேல்நோக்கி நின்றபொழுது அமுதம் பெருகுகின்றது. கீழ் நோக்கமுள்ள பொழுது விஷத்தை, அல்லது விஷத்திற்கொப்பான வெப்பத்தைக் கக்குகின்றது என்று தெரிந்துகொள்வாயாக. நாவினது இரு பக்கத்தையும் தாலு எனப்படுகிறது. அதனடியில் சந்திரன் உளன். அவன் அங்கு கீழ் முகமாயிருந்து எப்பொழுதும் அமுதைப் பொழிகின்றான். தூய படிகத்திற்

கொப்பான பிந்துவானது புருவங்களின் நடுவில் உளது. அதுவே விஷ்ணுவினுடைய சூக்ஷும வடிவென்று உணர்க. மூலாக்கினி, வடவாக்கினி, பார்த்திவாக்கினி, வித்யுதாக்கினி, சூரியாக்கினி, எனக் கூறியுள்ள இந்தப் பஞ்சாக்கினியை யாதொரு அறிஞன் நன்றாய்த் தெரிந்துகொண்டு தியானஞ் செய்கின்றானோ, அவனால் நால்வகை உண்டியும், அமுதபானமும் செய்யப்படுகிறது. அவனே ஹோமம் செய்து முடித்தவன் ஆகின்றான் இதில் ஐயமில்லை. (35)

அ - கை :—குண்டலி சக்தியை விழிப்புறச் செய்யுமுபாயங் கூறல்.

सुखसंसेवितं स्वप्नं सुजीर्णमित भोजनम् ।
शरीरशुद्धिं कृत्वाऽऽदौ सुखमासन मास्थितः ॥ ३६ ॥
प्राणस्य शोधयेन्मार्गं रेच पूरक कुम्भकैः ।
गुदमाकुञ्च्य यत्नेन मूलशक्तिं प्रपूजयेत् ॥ ३७ ॥

"ஸுகஸம்ஸேவிதம் ஸ்வப்னம் ஸுஜீர்ண மித போஜனம்
ஶரீர ஶுத்திம் க்ருத்வாதௌ ஸுகமாஸன மாஸ்திதஃ
ப்ராணஸ்ய ஶோதயேன் மார்கம் ரேசபூரக கும்பகைஃ
குதமாகுஞ்ச்ய யத்னேன மூல ஶக்திம் ப்ரபூஜயேத்.'

பொ-ரை :—நன்றாய்ச் செமிக்கும்படியாக அற்பாகாரம் புசித்து, சுகமாய்த் தூங்கி எழுந்தவுடன் நீரால் நன்கு உடலை சுத்திசெய்ய வேண்டியது. இது புறத்தூய்மை எனப்படுகிறது. பிறகு சுகாசனத்தில் உட்காரவேண்டியது, அதன் பின்னர் மனதைப் பொறிவழி போகாது தடுத்து ஒருமைப் படுத்திக்கொண்டு பூரக, கும்பக, ரேசகங்களால் பிராணனது வழியைச் சுத்தி செய்வானாக. இதுவே அகத்தூய்மைக்கு

வழியாகிறது. பிறகு மூல பந்தமென்ற பயிற்சியால் மூலத்தை மேலுதையும்படிச் செய்து குண்டலி சக்தியை எழுப்ப வேண்டும் என்று அறிக. (37)

அ - கை:—கேசரி முத்திரையின் பயிற்சியும் அதன் பயனுங் கூறல்.

नाभौ लिङ्गस्य मध्ये तु उड्याणाख्यं च बन्धयेत् ।
उड्डीय याति तेनैव शक्तितोड्याण पीठकम् ॥ ३८ ॥
कण्ठं संकोचयेत्किंचिद्बन्धो जालन्धरोह्ययम् ।
बन्धयेत्खेचरी मुद्रां दृढचित्तः समाहितः ॥ ३९ ॥
कपाल विवरे जिह्वा प्रविष्टा विपरीतगा ।
भ्रुवोरन्तर्गता दृष्टिर्मुद्रा भवति खेचरी ॥ ४० ॥

'நாபௌ லிங்கஸ்ய மத்யே து உட்யாணாக்யம்ச பந்தயேத்
உட்டீய யாதி தேனைவ ஶக்திதோட்யாண பீடகம்
கண்டம் ஸங்கோசயேத் கிஞ்சித் பந்தோ ஜாலந்தரோ
ஹ்யயம்
பந்தயேத் கேசரீ முத்ராம் த்ருடசித்தஃ ஸமாஹிதஃ
கபால விவரே ஜிஹ்வா ப்ரவிஷ்டா விபரீதகா
ப்ருவோரந்தர் கதாத்ருஷ்டிர் முத்ரா பவதி கேசரீ,'

பொ - ரை:—ஆண்குறிக்கும் கொப்பூழுக்கும் நடுவிலுள்ள வயிற்றை மேல் ஏறச் செய்வது உட்டியாணமென்ற பயிற்சியாகும். இந்த உட்டியாணப் பயிற்சியாலேயே குண்டலி சக்தியானவள் புருவங்களுக்கு நடுவிலுள்ள உட்டியாண பீடத்தை நோக்கி எழுந்து செல்லுகின்றாள். கழுத்தைச் சிறிது மார்பில் வளைத்து நிற்பது ஜாலந்தரப் பயிற்சி என்று அறிக பல்வேறு சிந்தனைகளை அகற்றி உறுதியான

மனமுள்ளவனுக் கேசரீ முத்திரையைப் பயில வேண்டும். அதாவது நாவை உள்ளே மடக்கி அண்ணாக்கடியிலுள்ள பொந்தில் நுழையச் செய்து புருவங்களின் நடுவில் பார்வையைச் செலுத்தி நிற்பது கேசரி முத்திரையின் பயிற்சி என்று அறிக.

இதுவுமது,

खेचर्या मुद्रितं येन विवरं लम्बिकोर्ध्वतः ।
न पीयूषं पतत्यग्नौ न च वायुः प्रधावति ॥ ४१ ॥
न क्षुधा न तृषा निद्रा नैवालस्यं प्रजायते ।
न च मृत्युर्भवेत्तस्य योमुद्रां वेत्ति खेचरीम् ॥ ४२ ॥

கேசர்யா முத்ரிதம் யேன விவரம் லம்பிகோர்த்வதः
நபீயூஷம் பதத்யக்னௌ நச வாயுः ப்ரதாவதி
ந க்ஷுதா ந த்ருஷா நித்ரா நைவாலஸ்யம் ப்ரஜாயதே
நச ம்ருத்யுர் பவேத் தஸ்ய யோ முத்ராம் வேத்தி கேசரீம்

பொ-ரை:—எவன் கேசரீ முத்திரையால் அண்ணாக்கின் அடியிலுள்ள துவாரத்தை அடைத்து விடுகின்றானோ, அவனுக்கு அமுதவடிவவீர்யமானது யோனி வடிவ அக்கினியில் வீழ்வதில்லை. பிராணாபானன்களாகிய காற்றும் அலையாது நிலை பெறுகின்றது. மற்றும் அவனுக்கு பசியுண்டாவதில்லை. தாகமுண்டாவதில்லை. தூக்கமுண்டாவதில்லை. சோம்பலுண்டாவதில்லை. மற்றும் அவன் மறிப்பதே இல்லை. என்று அறிக. இக்கேசரீ முத்திரையை ஆசாரியனிடத்துக் கேட்டு அதன்படி நன்றாய்ப் பயின்று அதனுண்மையைத் தெரிந்தவனுக்கே இவ்விதபயன் கைகூடுமென்று அறிக. (42)

அ - ரை:—தலையுச்சியிலுள்ள ஆயிரமிதழ்க் கமலத்தில் இடையறாது சிவத்தியானஞ் செய்வதால் முக்தி உளதா மெனக் கூறல்.

ततः पूर्वापरे व्योम्नि द्वादशान्ते शिवात्मके ।
उड्याणपीठे निर्द्वन्द्वे निरालम्बे निरञ्जने ॥ ४३ ॥
ततः पङ्कज मध्यस्थं चन्द्रमण्डल मध्यगम् ।
सदाशिव मनुध्यायेत्स्रवन्त ममृतं सदा ॥ ४४ ॥
भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्व संशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥ ४५ ॥

"ததஃ பூர்வாபரே வ்யோம்னி த்வாதஶாந்தே ஶிவாத்மகே
உட்யாண பீடே நிர்த்வந்த்வே நிராலம்பே நிரஞ்ஜனே
ததஃ பங்கஜ மத்யஸ்தம் சந்திரமண்டல மத்யகம்
ஸதாஶிவ மனுத்யாயேத் ஸ்ரவந்த மம்ருதம் ஸதா
பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ் சித்யந்தே ஸர்வ ஸம்ஶயாஃ
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே."

டோ - ரை:—கேசரீ முத்திரையைப் பயின்ற பின்னர் கீழ்மேல் நிறைந்ததாய்ச், சித்வெளியாய், புருவத்திற்குமேல் பன்னிரண்டங்குலம் கடந்ததாய், அழிவற்றதாய், குறியற்ற தாய், மங்களசொரூபமாய், உட்டியாண பீடத்தை அடைந்த தாய், பற்றுக்கோடின்றியதாய், இன்ப துன்பங்களைக் கடந்த தாய், ஆயிரமிதழ் கமல மத்தியில் உள்ளதாய், சந்திர மண்டல மத்தியிலிருப்பதாய், எப்பொழுதும் அமிர்தத்தைப் பொழிகின்றதாயுமுள்ள சதாசிவத்தை இடையறாது தியா னஞ் செய்வானாக. இந்த தியானத்தால் யாவற்றினும் சிறந்த அப்பரசிவமானது அறியப்பட்டபொழுது, யான்

எனது என்ற அகந்தைவடிவ முடி அவிழ்ந்து போகின்றது. ஐயப்பாடுகள்யாவும் அழிவுறுகின்றன. ஊழ்வினைகள் யாவும் கெட்டொழிகின்றன. இதுவே பரமுத்திநிலை என்று அறிக. (45)

அ - கை :—மேற்சொல்லும் ஒவ்வொரு பாவனைக்கும் உளவாகும் சித்திகளைக் கூறல்.

अथ सिद्धिं प्रवक्ष्यामि सुखोपायं सुरेश्वर ।
जितेन्द्रियाणां शान्तानां जितश्वास विचेतसाम् ॥ ४६ ॥
नादे मनोलयं ब्रह्मन् दूरश्रवण कारणम् ।
बिन्दौ मनोलयं कृत्वा दूरदर्शन माप्नुयात् ॥ ४७ ॥
कालात्मनि मनोलीनं त्रिकाल ज्ञान कारणम् ।
परकाय मनोयोगः परकाय प्रवेशकृत् ॥ ४८ ॥

'அத ஸித்திம் ப்ரவக்ஷ்யாமி ஸுகோபாயம் ஸுரேஶ்வர
ஜிதேந்த்ரியாணாம் ஶாந்தானாம ஜிதஶ்வாஸ விசேதஸாம்
நாதே மனோலயம் ப்ரஹ்மன் தூரஶ்ரவண காரணம்
பிந்தௌ மனோலயம் க்ருத்வா தூரதர்ஶன மாப்னுயாத்
காலாத்மனி மனோ லீனம் த்ரிகாலஜ் ஞானகாரணம்
பரகாய மனோயோகஃ பரகாய ப்ரவேஶக்ருத்.'

பொ - ரை :—தேவர்கள் தலைவ! புலன்களை வென்றவர்களும், பிராணனோடு மனதையுந் தன்வயப் படுத்தியவர்களுமான சாந்தமே வடிவு கொண்ட மகான்களுக்கு எளிதில் அடையப் பெறுகின்ற சித்தியைக் கூறுகின்றேன். ஒருமை மனதுடன் விழைவோடு கேட்பாயாக. நாதத்தில் மனதை ஒடுக்கியவனுக்கு சேய்மையில் உளதாகும் சொற்களைக் கேட்கும் ஆற்றல் உண்டாகின்றது. புருவ நடுவிலுள்ள

பிந்துவில் மனதை ஒடுக்கியவன் செய்மையிலுள்ள பொருள்களைக் காணுந் திறமை பெறுகின்றான். காலத்தில் மனதை ஒடுக்கி நின்றவனுக்கு முக்காலங்களின் அறிவு உண்டாகின்றது. வேறு உடலில் மனதைச் செலுத்தும் ஆற்றல் பெற்றவன் வேறு உடலில் நுழைந்து நிற்கும் ஆற்றல் பெறுகின்றான். (48)

இதுவுமது;

अमृतं चिन्तयेन्मूर्ध्नि क्षुत्तृषा विषशान्तये ।
पृथिव्यां धारयेच्चित्तं पाताल गमनं भवेत् ॥ ४९ ॥
सलिले धारयेच्चित्तं नाम्भसा परिभूयते ।
अग्नौ संधारयेच्चित्त मग्निना दह्यते न सः ॥ ५० ॥
वायौ मनो लयं कुर्या दाकाश गमनं भवेत् ।
आकाशे धारयेच्चित्त मणिमादिक माप्नुयात् ॥ ५१ ॥
विराड्रूपे मनोयुञ्जन् महिमान मवाप्नुयात् ।
चतुर्मुखे मनो युञ्जन् जगत्सृष्टि करो भवेत् ॥ ५२ ॥

* அம்ருதம் சிந்தயேன்மூர்த்னி க்ஷுத்த்ருஷா
விஷஶாந்தயே
ப்ருதிவ்யாம் தாரயேச்சித்தம் பாதாளகமனம் பவேத்
ஸலிலே தாரயேச்சித்தம் நாம்பஸா பரிபூயதே
அக்னௌ ஸந்தாரயேச்சித்த மக்னினா தஹ்யதே ந ஸ:
வாயௌ மனோ லயம் குர்யா தாகாஶ கமனம் பவேத்
ஆகாஶே தாரயேச்சித்த மணிமாதிக மாப்னுயாத்
விராட்ரூபே மனோ யுஞ்ஜன் மஹிமான மவாப்னுயாத்
சதுர்முகே மனோ யுஞ்ஜன் ஜகத் ஸ்ருஷ்டிகரோ பவேத்.'

போ - ரை :— தலையுச்சியில் அமுதத்தியானஞ் செய்து கற்றவனுக்கு பசி, தாகம், விஷமிவற்றை அடக்கியாளுந் திறமை உண்டாகின்றது. பூமியில் சித்தத்தை நிறுத்தப் பயின்றவன் பாதாள உலகிற்குச் செல்லும் வலிமை பெறுகின்றான். நீரில் மனதை நிறுத்தப் பழகியவன் நீரால் அழிக்கப் படாதவனாய் விரும்பியவண்ணம் நீரிற் செல்லுகின்றான். நெருப்பில் மனதை நிறுத்தப் பயின்றவன் நெருப்பால் எரிக்கப்படுவதில்லை. காற்றில் மனதை நிறுத்தப் பயின்றவன் ஆகாயத்திற் செல்லும் ஆற்றல் பெறுகின்றான். ஆகாயத்தில் மனதை நிறுத்தப் பயின்றவன் அணிமாதி சித்திகளைப் பெறுகின்றான். விராட்வடிவில் மனதை நிறுத்தப் பயின்றவன் மிகுந்த பெருமையை அடைகின்றான் நான்முகனிடத்தில் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகைப் படைக்குமாற்றல் பெறுகின்றான். (52)

இதுவுமது,

इन्द्ररूपिण मात्मानं भावयन् मर्त्यं भोगवान् ।
विष्णुरूपे महायोगी पालयेदखिलं जगत् ॥ ५३ ॥
रुद्ररूपे महायोगी संहरत्येव तेजसा ।
नारायणे मनो युञ्जन् नारायण मयो भवेत् ॥ ५४ ॥
वासुदेवे मनोयुञ्जन् सर्वसिद्धि मवाप्नुयात् ।
यथा संकल्पयेद्योगी योगयुक्तो जितेन्द्रियः ॥ ५५ ॥
तथा तत्तदवाप्नोति भाव एवात्र कारणम् ।

‘ இந்த்ரரூபிண மாத்மானம் பாவயன் மர்த்ய போகவான்
விஷ்ணு ரூபே மஹாயோகி பாலயே தகிலம் ஜகத்
ருத்ர ரூபே மஹாயோகி ஸம்ஹரத்யேவ தேஜஸா

*நாராயணே மனோ யுஞ்ஜுன் நாராயண மயோ பவேத்*
*வாஸுதேவே மனோ யுஞ்ஜுன் ஸர்வஸித்தி மவாப்னுயாத்*
*யதா ஸங்கல்பயேத் யோகி யோகயுக்தோ ஜிதேந்த்ரியஃ*
*ததா தத்த தவாப்னோதி பாவ ஏவாத்ர காரணம்.'*

போ - ரை :—இந்திரனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் மனிதர்களுக்குத் தலைவன் ஆகின்றான். விஷ்ணுவினிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகைக் காக்கும் வலிமை பெறுகின்றான். உருத்திரனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகை அழிக்கும் வலிமை பெறுகின்றான். நாராயணனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் எல்லாமாய் நிற்கும் ஆற்றலைப் பெறுகின்றான். வாசுதேவனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் எல்லாச் சித்திகளையும் பெற்று இன்பவடிவம் ஆகின்றான். புலன்களை வென்ற யோகி எந்தெந்தச் சித்தியை அடைய விரும்புகின்றானோ, அந்தந்தச் சித்தி அவனுக்கு எளிதில் கைகூடுகின்றது. 'எத்பாவாம் தத்பவதி, என்றபடி பாவனையே சித்திகளின் காரணமென்று அறிக. (55)

அ - கை :—மேற்சொன்ன சித்திக்கும், முக்திக்கும், சிறந்த காரணமாயுள்ளவர் குருவாம் ஆகையால் குருவை முறைப்படி பூஜிக்கவேண்டுமெனக் கூறல்.

गुरुर्ब्रह्म गुरुर्विष्णु र्गुरुर्देवः सदाशिवः ।
न गुरोरधिकं कश्चित् त्रिषु लोकेषु विद्यते ॥ ५६ ॥
दिव्यज्ञानो पदेष्टारं देशिकं परमेश्वरम् ।
पूजयेत् परया भक्त्या तस्य ज्ञानफलं भवेत् ॥ ५७ ॥
यथा गुरुस्तथैवेशो यथैवेशस्तथा गुरुः ।
पूजनीयो महाभक्त्या न भेदो विद्यतेऽनयोः ॥ ५८ ॥

नाद्वैतवादं कुर्वीत गुरुणा सह कुत्रचित् ।
अद्वैतं भावयेद्भक्त्या गुरोर्देवस्य चात्मनः ॥ ५९ ॥

'குருர் ப்ரஹ்ம குருர் விஷ்ணுர் குருர் தேவஃ ஸதாஶிவஃ
ந குரோரதிகஃ கஶ்சித் த்ரிஷு லோகேஷு வித்யதே
திவ்ய ஜ்ஞாநோப தேஷ்டாரம் தேஶிகம் பரமேஶ்வரம்
பூஜயேத் பரயா பக்த்யா தஸ்ய ஜ்ஞானபலம் பவேத்
யதா குருஸ் ததைவேஶோ யதைவேஶஸ் ததா குருஃ
பூஜனீயோ மஹாபக்த்யா ந பேதோ வித்யதேऽனயோஃ
நாத்வைத வாதம் குர்வீத குருணு ஸஹ குத்ரசித்
அத்வைதம் பாவயேத் பக்த்யா குரோர் தேவஸ்ய
[சாத்மனஃ'

பொ-ரை :—நான்முகனே ! குருவே பிரம்மாவென்றும், குருவே விஷ்ணுவென்றும், குருவே ஸதாசிவனென்றும், அறிக. குருவுக்கு மேம்பட்டவர் மூன்றுலகத்திலும் இல்லை. சிவபெருமானே குருவடிவு கொண்டு வருகின்றார். அவரே நமக்கு மேலான ஞானத்தை உணர்த்துகின்றார். என்று எண்ணி அவரைச் சிறந்த பக்தியோடு வழிபடுவாயாக. குருவே சிவன். சிவனே குரு. என நிச்சயித்து குரு சிவன் இவர்களுக்கு வேற்றுமை பாராட்டாமல் மிகவும் போற்றுவாயாக. ஓரிடத்துங் குருவோடு தனக்கு அபேத மிருப்பதாக வாக்கால் கூறாது இருப்பாயாக. குருவுக்குத் தெய்வத்திற்குத் தனக்கும் மனதால் அன்போடு அபேதமே பாவனை செய்யத் தக்கது. (59)

அ - கை :—யோக சிகையின் பெருமையைக் கூறல்.

योगशिखां महागुह्यं यो जानाति महामतिः ।
न तस्य किंचिदज्ञातं त्रिषु लोकेषु विद्यते ॥ ६० ॥
न पुण्यपापे नास्वस्थो न दुःखं न पराजयः ।
न चास्ति पुनरावृत्ति रस्मिन् संसारमण्डले ॥ ६१ ॥

'யோக ஶிகாம் மஹாகுஹ்யம் யோ ஜாநாதி மஹாமதிঃ
ந தஸ்ய கிஞ்சிதஜ்ஞாதம் த்ரிஷு லோகேஷு வித்யதே
ந புண்ய பாபே நாஸ்வஸ்தோ ந துঃகம் ந பராஜயঃ
ந சாஸ்தி புநராவ்ருத்தி ரஸ்மின் ஸம்ஸார மண்டலே.'

போ - ரை :—யாதொரு அறிஞன் மிக ரகசியமான யோகங்களின் முடிவைக் கூறும் யோகசிகோபநிஷத்தை நன்கு கற்று அதன்படி பயின்று அறிவனோ, அவனுக்கு மூவுலகிலும் அடையப்படாதது சிறிதுமே இல்லையென்று அறிக. மற்றும் அவனுக்கு புண்ணிய பாபங்களின் தொடர்பு இல்லை. அவன் மீண்டும் இவ்வுலக வாழ்வில் திரும்புவதில்லை என்று அறிக. (61)

அ - கை :—சித்திகளை விரும்பாதிருக்க வேண்டுமெனக் கூறல்.

सिद्धौ चित्तं न कुर्वीत चञ्चलत्वेन चेतसः ।
तथाऽपि ज्ञाततत्त्वोऽसौ मुक्त एव न संशयः ॥ ६२ ॥

'ஸித்தௌ சித்தம் ந குர்வீத சஞ்சலத்வேந சேதஸঃ
ததாऽபி ஞாத தத்வோऽஸௌ முக்த ஏவ ந ஸம்ஶயঃ'

போ - ரை :—முக்தி வேட்கையுள்ளவன் சித்தியை விரும்பலாகாது. அது சித்த சலனத்தை உண்டுபண்ணுங் காரணமென்று அறிவானாக. தத்துவத்தை அறிந்த ஞானி

சித்தியை விரும்பினும் அவன் முக்தனென்றே அறிக ஐயுறற்க. (62)

'ஓம் தத் ஸத்'

ஐந்தாம் அத்தியாயம் முடிந்தது.

---

ஓம்

## ஆறுவது அத்தியாயம்

அ - கை:—குண்டலி சக்தியை உபாசிக்கும் முறையைக் கூறல்.

उपासना प्रकारं मे ब्रूहि त्वं परमेश्वर ।
येन विज्ञान मात्रेण मुक्तो भवति संसृतेः ॥ १ ॥
उपासना प्रकारं ते रहस्यं श्रुतिसारकम् ।
हिरण्यगर्भ वक्ष्यामि श्रुत्वा सम्यगुपासय ॥ २ ॥
सुषुम्नायै कुण्डलिन्यै सुधायै चन्द्रमण्डलात् ।
मनोन्मन्यै नमस्तुभ्यं महाशक्त्यै चिदात्मने ॥ ३ ॥

'உபாஸனு ப்ரகாரம் மே ப்ரூஹி த்வம் பரமேஶ்வர
யேன விஜ்ஞான மாத்ரேண முக்தோ பவதி ஸம்ஸ்ருதே:
உபாஸனு ப்ரகாரம் தே ரஹஸ்யம் ஶ்ருதிஸாரகம்
ஹிரண்யகர்ப வக்ஷ்யாமி ஶ்ருத்வா ஸம்யகுபாஸய
ஸுஷும்னுயை குண்டலின்யை ஸுதாயைசந்த்ரமண்டலாத்
மனேன்மன்யை நமஸ்துப்யம் மஹாஶக்த்யை சிதாத்மனே.'

போ - ரை :—சிவபெருமானே ! யாதொன்றை உபாசிப்பதால் பிறவித் தொடரிலிருந்து விடுபட்டவன் ஆவனோ, அந்த உபாஸனா முறையைத் தாங்கள் எனக்குக் கூறியருள்வீராக. பிரம்மாவே ! மிக ரஹஸ்யமானதும் வேதங்களின் சாரமாயுள்ளதுமான உபாசனையின் வழியை உன்பொருட்டுக் கூறுகின்றேன். சிரத்தையோடு கேட்டு நன்கு உபாசிப்பாயாக. குண்டலினியாய்ச், சுழுமுனையாய்ச் சந்திரமண்டலமத்தியிலிருந்து அமுதைப் பொழிகின்ற மனோன்மணியாய் சிதான்மாவாய் மஹாசக்தியாயுள்ள உன்பொருட்டு வணங்குகின்றேன் என்று தியானிப்பாயாக. (வேறு உபநிடதத்திற் கூறியுள்ள குண்டலினி சக்தியின் தியானம் :—மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திர பரியந்தமும், பிரம்மரந்திரத்திலிருந்து மூலாதார பரியந்தமும், தொடர்ந்து நிற்பதாய்த் தாமரைத் தண்டின் நூல்போன்று அதிசூக்ஷுமமாயுள்ள சுழுமுனை நாடியை மூலாதாரத்தில் மின்னற் கூட்டங்களின் ஒளியுள்ளதெனவும், இதயத்தில் பத்தாயிரம் சூரியர்களின் ஒளியுள்ளதெனவும், புருவ நடுவில் கிரணங்களால் சூழப்பெற்ற லக்ஷம் சந்திரர்களின் ஒளியுள்ளதெனவும், தலையுச்சியில் பேரொளி வடிவ பராசக்தியாகவும், தியானஞ்செய்யத்தக்கது. குண்டலினி சக்தியை முதலில் இங்ஙனம் தியானிப்பது உபாஸனா முறை என்று அறிக.) (3)

அ - கை :—சுழுமுனா நாடியின் இலக்கணங் கூறல்.

शतं चैका च हृदयस्य नाड्यः
तासां मूर्धान मभिनिःसृतैका
तयोर्ध्व मायन्नमृतत्व मेति
विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति ।। ४ ।।

एकोत्तरं नाडिशतं तासां मध्ये परा स्मृता ।
सुषुम्ना तु परे लीना विरजा ब्रह्मरूपिणी ॥ ५ ॥
इडा तिष्ठति वामेन पिङ्गला दक्षिणेन तु ।
तयो र्मध्ये परं स्थानं यस्तद्वेद स वेदवित् ॥ ६ ॥

'ஶதஞ் சைகாச ஹ்ருதயஸ்ய நாட்ய:
தாஸாம் மூர்த்தான மபிநி: ஸ்ருதைகா
தயோர்த்வ மாயன்னம்ருதத்வ மேதி
விஷ்வங்ஙன்யா உத்க்ரமணே பவந்தி.
'ஏகோத்தரம் நாடிஶதம் தாஸாம் மத்யே பரா ஸ்ம்ருதா.
ஸுஷும்ணா து பரே லீனா விரஜா ப்ரஹ்மரூபிணீ
இடா திஷ்டதி வாமேன பிங்கலா தக்ஷிணேன து
தயோர் மத்யே பரம் ஸ்தானம் யஸ்தத் வேத ஸ வேதவித்'

**பொ - ரை:**—பிரம்மாவே! இதயத்தில் நூற்றொரு நாடிகள் உள்ளன. அவற்றுள் ஒரு நாடி தலையுச்சியைப் பற்றி நிற்கின்றது. அதுவே சுழுமுனை நாடி எனப் படுகிறது. அதைப் பற்றி மேலே செல்லுகின்றவன் மரணமிலாப் பெரு வாழ்வு பெறுகின்றான். மற்றைய நூறு நாடிகளைப் பின் பற்றிச் செல்லுகின்றவன் மரித்துப் பிறக்கின்றான். அந்த நூற்றொரு நாடிகளுக்குள் மத்தியிலுள்ள சுழுமுனை நாடியே பரை எனக் கருதப்படுகிறது. அந்தச் சுழுமுனை நாடியே பரத்தில் ஒடுங்கியதாய், மலத்தின் நீங்கியதாய் பிரம்ம வடிவாய் விளங்குகின்றது. அதன் இடது பக்கத்தில் இடை நாடியுளது. வலது பக்கத்தில் பிங்கலை நாடியுளது. அந்த இடை பிங்கலைகளின் நடுவில் பரதத்துவமாய் நின்ற சுழுமுனை நாடியை எவன் அறிகின்றானோ, அவனே வேதத்தின் உண்மையைக் கண்ட ஜீவன் முக்தன் என்று அறிக. (4)

இதுவுமது,

प्राणान् संधारयेत्तस्मिन् नासाभ्यन्तर चारिणः ।
भूत्वा तत्रायतप्राणः शनैरेव समभ्यसेत् ॥ ७ ॥
गुदस्य पृष्ठभागेऽस्मिन् वीणादण्डस्तु देहभृत् ।
दीर्घास्थि देहपर्यन्तं ब्रह्मनाडीति कथ्यते ॥ ८ ॥
तस्यान्ते सुषिरं सूक्ष्मं ब्रह्मनाडीति सूरिभिः ।
इडा पिङ्गलयोर्मध्ये सुषुम्ना सूर्यरूपिणी ॥ ९ ॥

'ப்ராணான் ஸந்தாரயேத் தஸ்மின் நாஸாப்யந்தர சாரிணஃ
பூத்வா தத்ராய தப்ராணஃ ஶனைரேவ ஸமப்யஸேத்
குதஸ்ய ப்ருஷ்டபாகே஽ஸ்மின் வீணாதண்டஸ்து
தேஹப்ருத்
தீர்காஸ்தி தேஹபர்யந்தம் ப்ரஹ்ம நாடீதி கத்யதே
தஸ்யாந்தே ஸுஷிரம் ஸூக்ஷ்மம் ப்ரஹ்மநாடீதி ஸூரிபிஃ
இடா பிங்கலயோர் மத்யே ஸுஷும்ணா ஸூர்யரூபிணீ.'

பொ - ரை :—இருமூக்கினுட் செல்லுகின்ற பிராணனை அந்நடு நாடியில் நன்கு தடுத்து நிறுத்துவாயாக. அந்நாடியில் பிராணன் நீடித்து நிலைபெறுதலை அனுபவித்த பின்னர் மெதுவாகவே வெளியில் விடப் பயில்வாயாக. குதத்தினது பின்பக்கத்தில் வீணா தண்டத்தைப் போன்று ஓரெலும்பு உளது. அதுவே உடலைத் தாங்கி நிற்பதாகும். அந்நீண்ட எலும்பானது உடலை அளந்து நிற்கின்றது. அவ்வெலும்பையே பிரம்ம தண்டமென்று சொல்லப்படுகிறது. அதனுள்ளில் அதி சூக்குமமான துவாரமுள்ள சுழுமுனை நாடி உளது. அச் சுழுமுனை நாடியே அறிஞர்களால் பிரம்ம நாடி

எனக் கூறப்படுகின்றது. அந்தப் பிரம்ம நாடியே இடை பிங்கலைகளின் மத்தியில் சூரியவடிவாய் விளங்குகின்ற சுழு முனை நாடி என்று அறிக. (91)

அ - கை :—எல்லாவற்றையுந் தாங்கி நிற்பது சுழுமுனை நாடி எனக் கூறுகின்றது.

सर्वं प्रतिष्ठितं तस्मिन् सर्वगं सर्वतोमुखम् ।
तस्य मध्यगताः सूर्य सोमाग्नि परमेश्वराः ॥ १० ॥
भूतलोका दिशः क्षेत्राः समुद्राः पर्वताः शिलाः ।
द्वीपाश्च निम्नगा वेदाः शास्त्रविद्या कलाऽक्षराः ॥ ११ ॥
स्वरमन्त्र पुराणानि गुणाश्चैते च सर्वशः ।
बीजं बीजात्मकस्तेषां क्षेत्रज्ञाः प्राणवायवः ॥ १२ ॥

'ஸர்வம் ப்ரதிஷ்டிதம் தஸ்மின் ஸர்வகம் ஸர்வதோமுகம்
தஸ்ய மத்யகதாঃ ஸூர்ய ஸோமாக்னி பரமேஸ்வராঃ
பூதலோகா, திஸঃ க்ஷேத்ராঃ ஸமுத்ராঃ பர்வதாঃ ஸிலாঃ
த்வீபாஸ்ச நிம்னகா வேதাঃ ஸாஸ்த்ரவித்யா கலாக்ஷராঃ
ஸ்வரமந்த்ர புராணானி குணாஸ்சைதே ச ஸர்வஸঃ
பீஜம் பீஜாத்மகஸ்தேஷாம் க்ஷேத்ரஜ்ஞாঃ
ப்ராணவாயவঃ.'

பொ - ரை :—அச் சுழுமுனையில் எல்லாம் நிலைபெற்று விளங்குகின்றன. அதுவே எல்லாவற்றிலும் சென்றிருப்பதாய், எங்கும் முகமுள்ளதாய், இருக்கின்றது. அதன் நடுவில் சூரியன், சந்திரன், அக்கினி, பரசிவன், பஞ்சபூத வடிவ உலகங்கள், திக்குகள், ஆலயங்கள், கடல்கள், மலைகள், கற்கள், தீவுகள், நதிகள், வேதங்கள், சாஸ்திரங்கள், ஞானங்கள், அறுபத்து நான்கு கலைகள், எழுத்துக்கள், ஏழு

ஸ்வரங்கள், மந்திரங்கள், புராணங்கள், மூன்று குணங்கள், பிராண வாயுக்கள், ஆன்மாக்கள், இவைகள் யாவும் நிலை பெற்றுள்ளன. அவைகளைத் தோற்றுவிக்குங் காரணமான தும், தோன்றுமிடமாயுள்ள பீஜமாயிருப்பதும் அதுவே என்று அறியவும். (12)

இதுவுமது,

सुषुम्नाऽन्तर्गतं विश्वं तस्मिन् सर्वं प्रतिष्ठितम् ।
नाना नाडी प्रसवगं सर्वभूतान्तरात्मनि ॥ १३ ॥
ऊर्ध्वमूल मधः शाखं वायुमार्गेण सर्वगम् ।
द्विसप्तति सहस्राणि नाड्यः स्युर्वायुगोचराः ॥ १४ ॥
सर्व मार्गेण सुषिरास्तिर्यञ्चः सुषिरात्मकाः ।
अधश्चोर्ध्वं च कुण्डल्याः सर्वद्वार निरोधनात् ॥ १५ ॥

'ஸுஷும்னாந்தர் கதம் விஶ்வம் தஸ்மின் ஸர்வம் ப்ரதிஷ்டிதம்
நானா நாடீ ப்ரஸவகம் ஸர்வபூதாந்த ராத்மனி
ஊர்த்வ மூலமதஃ ஶாகம் வாயுமார்கேண ஸர்வகம்
த்விஸப்ததி ஸஹஸ்ராணி நாட்யஃ ஸ்யுர் வாயுகோசராஃ
ஸர்வ மார்கேண ஸுஷிராஸ் திர்யஞ்சஃ ஸுஷிராத்மகாஃ
அதஶ்சோர்த்வஞ்ச குண்டல்யாஃ ஸர்வத்வார நிரோதனாத்.'

**போ - ரை :—** ஆகையால் சுழுமுனையினுள் உலகமும், உலகிலுள்ள யாவும், நிலைபெற்றுள்ளன. எல்லாச் சீவான் மாக்களின் உள்ளிருப்பதாய்ப் பல்வேறுநாடிகளைத் தோற்று விக்கின்றது. மேல் நோக்கிய வேரையும், கீழ் நோக்கிய கிளைகளையும் உடையதாய் எங்கும் பரந்து நின்று வாயுக்கள் செல்லும் வழியாக உள்ளது. அங்ஙனம் வாயுக்கள் செல்

லும் வழிகள் எழுபத்திராயிரம் நாடிகள் என எண்ணிக்கை இடப்பட்டுள்ளன. அந் நாடிகள் எங்கும் பரந்திருப்பதாயினும் குறுக்காகவும் சில நாடிகள் செல்லுகின்றன என்று அறிக. இந்நாடிகள் எங்கும் துவாரமுள்ளவைகள் ஆகின்றன. இந்நாடிகள் யாவற்றையுந் தொடர்ந்து நிற்பது குண்டலி சக்தியாகும். அச்சக்தியின் மேலுங் கீழுமுள்ள துவாரங்கள் யாவற்றையும் யோகப் பயிற்சியால் அடைப்பதால் சீவன் மேல்நோக்கிச் செல்லும் ஆற்றலைப் பெறுகின்றான். அங்ஙனம் செல்லுவதால் ஜீவன் முக்தி அடைகின்றான். (15)

அ - கை :—குண்டலி சக்தியை விழிப்புறச் செய்யுமுபாயங் கூறல்.

वायुना सह जीवोर्ध्वं ज्ञानान्मोक्ष मवाप्नुयात् ।
ज्ञात्वा सुषुम्ना तद्भेदं कृत्वा वायुं च मध्यगम् ॥ १६ ॥
कृत्वा तु बैन्दवस्थाने घ्राणरन्ध्रे निरोधयेत् ।
द्विसप्तति सहस्राणि नाडी द्वाराणि पञ्जरे ॥ १७ ॥
सुषुम्ना शाम्भवी शक्तिः शेषास्त्वन्ये निरर्थकाः ।
हृल्लेखे परमानन्दे तालुमूल व्यवस्थिते ॥ १८ ॥
अत ऊर्ध्वं निरोधे तु मध्यमं मध्यमध्यमम् ।
उच्चारयेत्परां शक्तिं ब्रह्मरन्ध्र निवासिनीम् ॥ १९ ॥
यदि भ्रमर सृष्टिः स्यात् संसार भ्रमणं त्यजेत् ।

வாயுனா ஸஹ ஜீவோர்த்வ ஞானான் மோக்ஷம வாப்னுயாத்
ஞாத்வா ஸுஷும்னா தத்பேதம் க்ருத்வா வாயுஞ்ச மத்யகம்
க்ருத்வாது பைந்தவஸ்தானே க்ராணரந்த்ரே நிரோதயேத்
ஸப்ததி ஸஹஸ்ராணி நாடீத்வாராணி பஞ்ஜரே

ஸுஷும்ணா ஶாம்பவீ ஶக்தி: ஶேஷாஸ்த்வன்யே நிரர்தகா:
ஹ்ருல்லேகே பரமானந்தே தாலுமூல வ்யவஸ்திதே
அத ஊர்த்வம் நிரோதேது மத்யமம் மத்யமத்யமம்
உச்சாரயேத் பராம் ஶக்திம் ப்ரஹ்மரந்த்ர நிவாஸினீம்
யதி ப்ரமர ஸ்ருஷ்டி: ஸ்யாத் ஸம்ஸார ப்ரமணம் த்யஜேத்.'

போ - ரை:—மேற்சொன்னபடி குண்டலி சக்தியின் இலக்கணத்தை நன்றாய்ச் சிந்தித்துப் பின்னர் வாயுவுடன் கூடிய சீவன்மேல் நோக்கிச் செல்லும் ஞானத்தைப் பெற்றவனாய் மோக்ஷமடைகின்றான். மூக்கின் இரு துவாரங்களை அடைத்துப் பிடித்துக்கொண்டு மூலபந்தமென்ற பயிற்சியால் குதத்தை மேலேறும்படிச் செய்யவும். இப்படிச் செய்வதால் குண்டலி சக்தியானவள் தான் செல்லும் வழி நடுவிலுள்ள பிரம்ம கிரந்தி, விஷ்ணுக் கிரந்தி, உருத்திரக் கிரந்தி, என்ற முடிச்சுகளை அறுத்து மேலே புருவங்களின் நடுவிலுள்ள பிந்துத் தானத்தை அசைக்கின்றாள். இதுவே பிராணாயாமப் பயிற்சியால் குண்டலி சக்தியை எழுப்பும் உபாயம் என்று அறிக. மற்றும் உடலில் எழுபத்தீராயிரம் நரம்புவழிகள் உள்ளன. அவற்றுள் சாம்பவி சக்தியாகிய சுழுமுனை நாடி மிகச் சிறந்ததாய் உள்ளது. மற்ற நாடிகள் பயனற்றவை எனக் கருதப்படுகின்றன. நாவினது இரு பக்கங்கள் தாலு எனப் படுகின்றன. அதனடியில் 'ஹ்ரீம், என்ற மந்திரத்தை செபிக்கின் சிறந்த இன்பத்தைத் தரும் அமுதம் பெருகுகின்றது. அதினின்றும் மேலேயுள்ள புருவங்களின் நடுவில் ஜெபிக்கின் குண்டலி துரிய நிலையை அடைகின்றது. அதனினும் சிறிது மேலேற்றி ஜெபிக்கின், துரியாதீத நிலையை அடைகின்றது. பின்னர்ப் பெருவழி யெனப்படும் பிரம்மரந்திரத்தில் இருப்பவளான பராசக்தியை மேற்சொன்ன மந்திரத்தால் ஜெபிப்பாயாக. இதுவே மந்திர

யோகத்தால் சக்தியை விழிப்புறச் செய்யும் வழியென்று அறிக. இவ்வாறு இன்றி வண்டுவடிவ மனமானது சங்கற்ப விகற்பவடிவ சிருட்டியைச் செய்து, மற்ற நாடிகளின் வழிச் செல்லுமாயின் அதுவே பிறவிச் சுழலை உண்டுபண்ணும் வழியாகும். ஆகையால் அவ்வழியை அறவே விட்டு நீங்குவாயாக. (19)

அ - கை :— அப்பரையை தலையுச்சியில் பரமாத்துமாவாக தியானிக்க வேண்டுமெனக் கூறல்.

गमागमस्थं गमनादिशून्यं चिद्रूपदीपं तिमिरान्धकारम् ।
पश्यामि ते सर्व जनान्तरस्थं नमामि हंसं परमात्मरूपम् ॥ २० ॥

अनाहतस्य शब्दस्य तस्य शब्दस्य यो ध्वनिः ।
ध्वनेरन्तर्गतं ज्योतिर्ज्योतिरन्तर्गतं मनः ।
तन्मनो विलयं याति तद्विष्णोः परमं पदम् ॥ २१ ॥

' கமாகமஸ்தம் கமநாதி ஶூன்யம்
சித்ரூப தீபம் திமிராந்தகாரம்
பஶ்யாமி தே ஸர்வ ஜநாந்தரஸ்தம்
நமாமி ஹம்ஸம் பரமாத்ம ரூபம்.

அநாஹதஸ்ய ஶப்தஸ்ய தஸ்ய ஶப்தஸ்ய யோத்வனிஃ
த்வனேரந்தர் கதம் ஜ்யோதிர் ஜ்யோதிரந்தர் கதம் மனஃ
தன்மனோ விலயம் யாதி தத்விஷ்ணோஃ பரமம் பதம் '.

பொ - ரை :—பரம்பொருளானது யாவற்றினுங் கலந்திருத்தலின் போக்குவரவுள்ளதாம். எங்குமாயிருத்தலின் போக்கு வரவொழிந்ததாம். ஒளிகளுக்கெல்லாம் ஒளி தந்து நிற்றலின் சித்வடிவ தீபமாம். அதனாலேயே அஞ்ஞான வடிவ இருட்டைக் கெடுப்பதாம். அதுவே எல்லோருடைய உள்ளத்தின் கண் அறிவு வடிவாய் நிலைபெற்றுள்ள

தெனக் காண்கின்றேன். அதுவே எனது உள்ளத்தில் ஹம்ஸ வடிவாய் உளதென நிச்சயித்து அதன் பொருட்டு வணங்குகின்றேன். மற்றும் :—வைகரீ வாக்கின் காரணமாய் நுண்ணியதாய் இருப்பது இதயத்திலுள்ள மத்திம வாக்காகும். அம்மத்திம ஒலியின் காரணமாய் சூக்குமமாய் ஒளிவடிவாய் உள்ளீடாயிருப்பது பஸ்யந்தி வாக்காகும். அதற்கு காரணமாய், உள்ளொளி வடிவாய் நிற்பது பரா வாக்காகும். அதன் காரணம் மனம் என்று அறிக. அம் மனத்தில் வைகரி முதலிய யாவும் நிலைபெற்றுள்ளன. அம் மனம் யாதொரு பேரொளியான பெருவெளியில் கலந்து ஒடுங்குகின்றதோ, அதுவே வியாபகமான பரமபதமென்று அறிக. (21)

அ - கை :—ஆதார வடிவ பிரம்ம நாடியில் பிராணன் மனமுதலியன ஒடுங்கியபின் முக்தியுளதாம் எனக் கூறல்.

केचिद्वदन्ति चाधारं सुषुम्ना च सरस्वती ।
आधाराज्जायते विश्वं विश्वं तत्रैव लीयते ॥ २२ ॥
तस्मात्सर्व प्रयत्नेन गुरुपादं समाश्रयेत् ।
आधारशक्ति निद्रायां विश्वं भवति निद्रया ॥ २३ ॥
तस्यां शक्ति प्रबोधेन त्रैलोक्यं प्रतिबुद्ध्यते ।
आधारं यो विजानाति तमसः परमश्नुते ॥ २४ ॥
तस्य विज्ञान मात्रेण नरः पापैः प्रमुच्यते ।
आधार चक्रमहसा विद्युत्पुञ्ज समप्रभा ॥ २५ ॥

"கேசித் வதந்தி சாதாரம் ஸுஷும்நா ச ஸரஸ்வதீ
ஆதாராஜ் ஜாயதே விஶ்வம் விஶ்வம் தத்ரைவ லீயதே
தஸ்மாத் ஸர்வ ப்ரயத்னேன குருபாதம் ஸமாஶ்ரயேத்
ஆதாரஶக்தி நித்ராயாம் விஶ்வம் பவதி நித்ரயா

தஸ்யாம் ஶக்தி ப்ரபோதேன த்ரைலோக்யம் ப்ரதி
புத்யதே.
ஆதாரம் யோ விஜாநாதி தமஸஃ பரமஶ்நுதே
தஸ்ய விஜ்ஞான மாத்ரேண நரஃ பாபைஃ ப்ரமுச்யதே
ஆதார சக்ர மஹஸா வித்யுத்புஞ்ஜ ஸமப்ரபா'.

பொ - ரை:—ஆதார வடிவ குண்டலி சக்தியைச் சுழு முனை என்றும், ஸரஸ்வதி என்றுஞ் சிலர் கூறுகின்றனர். ஆதார சக்தியினின்றும் உலகம் தோன்றுகின்றது. மீண்டும் அதனிடத்திலேயே ஒடுங்குகின்றது. அத்தகைய தோற்ற வொடுக்கக் காரணத்தை அறிவதன் பொருட்டு எல்லா முயற்சியாலும் குருவினது திருவடித் தொண்டை நன்றாய்ச் செய்வாயாக. ஆதார சக்தியானவள் உறக்கத்தினின்றும் நீங்கி எழுந்தபொழுது மூவுலகமும் விழிப்புற்று எழுகின்றது. அத்தகைய மூலப்பொருளாயுள்ள ஆதாரத்தை எவன் ஆச்சாரியனிடங் கேட்டு அறிகின்றானோ, அவன் இருட்டைக் கடந்து பரத்திற் கலந்து இன்புறுகின்றான். அந்த ஆதார சக்தியின் ஞான மாத்திரத்தால் மனிதன் பாபங்களிலிருந்து விடுபடுகின்றான். மின்னற் கூட்டங்கட்கு ஒப்பான காந்தியுள்ள ஆதார சக்கரத்தின் விளக்கம் ஒருவனுக்கு உண்டாயின் அவன். (25).

இதுவுமது,

तदा मुक्तिर्न संदेहो यदि तुष्टः स्वयं गुरुः ।
आधार चक्रमहसा पुण्यपापे निकृन्तयेत् ॥ २६ ॥
आधार वातरोधेन लीयते गगनान्तरे ।
आधार वात रोधेन शरीरं कम्पते यथा ॥ २७ ॥

आधार वात रोधेन योगी नृत्यति सर्वदा ।
आधार वात रोधेन विश्वं तत्रैव दृश्यते ॥ २८ ॥
सृष्टिराधार माधार माधारे सर्वदेवताः ।
आधारे सर्व वेदाश्च तस्मादाधार माश्रयेत् ॥ २९ ॥

"ததா முக்திர் ந ஸந்தேஹோ யதி துஷ்டஃ ஸ்வயங்குருஃ
ஆதார சக்ர மஹஸா புண்ய பாபே நிக்ருந்தயேத்
ஆதார வாத ரோதேன லீயதே ககனாந்தரே
ஆதார வாத ரோதேன ஶரீரம் கம்பதே யதா
ஆதார வாத ரோதேன யோகீ ந்ருத்யதி ஸர்வதா
ஆதார வாத ரோதேன விஶ்வம் தத்ரைவ த்ருஶ்யதே
ஸ்ருஷ்டி ராதார மாதார மாதாரே ஸர்வதேவதாஃ
ஆதாரே ஸர்வ வேதாஶ்ச தஸ்மாதாதார மாஶ்ரயேத்."

போ - ரை :—அப்பொழுதே முக்தனாகின்றான். இதில் ஐயமில்லை. அத்தகைய ஆதார சக்கரத்தின் விளக்கம் குருவருளின்றித் தானே உண்டாவது அன்று. குருவருள் பெற்றவன் ஆதார சக்கரத்தின் ஒளியால் புண்ணிய பாபங்களை அறுத்து எறிகின்றான். ஆதார சக்கரத்தில் பிராணனைத் தடுத்து நிறுத்துவதால் அவன் ஆகாய வெளியில் மறையும் ஆற்றலைப் பெறுகின்றான். ஆதார சக்கரத்தில் காற்றைத் தடுத்து நிறுத்துவதால் உடல் நடுக்கம் எய்துகின்றது. ஆதார சக்கரத்தில் பிராணனைத் தடுத்து நிறுத்துவதால் யோகி எப்பொழுதும் ஆனந்தமேலீட்டால் நடனஞ் செய்கின்றான். ஆதாரசக்கரத்தில் காற்றைத் தடுத்தலால் அங்கேயே உலகைக் காண்கின்றான். சிருஷ்டி, திதி, ஸம்மாரம் மூன்றும் ஆதார சக்கரத்தில் உள்ளன. எல்லாத் தேவதை

களும் ஆதார சக்கரத்தில் உள்ளன. எல்லா வேதங்களும் ஆதார சக்கரத்தில் உள்ளன. ஆகையால் ஆதார சக்கரத்தை குருவருளால் நன்கு பற்றுவாயாக. (29)

இதுவுமது,

आधारे पश्चिमे भागे त्रिवेणी सङ्गमो भवेत् ।
तत्र स्नात्वा च पीत्वाच नरः पापात् प्रमुच्यते ॥ ३० ॥
आधारे पश्चिमं लिङ्गं कवाटं तत्र विद्यते ।
तस्योद्घाटन मात्रेण मुच्यते भव बन्धनात् ॥ ३१ ॥
आधार पश्चिमे भागे चन्द्रसूर्यौ स्थितौ यदि ।
तत्र तिष्ठति विश्वेशो ध्यात्वा ब्रह्ममयो भवेत् ॥ ३२ ॥

'ஆதாரே பஶ்சிமே பாகே த்ரிவேணீ ஸங்கமோ பவேத்
தத்ர ஸ்னாத்வாச பீத்வாச நர: பாபாத் ப்ரமுச்யதே
ஆதாரே பஶ்சிமம் லிங்கம் கவாடம் தத்ர வித்யதே
தஸ்யோத்காடன மாத்ரேண முச்யதே பவபந்தனாத்
ஆதார பஶ்சிமே பாகே சந்த்ர ஸூர்யௌ ஸ்திதௌ யதி
தத்ர திஷ்டதி விஶ்வேஶோ த்யாத்வா ப்ரஹ்மமயோ
[பவேத்.'

பொ-ரை:—ஆதார சக்கரத்தின் மேலிடமாகிய புருவ நடுவில் திரிவேணிசங்கமம் உளது. அதுவே இடை பிங்கலை சுழுமுனை கூடுமிடமென்று அறிக. அச்சங்கமத்தில் குளித்தும் குடித்துமுள்ள மனிதன் பாபத்தால் விடுபடுகின்றான். ஆதார சக்கரத்தின் முடிவிலுள்ள சுழுமுனை நாடியில் சிவலிங்கம் உளது. அதை அறியவொட்டாது மறைத்து நிற்பது கிரந்திகளாகிய கதவு என்றறிக. அக்கதவைத் திறந்த

வன் பிறவித் தொடரிலிருந்து விடுபடுகின்றான். ஆதார சக்கரத்தின் மேலிடத்தில் சந்திர சூரியர்கள் நிலைத்துள்ளனர். அங்கேயே விஸ்வநாதன் நிலைத்து விளங்குகின்றான். அவனைத் தியானிப்பவன் பரம்பொருளாகின்றான். (32)

அ - கை :—ஆறு சக்கரங்களில் பிரம்மா முதலிய தேவதைகளை தியானிப்பதால் சுழுமுனைவழியாக அமுத மண்டலத்தை அடைகின்றான் எனக் கூறல்.

आधार पश्चिमे भागे मूर्तिस्तिष्ठति संज्ञया ।
षट् चक्राणि च निर्भिद्य ब्रह्मरन्ध्राद्बहिर्गतम् ॥ ३३ ॥
वामदक्षे निरुद्धन्ति प्रविशन्ति सुषुम्नया ।
ब्रह्मरन्ध्रे प्रविशन्ति ते यान्ति परमां गतिम् ॥ ३४ ॥

'ஆதார பஶ்சிமே பாகே மூர்திஸ்திஷ்டதி ஸம்ஜ்ஞயா
ஷட் சக்ராணிச நிர்பித்ய ப்ரஹ்மரந்த்ராத் பஹிர் கதம்
வாமதக்ஷே நிருத்தந்தி ப்ரவிஶந்தி ஸுஷும்னயா
ப்ரஹ்ம ரந்த்ரம் ப்ரவிஶந்தி தே யாந்தி பரமாம் கதிம்.'

பொ - ரை :—மூலாதார முதல் பிரம்மரந்திரம் வரை சுவாதிட்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை, ஸகஸ்ராரபதுமம், என ஆறு சக்கரங்கள் உள்ளன. அவற்றில் முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், ஸதாசிவன், சுத்தசிவம் என ஆறு தேவதைகளையும் முறையே தியானஞ்செய்தல் வேண்டும். இங்ஙனம் தியானிப்பதாலும், இடை பிங்கலைகளில் வெளியே செல்லுகின்ற காற்றைத் தடுத்துப் பிராணாயாமத்தால் சுழுமுனை வழியிற் செலுத்தி மூன்று முடிச்சுக்களை அறுத்து அமுதமண்டலத்தை அடைவதாலும், மேலான முக்தி நிலையை யோகிகள் அடைகின்றார்கள் என அறியவு. (34)

அ - கை :—பிராணன் முதலிய அகக்கரணங்களை சுழு முனை வழியாக பிரம்மரந்திரத்தினுள் ஒடுக்கியவன் முக்தனாகின்றான் எனக் கூறல்.

सुषुम्नायां यदा हंसः अध ऊर्ध्वं प्रधावति ।
सुषुम्नायां यदा प्राणं भ्रामयेद्यो निरन्तरम् ॥ ३५ ॥
सुषुम्नायां यदा प्राणः स्थिरो भवति धीमताम् ।
सुषुम्नायां प्रवेशेन चन्द्रसूर्यौ लयं गतौ ॥ ३६ ॥
तदा समरसं भावं यो जानाति स योगवित् ।
सुषुम्नायां यदा यस्य म्रियते मनसो रयः ॥ ३७ ॥

'ஸுஷும்னாயாம் யதாஹம்ஸஃ அத ஊர்த்வம் ப்ரதாவதி
ஸுஷும்னாயாம் யதா ப்ராணம் ப்ராமயேத்யோ நிரந்தரம்
ஸுஷும்னாயாம் யாதா ப்ராணஃ ஸ்திரோ பவதி தீமதாம்
ஸுஷும்னாயாம் ப்ரவேசேன சந்த்ரஸூர்யௌ லயம் கதௌ
ததா ஸமரஸம் பாவம் யோ ஜானாதி ஸ யோகவித்
ஸுஷும்னாயாம் யதா யஸ்ய ம்ரியதே மனஸோ ரயஃ'

போ - ரை :—ஜீவன் எப்பொழுதும் சுழுமுனை நாடியில் கீழும் மேலும் ஓடிக்கொண்டு இருக்கின்றான். அத்துடன் பிராணனையும் சுழுமுனை நாடியில் எந்த உபாசகன் இடையறாது செலுத்துகின்றானோ, புத்திமானாகிய அவனது பிராணன் அப்பொழுதே சுழுமுனை நாடியில் நிலைபெறுகின்றது. பிராணன் நிலைபெற்றவுடன் இடை பிங்கலைகளின் அதிதேவதைகளான சந்திர சூரியர்களும் சுழுமுனை நாடியில் ஒடுங்குகின்றார்கள். பிராணன் ஒடுங்கவே மனதும் வேகமற்றதாய்ச் சுழுமுனை நாடியில் ஒடுங்குகின்றது. அப்

பொழுதே அவ்வுபாசகன் கருவிகரணங்களின் ஐக்கிய நிலையைப் பெற்று யோகத்தின் உண்மையைக் கண்டவனாய் யாவற்றினும் ஊடுருவி நிற்கும் இன்பரசத்தை அனுபவிக்கின்றான் என்று அறியவும். (37)

இதுவுமது

सुषुम्नायां यदा योगी क्षणैकमपि तिष्ठति ।
सुषुम्नायां यदा योगी क्षणार्धं मधितिष्ठति ॥ ३८ ॥
सुषुम्नायां यदा योगी सुलग्नो लवणाम्बुवत् ।
सुषुम्नायां यदा योगी लीयते क्षीरनीरवत् ॥ ३९ ॥
भिद्यते हृदय ग्रन्थि श्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते परमाकाशे ते यान्ति परमां गतिम् ॥ ४० ॥

'ஸுஷும்னாயாம் யதா யோகீ க்ஷணைகமபி திஷ்டதி
ஸுஷும்னாயாம் யதா யோகீ க்ஷணார்த மதிதிஷ்டதி
ஸுஷும்னாயாம் யதா யோகீ லக்னோ லவணாம்புவத்
ஸுஷும்னாயாம் யதா யோகீ லீயதே க்ஷீரநீரவத்
பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ் சித்யந்தே ஸர்வஸம்ஸயாः
க்ஷீயந்தே பரமாகாஸே தே யாந்தி பரமாம் கதிம்.'

பொ - ரை:—யாதொரு உபாசகனாகிய யோகி முக்தி வழியாகிய சுழுமுனை நாடியில் பிராணனோடு மனதையும் ஒடுக்கிகணப்பொழுதாயினும், அல்லது அரைக்கணப்பொழுதாயினும் நிலைபெறுகின்றானோ, அவ்வுபாசகன் சுழுமுனை நாடியின் முடிவிலுள்ள அமுதமண்டலத்தில் நீரில் உப்புக் கட்டி கரைவதுபோல கரைந்து இன்பவடிவாகின்றான். அவன், பாலும் நீரும்போல் அமுதமண்டலத்தில் கலந்து ஏகவுருவாகின்றான். அவ்வுபாசகனுக்கே மும்மலக் கட்டுகள்

அறுபடுகின்றன. ஐயப்பாடுகளும் ஒழிகின்றன. அவனே பெருவெளியிற் கலந்து பேரின்ப வடிவனுகின்றான் என்று அறிக. (40)

அ - கை:—முக்தி வழியாகிய சுழுமுனை நாடியை அடைந்தவனது பெருமையைக் கூறல்.

गङ्गायां सागरे स्नात्वा नत्वा च मणिकर्णिकाम् ।
मध्यनाडी विचारस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ४१ ॥
श्रीशैल दर्शनान्मुक्तिर्वाराणस्यां मृतस्य च ।
केदारोदक पानेन मध्यनाडी प्रदर्शनात् ॥ ४२ ॥
अश्वमेध सहस्राणि वाजपेय शतानि च ।
सुषुम्ना ध्यान योगस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ४३ ॥

'கங்காயாம் ஸாகரே ஸ்நாத்வா நத்வாச மணிகர்ணிகாம்
மத்ய நாடீ விசாரஸ்ய கலாம் நார்ஹந்தி ஷோடஶீம்
ஸ்ரீஶைல தர்ஶநாந் முக்திர் வாராணஸ்யாம் ம்ருதஸ்ய ச
கேதாரோதக பாநேன மத்யநாடீ ப்ரதர்ஶநாத்
அஶ்வமேத ஸஹஸ்ராணி வாஜபேய ஶதானிச
ஸுஷும்நா த்யான யோகஸ்ய கலாம் நார்ஹந்தி
[ஷோடஶீம்.'

பொ - ரை:—கடலிலும் கங்கையிலும் மூழ்கி மணி கர்ணிகையை வணங்குவதால் உளதாம் பயன், நடுநாடியாகிய சுழுமுனையினது விசாரத்தின் புண்ணியத்தில் பதினாறில் ஒரு கலைக்கும் ஒப்புமையாகாதென்று அறிக. ஸ்ரீசைலத்தைக் காண்பதாலும், வாராணசியில், அதாவது காசியில் மரிப்பதாலும், கேதாரத்தில் தீர்த்தம் பருகுவதாலும், முக்தியுளதாமெனக் கூறப்பட்டுளது. அக்கூற்று

பொய்க்கூற்றன்று. எங்ஙனமெனின், அதனுண்மைப் பொருளிதுவாம். ஸ்ரீசைலமென்பது:-உடலில் சுழுமுனை நாடியின் முடிவிடமாயுள்ள த லை யு ச் சி என்பதையும். வாராணசி என்பது :—இடை பிங்கலை கூடுமிடமான புருவ நடுவிலுள்ள சுழுமுனை நாடி என்பதையும், கேதாரமென்பது :—சுழுமுனை நாடியின் முடிவிடமாயுள்ள அமுதமண்டல மென்பதையும், நன்றாய் அறிந்து கொள்க. ஆகையால் சுழுமுனை நாடியின் முடிவிடமாயுள்ள தலையுச்சி, புருவ நடு, அமுதமண்டலம், இவைகளைக் கண்டவனே, முக்தனாகின்றான் என்பதை அறியவும். ஆயிரம் அஸ்வமேத யாகம் செய்யினும், நூறு வாஜபேயம் செய்யினும், சுழுமுனை நாடி தியான பலத்தின் பதினாறில் ஒரு கூறிற்கு ஒப்பாகாதென்று அறியவும். (43)

இதுவுமது,

सुषुम्नायां यदा गोष्ठीं यः कश्चित् कुरुते नरः ।
स मुक्तः सर्व पापेभ्यो निश्रेयस मवाप्नुयात् ॥ ४४ ॥
सुषुम्नैव परं तीर्थं सुषुम्नैव परो जपः ।
सुषुम्नैव परं ध्यानं सुषुम्नैव परा गतिः ॥ ४५ ॥
अनेक यज्ञ दानानि व्रतानि नियमानि च ।
सुषुम्नाध्यान योगस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ४६ ॥

"ஸுஷும்னாயாம் யதாகோஷ்டீம் யஃ கஶ்சித் குருதே நரஃ
ஸ முக்தஃ ஸர்வ பாபேப்யோ நிஶ்ரேயஸ மவாப்னுயாத்
ஸுஷும்னைவ பரம் தீர்தம் ஸுஷும்னைவ பரோ ஜபஃ
ஸுஷும்னைவ பரம் த்யானம் ஸுஷும்னைவ பரா கதிஃ
அனேகயஜ்ஞ தானானி வ்ரதானி நியமானி ச
ஸுஷும்னா த்யான யோகஸ்ய கலாம் நார்ஹந்தி
ஷோடஶீம்."

பொ - ரை :—யாதொரு உபாசகன் சுழுமுனை நாடியின் சேர்க்கையைப் பெறுகின்றானோ, அவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கி ஒப்பு உயர்வற்ற முக்தியைப் பெறுகின்றான். சுழுமுனையே சிறந்த தீர்த்தம். சுழுமுனையே சிறந்த ஜெபம். சுழுமுனையே சிறந்த தியானம். சுழுமுனையே சிறந்த முக்தி. என்று அறியவும். மற்றும் அளவிறந்த யாகங்கள், தானங்கள், விரதங்கள், நியமங்கள், யாவும் சுழுமுனைத் தியான யோகபலத்தில் பதினாறில் ஒரு கூறையேனும் ஒவ்வாது. (46)

அ - கை :—சக்திக்கும் ஜீவனுக்குமுள்ள இடவேற்றுமையைக் கூறல்.

ब्रह्मरन्ध्रे महास्थाने वर्तते सततं शिवा ।
चिच्छक्तिः परमा देवी मध्यमे सुप्रतिष्ठिता ॥ ४७ ॥
मायाशक्तिर्ललाटाग्र भागे व्योमाम्बुजे तथा ।
नादरूपा परा शक्तिर्ललाटस्य तु मध्यमे ॥ ४८ ॥
भागे बिन्दुमयी शक्तिर्ललाटस्या परांशके ।
बिन्दुमध्ये च जीवात्मा सूक्ष्मरूपेण वर्तते ॥ ४९ ॥
हृदये स्थूलरूपेण मध्यमे न तु मध्यमे ॥ ५० ॥

'ப்ரஹ்மரந்த்ரே மஹாஸ்தானே வர்ததே ஸததம் ஶிவா
சிச்சக்தி: பரமா தேவீ மத்யமே ஸுப்ரதிஷ்டிதா
மாயாஶக்திர் லலாடாக்ர பாகே வ்யோமாம்புஜே ததா
நாத ரூபா பரா ஶக்திர் லலாடஸ்ய து மத்யமே
பாகே பிந்துமயீ ஶக்திர் லலாடஸ்யாபராம் ஶகே
பிந்து மத்யேச ஜீவாத்மா ஸூக்ஷ்ம ரூபேண வர்ததே
ஹ்ருதயே ஸ்தூல ரூபேண மத்யமே நது மத்யமே.'

போ - ரை :—பிரம்மரந்திரமாகிய பெருவெளியில் எப்பொழுதும் சுத்த சக்தி இருக்கின்றாள். பிரம்ம ரந்திரத்திற்கும் நெற்றிக்கும் நடுவில் சிறந்த சித் சக்தி இருக்கின்றாள். நெற்றியின் மேலிடத்திலும் இதய வெளியிலும் மாயா சக்தி இருக்கின்றாள். நெற்றியின் நடுவில் நாத வடிவ சிறந்த சக்தி இருக்கின்றாள். நெற்றியின் அடிப்பாகத்தில் பிந்து சக்தி இருக்கின்றாள். அந்த பிந்துவின் நடுவில் சூக்கும வடிவாய் ஜீவான்மா உளது. அந்த ஜீவான்மாவே இதய நடுவில் தூல வடிவாய் இருக்கின்றது என்று அறிக. (50)

அ - கை :—பிராணனுக்குட்பட்ட ஜீவன் இடையறாது ஹம்ஸ மந்திரத்தை ஜெபிக்கின்றான் எனக் கூறல்.

प्राणापान वशो जीवो ह्यधश्चोर्ध्वं प्रधावति ।
वामदक्षिण मार्गेण चञ्चलत्वान्न दृश्यते ॥ ५१ ॥
आक्षिप्तो भुजदण्डेन यथोच्चलति कन्तुकः ।
प्राणापान समाक्षिप्तस्तथा जीवो न विश्रमेत् ॥ ५२ ॥
अपानः कर्षति प्राणं प्राणोऽपानं च कर्षति ।
हकारेण बहिर्याति सकारेण विशेत्पुनः ॥ ५३ ॥
हंस हंसे त्यमुं मन्त्रं जीवो जपति सर्वदा ।
तद्विद्वानक्षरं नित्यं यो जानाति स योगवित् ॥ ५४ ॥

'ப்ராணாபான வஶோ ஜீவோ ஹ்யதஶ் சோர்த்வம் ப்ரதாவதி
வாமதக்ஷிண மார்கேண சஞ்சலத்வாந் ந த்ருஶ்யதே
ஆக்ஷிப்தோ புஜதண்டேன யதோச்சலதி கந்துகஃ
ப்ராணாபான ஸமாக்ஷிப்தஸ் ததா ஜீவோ ந விஶ்ரமேத்

*அபானஃ கர்ஷதி ப்ராணம் ப்ராணோபானஞ்ச கர்ஷதி*
*ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விசேத் புனஃ*
*ஹம்ஸ ஹம்ஸேத் யமும் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா*
*தத் வித்வானக்ஷரம் நித்யம் யோ ஜாநாதி ஸ யோகவித்.'*

போ - ரை :—பிராணாபானன்கட்கு உட்பட்ட ஜீவன் என்றும் கீழும், மேலும், ஓடுகின்றான். காற்று இடை பிங்கலை களின் வழியாகச் சென்று கொண்டிருப்பதால் சீவன் அறியப் படுவதில்லை. எங்ஙனம் கையால் அடிக்கப்பட்ட பந்தானது கீழும் மேலும் செல்லுகின்றதோ, அங்ஙனமே பிராணாபானன் களாகிய காற்றால் இழுக்கப்பட்ட ஜீவன் ஓய்வு பெறுவ தில்லை. பிராணனை அபானன் இழுக்கின்றது. அபானனை பிராணன் இழுக்கின்றது. இவற்றிற்குட்பட்ட ஜீவன் ஹ என்ற வொலியுடன் வெளிவருகின்றான். ஸ என்ற வொலி யுடன் உள் நுழைகின்றான். ஆகவே ஹம்ஸ, ஹம்ஸ, என்ற இம்மந்திரத்தை எப்பொழுதும் ஜீவன் ஜெபித்துக்கொண்டே இருக்கின்றான். என்று அறிக. ஆகையால் அறிஞன் பிராண னைச் சுழுமுனைவழியிற் செலுத்தி அழிவற்ற நித்யப் பொருளை அறிவானாக. அங்ஙனம் அறிந்தவன் ஜீவநிலையைக் கடந்து உண்மைப் பொருளிற் கலந்து இன்புறுகின்றான். (54)

அ - கை :—குண்டலி சக்தியின் பிறழ்ச்சியே பந்த முக்தியின் காரணம் எனக் கூறல்.

कन्दोर्ध्वे कुण्डली शक्तिर्मुक्तिरूपाऽथ योगिनाम् ।
बन्धाय च मूढानां यस्तां वेत्ति स योगवित् ॥ ५५ ॥

*'கந்தோர்த்வே குண்டலீ ஶக்திர் முக்திரூபாऽத யோகினாம்*
*பந்தாய ச மூடானாம் யஸ்தாம் வேத்தி ஸ யோகவித்.'*

போ - ரை:—மூலாதாரத்தில் குண்டலி சக்தி இருக்கின்றாள். அச்சக்தியை நாபிக் கடியிலுள்ள நரம்புக் கூட்டத்திற்கு மேல் ஏற்றப் பயிலவேண்டும். அங்ஙனம் ஏற்றிய உபாசகர்களுக்கு அவள் முக்தியைத் தருகின்றாள். அச்சக்தியை நாபிக்குமேல் ஏற்ற அறிந்தவன் எவனோ, அவனே யோகத்தின் உண்மையைக் கண்டவன் ஆகின்றான். அங்ஙனம் அப்பியசித்து அறியாத மூடர்களுக்கு பந்தமே உள்ளதாகின்றது. (55)

அ - கை:—பிரணவமே எல்லாவற்றிற்கும் இருப்பிடமெனக் கூறல்.

भूर्भुवःस्वरिमे लोकाश्चन्द्र सूर्याग्नि देवताः ।
यासु मात्रासु तिष्ठन्ति, तत्परं ज्योति रोमिति ॥ ५६ ॥
त्रयः कालास्त्रयो देवास्त्रयो लोकास्त्रयः स्वराः ।
त्रयो वेदाः स्थिता यत्र तत्परं ज्योति रोमिति ॥ ५७ ॥

'பூர்புவஃ ஸ்வரிமே லோகாஸ்சந்த்ர ஸூர்யாக்னி தேவதாஃ
யாஸு மாத்ராஸு திஷ்டந்தி தத்பரம் ஜ்யோதி ரோமிதி
த்ரயஃ காலாஸ் ஸ்த்ரயோ தேவாஸ் த்ரயோ லோகாஸ் த்ரயஃ ஸ்வராஃ
த்ரயோ வேதாஃ ஸ்திதா யத்ர தத்பரம் ஜ்யோதி ரோமிதி.'

போ - ரை:—யாதொரு அகார, உகார, மகார, வடிவ ஒலியில் முறையே, பூலோகம், மத்யலோகம், சொர்க்கலோகமாகிய மூன்று உலகங்களும், அக்கினி, சூரியன், சந்திரனாகிய மூன்று தேவதைகளும், பூஃ, புவஃ, ஸ்வஃ, என்ற மூன்று வியாகிருதிகளும் நிலைபெற்று விளங்குகின்றனவோ, அதுவே பேரொளிவடிவ பிரணவமென்று அறிக. மற்றும் எதனிடத்தில் சென்றது, நிகழ்வது, வருவது, எனப்படும் முக்காலங்

களும், பிரம்ம, விஷ்ணு, உருத்திரர்களாகிய மூன்று தேவர் களும், குறில், நெடில், அளபெடைகளாகிய மூன்று ஒலி களும், ருக்கு, எஜுஸு, சாமமாகிய மூன்று வேதங்களும் நிலை பெற்று விளங்குகின்றனவோ, அதுவே பெரொளி வடிவ பிரணவமென்று அறிக. (57)

அ - கை :—சித்த சலனத்தால் பந்தமும், சலனமின்மை யால் முக்தியும், உளதாமெனக் கூறல்.

चित्ते चलति संसारो निश्चलं मोक्ष उच्यते ।
तस्माच्चित्तं स्थिरीकुर्यात्प्रज्ञया परया विधे ॥ ५८ ॥
चित्तं कारण मर्थानां तस्मिन् सति जगत्त्रयम् ।
तस्मिन् क्षीणे जगत् क्षीणं तच्चिकित्स्यं प्रयत्नतः ॥ ५९ ॥

'சித்தே சலதி ஸம்ஸாரோ நிஸ்சலம் மோக்ஷ உச்யதே
தஸ்மாச்சித்தம் ஸ்திரீ குர்யாத் ப்ரஜ்ஞயா பரயா விதே
சித்தம் காரணமர்தானும் தஸ்மின் ஸதி ஜகத் த்ரயம்
தஸ்மின் க்ஷீணே ஜகத் க்ஷீணம் தச்சிகித்ஸ்யம் ப்ரயத்னதஃ'

பொ - ரை :—பிரம்மாவே! சித்தம் அசைந்தபொழுது பிறப்பு உளதாகிறது. சித்தம் அசையாது நிற்கின் அதுவே முக்தி எனப்படுகிறது. ஆகையால் சிறந்த அறிவின் வலிமை யால் சித்தத்தை அசையாது நிறுத்தப் பயில்வாயாக. சித்தமே பல்வேறு தோற்றத்திற்கும் மூலமாகின்றது. அச் சித்தம் உள்ளபொழுதே மூவுலகமும் காணப்படுகின்றன. அச்சித்தம் நைந்து ஒழியின் உலகமும் நைந்து கெடுகின்றது. ஆகையால் நன்முயற்சியோடு சித்தத்தின் அழிவிற்குள்ள உபாயத்தை நன்கு பயில்வாயாக. (59)

அ - கை :—சுத்த மனதைத் தனதான்ம வடிவென்றே பயில்வது பிரம்ம வழிபாடெனக் கூறல்.

मनोऽहं गगनाकारं मनोऽहं सर्वतोमुखम् ।
मनोऽहं सर्वमात्मा च न मनः केवलः परः ॥ ६० ॥
मनः कर्माणि जायन्ते मनो लिप्यति पातकैः ।
मनश्चेदुन्मनी भूयान्न पुण्यं न च पातकम् ॥ ६१ ॥

'மனோऽஹம் ககனாகாரம் மனோऽஹம் ஸர்வதோமுகம்
மனோऽஹம் ஸர்வமாத்மாச ந மனஃ கேவலஃ பரஃ
மனஃ கர்மாணி ஜாயந்தே மனோ லிப்யதி பாதகைஃ
மனஶ்சே துன்மனீ பூயாந் ந புண்யம் நச பாதகம்.'

பொ - ரை :—மேற்சொன்ன பல்வேறு பயிற்சியால் தமசு ரஜசுகளின் நீங்கியது சுத்தமனமாகின்றது. அந்த மனம் நானாகின்றேன். ஆகாய வெளிபோல் நிறைந்து எங்கும் முகமுள்ள மனம் நானாகின்றேன். எல்லோருடைய ஆன்மாவாய் நின்ற மனம் நானாகின்றேன். இந்த மனம் நேரே பரத்தில் கலப்பது அன்று. என்பது அறிக. மனதை முதன்மையாகக் கொண்டே தொழில்கள் தோன்றுகின்றன. அத்தொழிலினின்றும் உண்டான புண்ய பாபங்களால் அம்மனமே பற்றப்படுகிறது. ஆகையால் அம்மனதைத் தடுத்து மௌனத்தைப் பயில்வாயாயின் புண்ணிய பாவங்கள் தோன்றாது ஒழிகின்றன. (61)

இதுவுமது,

मनसा मन आलोक्य वृत्तिशून्यं यदा भवेत् ।
ततः परं परब्रह्म दृश्यते च सुदुर्लभम् ॥ ६२ ॥
मनसा मन आलोक्य मुक्तो भवति योगवित् ।
मनसा मन आलोक्य उन्मन्यन्तं सदा स्मरेत् ॥ ६३ ॥

'மனஸா மன ஆலோக்ய வ்ருத்தி ஶூன்யம் யதா பவேத்
ததஃ பரம் பரப்ரஹ்ம த்ருஶ்யதே ச ஸுதுர்லபம்
மனஸா மன ஆலோக்ய முக்தோ பவதி யோகவித்
மனஸா மன ஆலோக்ய உன்மன்யந்தம் ஸதா ஸ்மரேத்.'

பொ - ரை :—ஆகையால் முக்தி விருப்பமுள்ள புருடன் நன்மனதால் தீமனத்தை நன்கு ஆய்ந்து சிந்தனையற்றதாகச் செய்தல் தக்கது. அங்ஙனம் தீமனம் சிந்தனையற்ற நிலையைப் பெறுமாயின் அப்பொழுதே காண்டற் கரிதாய சிறந்த பரம் பொருள் உள்ளத்தில் அறியப்படுகின்றது. யோகப் பயிற்சி கற்றவன் நன்மனதால் தீமனத்தை ஆராய்ந்து, அடக்கி முக்தி எய்துகின்றான். ஆகையால் நன்முயற்சி உள்ளவன் தீமனத்தை நன்கு விசாரித்து மௌன நிலையைப் பெறும் வரையும், நன்மனத்தால் இடையறாது தியானஞ் செய்தல் தக்கது. (63)

இதுவுமது.

मनसा मन आलोक्य योगनिष्ठः सदा भवेत् ।
मनसा मन आलोक्य दशप्रत्यय दृश्यते ॥ ६४ ॥
यदा प्रत्यया दृश्यन्ते तदा योगीश्वरो भवेत् ।
बिन्दुनाद कलाज्योतिरबिन्दुर्ध्रुवतारकम् ॥ ६५ ॥
शान्तं च तदतीतं च परंब्रह्म तदुच्यते ॥ ६६ ॥

'மனஸா மன ஆலோக்ய யோகநிஷ்டஃ ஸதா பவேத்
மனஸா மன ஆலோக்ய தஶப்ரத்யய த்ருஶ்யதே
யதா ப்ரத்யயா த்ருஶ்யந்தே ததா யோகீஶ்வரோ பவேத்
பிந்து நாத கலாஜ்யோதி ரபிந்துர் த்ருவ தாரகம்
ஶாந்தஞ்ச ததீதஞ்ச பரம் ப்ரஹ்ம ததுச்யதே.'

போ - ரை:—யோக நிஷ்டையை விரும்பியவன் தீ மனத்தை நன்கு ஆய்ந்து அடக்கி நன்மனதால் எப்பொழுதும் யோகத்தைப் பயில்வானாக. இங்ஙனம் நன்மனதால் தீமனத்தை அடக்கி நின்ற யோகிக்கு பத்துவித அனுபவக் குறிகள் உளவாகின்றன. அப்பத்துவிதக் குறிகளை எப்பொழுது அறிந்தவனோ, அப்பொழுது யோகத்தில் தேர்ச்சி பெற்ற யோகீஸ்வரனாகின்றான். என்பது அறிக. அப்பத்துவிதக் குறியளாவன :— பிந்து, நாதம், கலை, ஒளி, அபிந்து, துருவம், தாரகம், சாந்தம், சாந்தியதீதம், பரப்பிரம்மம் என்பன. இவைகள் புருவ நடுவிலிருந்து பிரம்மரந்திரம் வரை முறையாகத் தோன்றுவன என்பது அறியவும். (66)

அ - கை:—சித்தமும் பிராணனும் ஒன்றை ஒன்று பிரியாது நிற்கும் இயல்பின எனக் கூறல்.

हसत्युल्लसति प्रीत्या क्रीडते मोदते तदा ।
तनोति जीवनं बुद्ध्या बिभेति सर्वतो भयात् ॥ ६७ ॥
रोधते बुद्ध्यते शोके मुह्यते नव संपदा ।
कम्पते शत्रुकार्येषु कामेन रमते हसन् ॥ ६८ ॥
स्मृत्या कामरतं चित्तं विजानीयात्कलेबरे ।
यत्र देशे वसेद्वायुश्चित्तं तद्वसते ध्रुवम् ॥ ६९ ॥
मनश्चन्द्रो रविर्वायुर्दृष्टिरग्नि रुदाहृतः ।
बिन्दुनादकला ब्रह्मन् विष्णु ब्रह्मेशदेवताः ॥ ७० ॥

* ஹஸத்யுல்லஸதி ப்ரீத்யா க்ரீடதே மோததே ததா
தநோதி ஜீவனம் புத்யா பிபேதி ஸர்வதோ பயாத்
ரோததே புத்யதே ஶோகே முஹ்யதே நவஸம்பதா
கம்பதே ஶத்ருகார்யேஷு காமேன ரமதே ஹஸன்

ஸ்ம்ருத்யா காமரதம் சித்தம் விஜானீயாத் களேபரே
யத்ர தேஶே வஸேத் வாயுஶ் சித்தம் தத்வஸதே த்ருவம்
மனஶ்சந்த்ரோ ரவிர் வாயுர் த்ருஷ்டி ரக்னி ருதாஹ்ருத:
பிந்து நாத கலா ப்ரஹ்மன் விஷ்ணு ப்ரஹ்மேஶ தேவதா:'

போ - ரை :—பிரம்மாவே! எங்கு சித்தமிருப்பதாமோ, அங்கு பிராணனும் நிச்சயமாய் இருக்குமென்று அறிக. பிராணனது உதவியின்றிச் சித்தம் எதையும் செய்யு மாற்ற லற்றதாம். ஆகையால் பிராணனது உதவியைப் பெற்றுச் சித்தமானது இவ்வுடலில் விழைவோடு சிரித்தல், மேலெழு தல், விளையாடுதல், சந்தோஷித்தல், முதலியவற்றைச் செய் கின்றது. புத்தியின் உதவியால் பிராணன் உயிருடன் வாழ் தலைச் செய்கின்றது. எல்லாப் பிராணிகளிடத்தும் அச்சத்தை அடைகின்றது. மற்றும் அழுதல், அறிதல், சோர்வடைதல், புதிதான செல்வப் பெருக்கால் மகிழ்தல், பகைவர்களின் செயல்களில் நடுங்குதல், விரும்பிய பொருளினடைவால் இன் புறுதல், சிரித்தல், நினைத்தல், காமத்தில் ரமித்தல், முதலிய வற்றைச் செய்கின்றது. இங்ஙனம் சித்தமானது பிராணனது உதவியால் உடலில் நிலைபெற்றுளது என்பது அறிக. மற்றும், மனது சந்திரனாகவும், பிராணன் சூரியனாகவும், திருட்டி அக்கினியாகவும், சொல்லப்பட்டுளது, மற்றும் மனமே பிந்து என்றும், பிராணனே நாதமென்றும், திருட்டியே கலை என் றும் அறிக. இவைகளின் தேவதைகள் முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்பது அறிவாயாக. (70)

அ-கை :—நாதப் பயிற்சியே மனதை ஒடுக்கும் உபாயம் எனக் கூறல்.

सदा नादानुसन्धानात् संक्षीणा वासना भवेत् ।
निरञ्जने विलीयेते मरुन्मनसि पद्मज ॥ ७१ ॥

यो वै नादः स वै बिन्दुस्तद्वै चित्तं प्रकीर्तितम् ।
नादो बिन्दुश्च चित्तं च त्रिभिरैक्यं प्रसाधयेत् ॥ ७२ ॥
मन एव हि बिन्दुश्च उत्पत्तिस्थिति कारणम् ।
मनसोत्पद्यते बिन्दुर्यथा क्षीरं घृतात्मकम् ॥ ७३ ॥

'ஸதா நாதானுஸந்தானாத் ஸம்க்ஷீணா வாஸனா பவேத்
நிரஞ்ஜனே விலீயேதே மருன்மனஸி பத்மஜ
யோ வை நாதஃ ஸ வை பிந்துஸ் தத்வை சித்தம்
ப்ரகீர்த்திதம்
நாதோ பிந்துஸ்ச சித்தஞ்ச த்ரிபிரைக்யம் ப்ரஸாதயேத்
மன ஏவ ஹி பிந்துஸ்ச உத்பத்தி ஸ்திதி காரணம்
மனஸோத்பத்யதே பிந்துர் யதா க்ஷீரம் க்ருதாத்மகம்.'

பொ - ரை :—பிரம்மாவே! எங்ஙனம் பாலினின்றும் வெண்ணெய் வெளிப்படுகின்றதோ, அங்ஙனமே மனதினின்றும் பிந்து வெளிப்படுகின்றது. ஆகையால் மனமே பிந்து என்பது அறியவும். அம்மனமே யாவுந் தோன்றி நிலைத்து ஒடுங்குங் காரணமாகின்றது. நாதம் யாதோ, அதுவே பிந்து எனவும், அப்பிந்துவே சித்தம் எனவும் சொல்லப்படுகின்றது. ஆகையால் நாதம், பிந்து, சித்தமாகிய மூன்றையும் ஒன்றாகவே கருதி நாதானு சந்தானத்தை எப்பொழுதும் பயில்வாயாக. இடையறாது நாதத்தைப் பயில்வதால் வாசனை ஒழிகின்றது. அவ்வாசனையின் ஒழிவால் பிராணனும் மனதும் குறியற்றதாய் நிறைவாயுள்ள பரம்பொருளில் ஒடுங்குகின்றன. (73)

அ - கை :—பிராணனோடு மனதைப் பொருத்தி யோகம் பயிலவேண்டும் எனக் கூறல்.

षट् चक्राणि परिज्ञात्वा प्रविशेत्सुखमण्डलम् ।
प्रविशेद्वायु माकृष्य तथैवोर्ध्वं नियोजयेत् ॥ ७४ ॥
वायुं बिन्दुं तथा चक्रं चित्तं चैव समभ्यसेत् ।
समाधिनैकेन सममम‍ृतं यान्ति योगिनः ॥ ७५ ॥

'ஷட் சக்ராணி பரிஜ்ஞாத்வா ப்ரவிஶேத் ஸுகமண்டலம்
ப்ரவிஶேத் வாயுமாக்ருஷ்ய ததைவோர்த்வம் நியோஜயேத்
வாயும் பிந்தும் ததா சக்ரம் சித்தம் சைவ ஸமப்யஸேத்
ஸமாதினைகேன ஸம மம்ருதம் யாந்தி யோகினஃ'

போ - ரை :—ஆறு சக்கரங்களையும் நன்கு அறிந்து, பிராணனைச் சுழுமுனை வழியாக இழுத்துச் செல்லவேண்டும். பிறகு சுழுமுனை வழியாகவே மேல் நோக்கிச் செலுத்தப் பயில்வாயாக. அச்சுழுமுனை வழியிலுள்ள சக்கரத்தை நன்கு அறிந்து சித்தத்தைப் பிந்துவோடும், பிராணனோடும் நன்கு ஐக்கியஞ்செய்து அப்யசிக்கவேண்டும். இவ்விதப் பயிற்சியால் பிராணனோடு மனஞ் சுழுமுனை வழியாக அமுதமண்டலத்தை அடைகின்றது. என்பது அறிக. யோகிகள் ஸமாதிப் பயிற்சியின் சமகாலத்தில் மரணமிலாப் பேரின்ப வீடாகிய அமிர்தத்தை அடைகின்றார்கள். (75)

அ - கை :—குரு உபதேசத்தின்படி பயின்றாலன்றி ஞானம் பெறல் அரிது எனக் கூறல்.

यथाऽग्निर्दारु मध्यस्थो नोत्तिष्ठेन्मथनं विना ।
विना चाभ्यास योगेन ज्ञानदीपस्तथा न हि ॥ ७६ ॥
घटमध्ये यथा दीपो बाह्ये नैव प्रकाशते ।
भिन्ने तस्मिन् घटे चैव दीपज्वालाऽवभासते ॥ ७७ ॥
स्वकायं घटमित्युक्तं यथा जीवो हि तत्पदम् ।
गुरुवाक्य समं भिन्ने ब्रह्मज्ञानं प्रकाशते ॥ ७८ ॥

कर्णधारं गुरुं प्राप्य तद्वाक्यं प्लववद्दृढम् ।
अभ्यास वासना शक्त्या तरन्ति भवसागरम् ॥ ७९ ॥

'யதாக்னி தாருமத்யஸ்தோ நோத்திஷ்டேத் மதனம் விநா
விநா சாப்யாஸ யோகேன ஞான தீபஸ் ததா நஹி
கடமத்யே யதா தீபோ பாஹ்யே நைவ ப்ரகாஶதே
பின்னே தஸ்மின் கடே சைவ தீபஜ்வாலாऽவபாஸதே
ஸ்வகாயம் கடமித் யுக்தம் யதா ஜீவோ ஹி தத்பதம்
குருவாக்ய ஸமம் பின்னே ப்ரஹ்மஜ்ஞானம் ப்ரகாஶதே
கர்ணதாரம் குரும் ப்ராப்ய தத்வாக்யம் ப்லவவத் த்ருடம்
அப்யாஸ வாஸனா ஶக்த்யா தரந்தி பவஸாகரம்.'

பொ-ரை:—எங்ஙனம் நெருப்பு கட்டையினுள் இருப்பதாயினும், கடைதலின்றி வெளிப்படுவதில்லையோ, அங்ஙனமே யோகப்பயிற்சி இன்றி ஞானமாகிய தீபம் வெளிப்படாதென்பது அறிக. எங்ஙனம் குடத்தினுள் இருக்கும் விளக்கு வெளியில் ஒளிருவதில்லையோ, அங்ஙனமே உடலாகிய குடத்தினுள் இருக்கும் ஜீவனாகிய ஞானவிளக்கும் வெளியிற் பிரகாசிப்பதில்லை. ஒருவனாற் குடம் உடைக்கப்பட்டபொழுது அதனுள்ளிருந்த விளக்கினொளி வெளிப்படுவதுபோல், குருவின் உபதேசத்தால் அஞ்ஞானமாகிய திரை நீங்கப்பெற்றதும் பிரமக்ஞானம் ஒளிருகின்றது. எங்ஙனம் படகோட்டியை நம்பி படகில் ஏறி அக்கரை செல்லுகின்றனரோ, அங்ஙனமே பிறவியாகிய கடலைக் கடத்தற்குக் குருவாகிய கப்பலோட்டியை நன்கு ஆதரித்து அவருடைய உபதேசத்தின்படி பயின்று உள்ளத்திற் றோன்றுவனவாய நல்லனுபவ ஆற்றலால் மக்கள் பிறவிக்கடலைக் கடப்பார்கள் என்பது அறிவாயாக. (79)

ஓம் சாந்திః சாந்திః சாந்திః

ஆறாவது அத்தியாயம் முடிந்தது.

யோகசிகோபநிஷத்து முற்றுப் பெற்றது.